# கல்கி




ALKI மார்ச் 7,1954 4 அண










# லைப்பாய் சோப்

தினசரித்தொல்லையான அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து உங்களைப் பாதுகாக்கிறது.




இந்தியாவில் தயாரித்தது.

L. 245-50 TM

# கல்கி



# பொருளடக்கம்

மலர் 13
இதழ் 32

1954 மார்ச் 7.

விஜய ௵
மாசி 24









# அவர்கள் செய்த சேவை!



மதுவிலக்கு விசாரணைக் கமிட்டியினர் ஆந்திர ராஜ்யத்தில் மதுவிலக்கை ரத்து செய்ய யோசனை தெரிவித்துள்ளனர்.

# நிலைமை மாறவில்லை!




திருவாங்கூர்—கொச்சி ராஜ்யத்தின் தேர்தல் முடிவுகள் தினப்பத்திரிகைகளில் வெளியாகி வருவதைப் பார்த்தால், தேர்தலுக்கு முன்னாலிருந்ததை விட நிலைமை மோசமாகிவிடும் என்று தோன்றுகிறது!




மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 32

# சுபிட்சப் போரும் அதிகச் செலவும்

பாரத நாடு இழந்த சுதந்திரத்தை மீண்டும் பெறுவதற்குத் தேசபக்தர்கள் ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் போராட வேண்டி யிருந்தது.

இந்த உண்மையை உன்னிப் பார்ப்போர்தான் இப்போது சுதந்திர இந்தியா நடத்தி வரும் மற்றொரு போராட்டத்தின் தன்மையை அறிந்து கொள்ள முடியும்.

சுதந்திரப் போராட்டத்தில் வெற்றி பெற்ற இந்தியா இப்போது தீவிரமான சுபிட்சப் போராட்டத்தை நடத்தி வருகிறது.

இந்தப் போராட்டம் ஆரம்பமாகி ஏழு வருஷங்களே ஆகின்றன.

இதை, ஒரு நாட்டின் வாழ்வில் மிகக் குறுகிய காலம் என்றே சொல்ல வேண்டும்.

இந்தக் குறுகிய காலத்துக்குள் பாரத நாடு சுபிட்சப் போரில், அதாவது பொருளாதாரத் துறையில் பிறநாட்டினர் வியக்கும் வண்ணம் முன்னேற்றம் அடைந்திருப்பதை யாரும் மறுக்க முடியாது.

எதிர்பாராத விதமாக எழுந்த அகதிகள் பிரச்னை, அதிக இராணுவச் செலவு, உணவுப் பஞ்ச மான்யம் போன்ற பெரும் செலவினங்களைச் சமாளித்துள்ள இந்தியா, அதே சமயம் தொழில் துறைகளிலும் வெகுவாக முன்னேற்றம் அடைந்திருக்கிறது.

சுபிட்சப் போராட்டத்தில் வெற்றி பெற ருஷ்யா பல ஐந்து வருஷத் திட்டங்களைக் கைக் கொள்ள வேண்டி யிருந்தது.

சுபிட்ச வாழ்வு பெறுவதற்காகப் பிரிட்டிஷ் மக்கள் பல வருஷங்கள் மகத்தான கைத்தொழில் புரட்சியை நடத்த வேண்டி யிருந்தது.

அப்படியிருக்க, முதல் ஐந்து ஆண்டுத் திட்டத்தின் கெடு முடிவதற்குள்ளாகவே பாரத நாட்டில் பல பெரும் தொழிற்சாலைகள் ஆரம்பமாகி யிருக்கின்றன; பல மின்சாரத் திட்டங்களும் அணைத் திட்டங்களும் கைக்கொள்ளப் பட்டிருக்கின்றன; தேச முன்னேற்றத்துக்கு இன்றியமையாத சாதனங்களின் உற்பத்தி பெருகி வருகிறது; விவசாயத்துக்குத் தகுதியான நிலப்பரப்பு நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது.

இதை யெல்லாம் மனதிற் கொண்டு பார்த்தால்தான், இந்திய சர்க்காரின் இந்த வருஷத்திய வரவு செலவுத் திட்டத்தை ஒட்டிப் பாரபட்சமற்ற முறையில் அபிப்பிராயம் கூறுவது சாத்தியமாக இருக்கும்.

* * * *

இந்திய சர்க்கார் நிதிமந்திரி ஸ்ரீ தேஷ்முக் சென்றவாரம் இந்தியா பார்லிமெண்டில் சமர்ப்பித்துள்ள வரவு செலவுத் திட்டத்தின்படி இந்திய சர்க்காரின் வருமானம் 441.03 கோடி ரூபாய்; செலவு 467.09 கோடி ரூபாய்; எனவே, வருமானத்தைக் காட்டிலும் செலவு 26.06 கோடி ரூபாய் அதிகம் என்று மதிப்பிடப் பட்டிருக்கிறது.

இப்போது நிதி மந்திரி விதித்துள்ள புதிய வரிகளின் மூலம் 11.85 கோடி ரூபாய் வருமானம் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

எனவே இது போக, துண்டு விழும் 14.21 கோடி ரூபாய்க்கு இந்திய சர்க்கார் எதிர் காலத்தில் வழி வகை செய்தாக வேண்டும்.

அதிகச் செலவைச் சமாளிப்பதற்காக நிதி மந்திரி தெரிவித்துள்ள புதிய வரிகள் ஏழை மக்களைப் பாதிப்பதாக இராதது குறிப்பிடத் தக்கது.

இந்திய சர்க்கார் உயர்ந்த ரக மில் துணிகளுக்குத் தீர்வையை உயர்த்தி யிருக்கிறார்கள்; சோப்புகளுக்கும், பாதரட்சைகளுக்கும் புதிய தீர்வை விதித்திருக்கிறார்கள்.

ஆனால் மேற்படி தீர்வைகளிலிருந்து கைத்தறித் துணிகளுக்கும், குடிசைத் தொழில் சோப்புகளுக்கும், ஜோடுகளுக்கும் விலக்கு அளித்திருப்பது பாராட்டத் தக்கது.

பதினாலு கோடி ரூபாய்க்கு மேல் துண்டு விழுவதிலிருந்து, இந்தியாவின் நிதி நிலைமை கவலை அளிப்பதாக இருக்கிறது என்று சொல்லுவதற் கில்லை.

இந்தியக் குடியரசு சர்க்காரின் மொத்த வருமானத்தில் மேற்படி தொகை மூப்பதில் ஒரு மடங்கு கூட இல்லை அல்லவா !

ஐந்து வருஷத் திட்டத்தின்படி இந்திய சர்க்கார் எத்தனை எத்தனையோ ஆக்க வேலைகளைக் கைக் கொண்டிருக்கிறார்கள்.

மக்களின் சுபிட்ச வாழ்வுக்கு அடிப்படையான, எதிர்கால க்ஷேமத்துக்கு இன்றியமையாத மேற்படி மூலதனச் செலவினங்களைக் கைக் கொண்ட பின்னரும், பதினைந்து கோடி ரூபாய் தான் துண்டு விழுகிறது என்பதுதான் ஆச்சரியப் படவேண்டிய காரியமாகும்.

நிதி மந்திரி ஸ்ரீ தேஷ்முக் கூறியிருப்பது போல், வரவு செலவைச் சரிக்கட்டுவதைக் காட்டிலும் மக்களின் நல் வாழ்வுக்கான திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வருவதுதான் அத்தியாவசியம்.

மேற்படி சித்தாந்தத்தை முக்கியமாகக் கொண்டு கவனிப்பவர்கள் இந்திய சர்க்காரின் இவ் வருஷத்திய வரவு செலவுத் திட்டத்தை ஆதரிக்கத் தயங்க மாட்டார்கள்.

# முற்போக்கான முதல் வருஷத் திட்டம்

ஆந்திர மாகாணப் பிரிவினைக்குப் பின் சென்னை சர்க்காரின் முதல் வருஷ நிர்வாகம் நல்ல அறிகுறிகளுடனேயே ஆரம்பமாகி யிருக்கிறது.

சென்ற வாரத்தில், சென்னை சர்க்கார் நிதி மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமணியம் அசெம்பிளியில் சமர்ப்பித்த 1954–55ம் வருஷத்திய வரவு செலவுத் திட்டமே, இதற்குச் சான்றாக அமைந்திருக்கிறது. ஆந்திர மாகாணம் ஏற்பட்ட பிறகு சென்னை சர்க்கார் சமர்ப்பிக்கும் முதல் வருஷ வரவு செலவுத் திட்டம் இது தான். மேற்படி திட்டத்தின் அம்சங்கள் எதிர் பார்த்ததைக் காட்டிலும் திருப்திகரமாக இருக்கின்றன.

சென்ற வருஷத்தில் மக்களின் மனம் குளிர, பூமி குளிரப் பருவ மழை பொழிந்ததன் காரணமாக உற்பத்தி பெருகி யிருக்கிறது. அதனால் பஞ்சக் கஷ்டம் தீர்ந்திருக்கிறது. ஏற்கெனவே, மக்களின் கஷ்ட நிவாரணத்துக்காகவும், நிலவரி வஜா காரணமாகவும் சர்க்கார் தங்கள் வருமானத்திலிருந்து பெரும் தொகையை இழக்க நேர்ந்தது. ஆனால் இவ் வருஷத்தில் அத்தகைய கஷ்ட நஷ்டங்களுக்கு இடமில்லை.

சென்னை நிதி மந்திரி சமர்ப்பித்த திட்டத்தின் படி சென்னை சர்க்காரின் வருமானம் 44 கோடியே 60 லட்சம் ரூபாய்; செலவு 45 கோடியே 18 லட்சம் ரூபாய் என்று மதிப்பிடப் பட்டிருக்கிறது.

எனவே, 58 லட்சம் ரூபாய் துண்டு விழுகிறது. இந்த அதிகச் செலவைச் சமாளிப்பதற்காகச் சில புதிய வரிகள் விதிக்க உத்தேசித்திருக்கிறார்கள். இந்த வரிகளிலும் ஒன்றாவது ஏழை மக்களைப் பாதிக்கக் கூடிய தல்ல என்பது மகிழ்ச்சிக்குரியது.

உதாரணமாக, ஐந்நூறு ரூபாய்க்கு மேல் நில வரி செலுத்துவோருக்கு உபரி வரி விதிக்கச் சர்க்கார் உத்தேசித்திருக்கிறார்கள். எனவே, அத் தொகைக்குக் கீழ் வரி செலுத்தும் விவசாயிகளைப் புதிய வரி பாதிக்காது. காப்பி, தேயிலை, ரப்பர் போன்ற பெரிய தோட்ட முதலாளிகளுக்கு விவசாய வருமான வரி விதிக்கப்படும்.

1947–ம் வருஷத்திலிருந்து புதிதாக ஏற்பட்ட நீர்ப்பாசனத் திட்டங்களின் மூலம் பலன் அடைந்தவர்களுக்கு அபிவிருத்தி வரி விதிக்க உத்தேசிக்கப் பட்டிருக்கிறது.

உயர்ந்த ரகமில் துணிகளுக்கு ரூபாய்க்கு ஒன்றே கால் அணு விகிதம் உபரி விற்பனை வரி விதிக்கவும் முன்வந்திருக்கிறார்கள். இதனால் கைத்தறித் துணிகளுக்கு ஓரளவு பாதுகாப்பு ஏற்படும். கைத்தறி ஜவுளிகளுக்கு ஆதரவு அளிக்கும் விஷயமாக இந்திய சர்க்கார் சென்னை கோரிய சில முறைகளைக் கைக் கொள்ளாததால், கைத்தறி ஜவுளிகளுக்கு விதிக்கப்பட்ட விற்பனை வரியைச் சென்னை சர்க்கார் ரத்து செய்யத் தீர்மானித்திருக்கிறார்கள்.

காய்கறிகள், பழங்கள், முட்டை முதலிய உணவுச் சாதனங்களுக்கு விதிக்கப்பட்டிருந்த விற்பனை வரியையும் சென்னை சர்க்கார் எடுத்து விட உத்தேசித்திருக்கிறார்கள்.

இவ்வாறாக, சென்னை சர்க்கார் வரவுச் செலவுத் திட்டத்தில் பாராட்டத் தக்க பல அம்சங்கள் இருப்பது குறிப்பிடத் தக்கது.

புதிய வரிகளின் மூலம் நாற்பது லட்சம் ரூபாய் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. எனவே, உண்மையில் பதினெட்டு லட்சம் ரூபாயே துண்டு விழுகிறது. நாற்பத்தைந்து கோடி ரூபாய் வருமானமுள்ள சர்க்காருக்குத் துண்டு விழும் மேற்படி சிறு தொகையைச் சமாளிப்பது கஷ்டமல்ல.

சர்க்கார் கைக் கொண்டுள்ள ஆக்கத் திட்டங்களில் ஒன்றிரண்டைக் கைவிட்டிருப்பார்களாயின் துண்டு விழும் தொகையைச் சமாளித்து, அதிக மிச்சத்தைக் காட்டியிருக்கலாம். ஆனால், அத்தகைய முறையைக் கைக் கொள்ளச் சென்னை சர்க்கார் விரும்ப வில்லை. ஆக்கத் திட்டங்களைக் கை விடாதிருந்தும் கூட, பதினெட்டு லட்சம் ரூபாயே துண்டு விழுந்திருப்பது சென்னை சர்க்காரின் திருப்திகரமான நிதி நிலைமையையே காட்டுகிறது.

# பாரத நாட்டுக்குப் புதிய சோதனை

சென்ற சில மாதங்களாகப் பகிரங்க இரகசியமாக இருந்து வந்த அமெரிக்கா—பாகிஸ்தான் இராணுவ ஒப்பந்த விவகாரம் இப்போது யாதொரு சந்தேகத்துக்கும் இடமின்றி அம்பலமாகி விட்டது. பல நாடுகளின் எதிர்ப்பையும் லட்சியம் செய்யாமல் பாகிஸ்தானுக்கு ஏராளமாகப் போர்த் தளவாடங்கள் அனுப்ப அமெரிக்கா தீர்மானித்து விட்டது. இந்த உண்மையை அமெரிக்க ஜனாதிபதி ஜெனரல் ஐசன்ஹோவரே திருவாய் மலர்ந்து கூறியுள்ளார்.

ஐசன்ஹோவர் நேருஜிக்கு எழுதியுள்ள கடிதத்தில், அமெரிக்கா கைக்கொண்டுள்ள மேற்படி முறை இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் உள்ள நட்பை எவ்விதத்திலும் பாதிக்காது என்று உறுதி கூறியிருக்கிறார். பாகிஸ்தானுக்கு அளிக்கப்படும் இராணுவத் தளவாட உதவியை அந்த நாடு துஷ்பிரயோகம் செய்யுமாயின், உடனே அத்தகைய ஆக்கிரமிப்பைத் தடுக்கத் தாம் சகல முறைகளையும் எடுத்துக் கொள்வதாக உத்தரவாதம் அளித்துள்ளார்.

# ஆசை பலிக்குமா ?




அரேபிய நாடுகளையும் தம் கட்சிக்கு இழுத்துக் கொள்ள முடியும் என்று பாகிஸ்தான் பிரதம மந்திரி முகம்மதலி எதிர்பார்க்கிறார்!

---

ஜெனரல் ஐசன் ஹோவரின் கடிதத்துக்குத் தாம் அளித்துள்ள பதிலை ஜவாஹர்லால்ஜி இந்தியா பார்லிமெண்டில் அறிவித்ததுடன், அவ்விஷயமாகத் தமது கருத்தைத் தெளிவாகவும் விவரமாகவும் குறிப்பிட்டார்.

அமெரிக்க—பாக் ஒப்பந்த ஏற்பாட்டின் விளைவாக இந்தியாவிலும் ஆசிய நாடுகளிலும் எழுந்துள்ள கவலையை, ஐசன்ஹோவரின் பதில் சிறிதும் அகற்றுவதாக இல்லை. அதற்கு மாறாக, அவரது பதில் அமெரிக்கா — பாக் ஒப்பந்த சம்பந்தமாக உண்டாயுள்ள மோசமான நிலைமையை உறுதிப்படுத்துவதாக இருக்கிறது.

தாங்கள் அளிக்கும் இராணுவ உதவியைப் பாகிஸ்தான் துஷ்பிரயோகம் செய்து ஆக்கிரமிப்பில் ஈடுபடுமாயின், அதைத் தடுப்பதற்கான முறைகளைத் தாம் கைக் கொள்வதாக ஜெனரல் ஐசன் ஹோவர் கூறுகிறார் அல்லவா! அவரது கூற்று அர்த்தமற்ற வெறும் வேடிக்கைப்பேச்சு என்பதை நேருஜி சுட்டிக் காட்டியுள்ளார்.

காஷ்மீர் மீது படையெடுத்து, அந்த நாட்டில் உள்ள பல பகுதிகளைப் பாகிஸ்தான் ஆக்கிரமித்துக் கொண்டு பல ஆண்டுகளாகி விட்டன. ஆனால் மேற்படி ஆக்கிரமிப்பைக் கண்டித்து அமெரிக்க சர்க்கார் இதுவரையில் ஒரு வார்த்தை கூடக் கூறியதில்லை. எதிர்காலத்தில் பாகிஸ்தான் ஆக்கிரமிப்பில் ஈடுபட்டால், "அது ஆக்கிரமிப்பு தானா!" என்பதை முடிவு செய்ய அமெரிக்காவுக்கு எத்தனை ஆண்டுகள் ஆகுமோ என்றும் நேருஜி கேட்டிருக்கிறார்.

எக்காரணம் கொண்டும் இந்தியாவும் பாகிஸ்தானும் போரில் ஈடுபடுவதில்லை என இரு நாடுகளும் பிரகடனம் செய்ய வேண்டும் என்று பல தடவைகளிலும் நேருஜி கோரினார். ஆனால், யுத்தத்தைத் தவிர்த்து இரு நாடுகளுக்கும் நிரந்தரமான சமாதானம் நிலவும்படி செய்வதற்கான அந்த யோசனையைப் பாகிஸ்தான் தலைவர்கள் நிராகரித்து விட்டனர். அவ்விதம் நிராகரித்த பாகிஸ்தான், இப்போது அமெரிக்காவிடம் இராணுவ ஒப்பந்தம் செய்து கொண்டிருப்பது அதன் நல்லெண்ணத்தைக் காட்டவில்லை என்பதை நேருஜி எடுத்துக் கூறியிருக்கிறார்.

இவ்வாறாக, அமெரிக்கா — பாகிஸ்தான் நாடுகளின் விபரீதமான போக்கினால் ஆசியாவிலேயே பெரும் நெருக்கடி ஏற்படும் என்றும் நேருஜி எச்சரித்திருக்கிறார்.

பாரதநாடு சுதந்திரம் பெற்ற பின் எத்தனையோ பயங்கரமான சோதனைகள் ஏற்பட்டன. அவற்றையெல்லாம் சுதந்திர இந்தியா சமாளிப்பதில் வெற்றி பெற்றது. இப்போது ஏற்பட்டுள்ள அமெரிக்க — பாக் இராணுவ ஒப்பந்தம் பாரத நாட்டுக்குப் புதிய சோதனையாக அமைந்திருக்கிறது. மேற்படி ஒப்பந்தத்தினால் எத்தகைய விளைவுகள் உண்டாகக் கூடும் என்பது பற்றி இப்போது எதுவும் கூறுவதற்கில்லை. எனினும், இது மகத்தான தேசியப் பிரச்னையாதலால், இவ்விஷயத்தில் கட்சி, கொள்கை பேதமின்றி எல்லோரும் ஏகோபித்து ஒற்றுமையுடன் நிற்க வேண்டும் என்று நேருஜி கேட்டுக் கொண்டிருப்பதை, சுதந்திர பாரதத்தின் எதிர்கால க்ஷேமத்தில் அக்கறை கொண்ட யாவரும், எவ்வித ஆட்சேபணையுமின்றி ஆதரிப்பார்கள் என்பதில் ஐயமில்லை.

# கைத்தறி போர்டாரின் நன் முயற்சி

ராஜாஜி சர்க்காரின் இடைவிடாத முயற்சியின் பயனாக, கைத்தறி நெசவாளர்களின் ஈனக்குரல் இன்று இந்தியா முழுவதும் வியாபித்திருக்கிறது. இந்திய சர்க்கார் முதல் சகலரும் கைத்தறி நெசவாளர் சமுதாயம் மறுபடியும் தலை தூக்குவதற்கான முறைகளைக் கைக்கொள்வதில் அக்கறை கொண்டிருக்கிறார்கள்.

மேற்படி நெசவுத் தொழில் நிபுணர்கள் உய்வதற்கு வழிகோல வேண்டும்; அவர்களுடைய தொழில் இனி எக்காலத்தும் மறையாமல் வளம் பெற்று விளங்க வகை செய்ய வேண்டும்; அதற்குற்றவாறு கைத்தறி நெசவுத் தொழிலை நிரந்தரமான அடிப்படையில் அமைக்க வேண்டும் என்பதில் இந்திய சர்க்காரும் அகில இந்திய கைத்தறி போர்டாரும் சிரத்தை கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய லட்சியம் நிறைவேறுவதற்குப் பொது ஜனங்களின் அனுதாபமும் பூரண ஒத்துழைப்பும் அத்தியாவசியமானவை. அவற்றைப் பெறுவதற்காக, மார்ச் மாதம் ஏழாம் தேதியிலிருந்து பதின்மூன்றாம் தேதி வரையில் "கைத்தறி வாரம்" கொண்டாட அகில இந்தியா கைத்தறிப் பாதுகாப்பு போர்டார் தீர்மானித்திருக்கிறார்கள். கைத்தறி வாரத்தை விமரிசையாகக் கொண்டாடச் சகல மாகாண சர்க்கார்களும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

கைத்தறி நெசவாளர் குலத்துக்கு ஆதரவு அளிக்கும் விஷயத்தில் பொது மக்களிடையே எவ்வித அபிப்பிராய பேதமும் இருப்பதற்கில்லை. ஒரு காலத்தில் உலக நாடுகள் பிரமிக்கும் விதத்திலே கைத்தறிக் கலையில் மகோன்னத ஸ்தானத்தை அடைந்திருந்த இந்தியக் கைத்தறி நெசவாளர்களின் இன்றைய பரிதாப நிலையைக் கண்டு கண்ணீர் வடிக்காதவர் இருக்க முடியாது. அன்னியர் ஆட்சியின் கீழ் அவர்கள் தொழிலுக்கு நேர்ந்த கதி, சுதந்திர இந்தியாவில் நேராமல் தடுக்கப் பொது மக்கள் மனமுவந்து முன் வருவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. எனவே, அகில இந்தியா கைத்தறிப் பாதுகாப்பு போர்டாரின் இந்த முயற்சி அமோக வெற்றி பெற்று, கைத்தறி நெசவாளர்களின் கஷ்டங்கள் நிரந்தரமாகத் தீருவதற்கான சூழ்நிலை உண்டாகும் என எதிர்பார்க்கிறோம்.

# தனியனாய் வந்தான்!

ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் கம்பருடைய கவிதைச் சிறப்பை அறிய ஒரே வழி கம்பருடைய பாடல்களை அநுபவிப்பதுதான் என்று கூறிப் பலப்பல பாடல்களை எடுத்துச் சொல்லுவார்கள். அவற்றில் ஒரு பாடல் பின்வருமாறு.

ராமனுக்கு மகுடாபிஷேகம் ஆக இருந்த அன்று காலை கைகேசி ராமனிடம், 'பரதன் பட்டம் எய்துவான். நீ பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செய்யவேண்டும் என்று தந்தை தசரதன் பணித்தனன்' என்றாள். அதை ராமன் முகமலர்ச்சியோடு ஏற்றுக் கைகேசிக்கு வணங்கினான். தந்தை இருந்த திசை நோக்கி வணங்கினான். அம்மாளிகையை விட்டுப் புறப்பட்டான்.

கோசலையின் மாளிகைக்கு ராமன் போனான். அவள் என்ன எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்! 'சக்கரவர்த்திக் கோலத்தில் ராமன் பரிவாரங்கள் புடைசூழ வருவான்; இரண்டு பக்கத்திலும் வெண்சாமரை வீசிக் கொண்டிருப்பார்கள்; வெண்கொற்றக் குடை மேலே பிடித்திருக்கும்; தலையில் கிரீடம் பளபளவென்று பிரகாசித்துக் கொண்டிருக்கும்!' இப்படியெல்லாம் பாவனை செய்து கொண்டிருந்த கோசலையின் கண்ணுக்கு என்ன தெரிகிறது!

குழைக்கின்ற கவரியின் றிக்
கொற்றவெண் குடையுமின் றி,
இழைக்கின்ற விதிமுன் செல் லத்
தருமம்பின் இரங்கிஏங் க
மழைக்குன்றம் அனையான்மௌ லி
கவித்தனன் வரும்என்றென் று
தழைக்கின்ற உள்ளத்(து) அன் னான்
முன், ஒரு தமியன்சென் றான்.

[கவரி: வெண்சாமரை; கொற்ற: ராஜரீகத்துக்குரிய; இழைக்கின்ற விதி: இப்படியெல்லாம் கொடுமை ஏற்படுவதற்குக் காரணமான விதி; மழைக்குன்றம்: மேகங் கவிந்த மலை; மௌலி கவித்தனன்: கிரீடத்தைச் சூடிக்கொண்டு; ஒரு தமியன்: பரிவாரம் யாதும் இன்றித் தன்னந் தனியனாக.]

இந்தப் பாடலைச் சொல்லுவதற்கு முன் டி. கே. சி. விதியின் தத்துவத்தை விளக்குவார்கள். 'தருமம்' என்பது என்ன என்பதையும் கூறுவார்கள். பிறகு பாடலைச் சொல்லுவார்கள். 'தமியன்' என்ற மோனையில் விழுந்துள்ள பாவத்தை வியக்கும்படி சொல்லுவார்கள். இனி அப்படியெல்லாம் யாரிடம் கேட்கப் போகிறோம் என்ற ஆற்றாமை உண்டாகிறது. ஆயினும் டி. கே. சி. பதிப்பித்துள்ள "கம்பர் தரும் ராமாயணம்" என்னும் நூல் வாயிலாக டி. கே. சி. யின் குரலை ஒருவாறு நாம் கேட்கலாம்

வெண்சாமரை வீசி, வெண்கொற்றக் குடையின் நிழலில் கிரீடம் அணிந்த ராமன் வருவான் என்று கோசலையின் மனத்தில் எழும் ராமனுடைய உருவெளித் தோற்றத்தையும், தன்னந் தனியனாய் வந்த ராமனையும், இதைக் கண்டு வியந்து நிற்கும் கோசலையையும் இவ்விதம் அட்டைச் சித்திரமாக அழகாகத் தீட்டியிருக்கிறார் நமது சித்திரக் கலைஞர் மணியம்!

★ ★ ★ பத்து ஆண்டுகளுக்கு முன்பு, 1943-மே மாதத்தில், ரஸிகமணியைப் பற்றி ராஜாஜி அன்பு கனிந்து எழுதிய பின்வரும் கட்டுரை இன்றைக்கு உள்ளம் உருக்குவதாக அமைந்திருக்கிறது. ★ ★ ★

# நானே அத்தாட்சி

**ராஜாஜி**

தமிழ் என்றால் என்ன, கவிதை என்றால் என்ன என்பதை எனக்கு ஓரளவு புகட்டிய ஆசிரியரிடத்தில் எனக்கு வரம்பற்ற அன்பும் பட்சபாதமும் இருக்கத்தான் செய்யும். ஆகையால் நான் அவருக்காகப் பரிந்து பேசினால் அதற்கு ஒரு வேளை மதிப்பு இராது.

ஆயினும் என் பேச்சல்ல—நானே ஒரு அத்தாட்சியாவேன், டி. கே. சி.யின் தமிழ்ப் பணிக்கும் பெருமைக்கும். பேச்சை விடப் பொருட்சான்றே வலியதாகும். என்னைப் போன்ற ஒருவனையும் கூடத் தமிழாசை கொள்ளச் செய்தவர் டி. கே. சி.தான். இதை இப்போது பலர் அறியச் சொல்லுகிறேன்; உபசாரமல்ல — உண்மை.

தமிழ்நாட்டில் தமிழ்ப் பணிக்கு நல்ல வீரச் சேனை சேருமாறு இக்காலத்தில் ஊக்கம் உண்டாக்கியவர் டி. கே. சி. என்றே சொல்லுவேன். பலர் பல அரிய பணிகள் செய்திருக்கிறார்கள்; செய்தும் வருகிறார்கள். ஆனால் டி. கே. சி. யின் தமிழ்ப் பணி ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. அதை வேறு யாரும் செய்ததில்லை. இதய தத்துவமும் கவிதையின் தனிப்பண்பும் அறிந்து பெரும்பணி செய்பவர் ரஸிகமணி டி. கே. சி.

மகனைப் பறி கொடுத்ததையும் உடல் நோயையும் ஆத்ம சக்தியைக் கொண்டு மறந்து துக்கங்களுக்கும் துன்பங்களுக்கும் இடையில் யோகியைப் போல் நின்று தமிழ்ப் பணி செய்து வருகிறார்.

கம்பர் எவ்விதக் குற்றமும் குறையுமில்லாமல் விளங்கும் தெய்வீக அறிவும் உணர்ச்சியும் சிருஷ்டியும் சக்தியும் கொண்ட ஒரு கவியாவார். ஆகையால் ரஸிகமணி எது அழகாகத் தோன்றவில்லையோ, எது பூரண ஒளியின்றி மங்கி விளங்குகின்றதோ அதை அவர் கம்பர் எழுத்தல்ல என்று நீக்கி விடுகிறார். அவசரத்தில் அல்ல; நிதானமாக ஆராய்ந்தே இவ்வாறு செய்யத் துணிகிறார். ஏட்டில் பக்தி வைக்காமல் தான் கண்ட கம்பரின் மேல் அபார பக்தி வைத்துப் பாட்டுக்களைத் திரட்டுகிறார். இது இஷ்ட தேவதை பூசனைக்கிரமம்.

பொருள் என்ற உயிருக்குச் சொற்கள் என்ற தாதுக்களைக் கொண்டு தகுந்த ஒரு உடலை யாத்து, உயிரும் உடலும் கூடி, உணர்ச்சியும் அழகும் பொருந்திய உருவத்தோடு நிற்பது கவிதை. இத்தகைய சிருஷ்டியை, நன்னூலார் கூறுகிறபடி— 'உணர்வினில் வல்லாரே' — மக்களுக்கு ஆக்கித் தர முடியும். உணர்வு என்றால் அறிவு மட்டுமல்ல; இதயத் துடிப்புகளும் கலந்த ஜீவ இயக்கம்.

கவிதை என்றால் என்ன என்பதை வெகு சிலரே உணர்வார்கள். தாம் உணர்ந்ததைப் பிறரும் உணருமாறு விளக்கும் ஆற்றல் படைத்தவர்கள் அதிலும் குறைந்தவர்கள். ஆற்றல் படைத்தவர்களாயினும் சொந்த துக்கங்களையும் நோய்களையும் கவனியாமல் பணி செய்பவர்கள் மிக மிகச் சிலர். அவர்களில் ரஸிகமணி டி. கே. சி. ஒருவர். அவருடைய பணியும் புகழும் குறைவின்றி ஓங்கி வளர வேண்டும்.



இலக்கிய நண்பர்கள்




அத்தியாயம் 77

## நெடுமரம் சாய்ந்தது!

ஆஸ்தான மண்டபத்துக்குள் அந்தப்புரப் பெண்கள் வருவதற்கென்று ஏற்பட்ட வாசல் வழியாக வந்தியத் தேவன் புகுந்தான். அதனால் அவன் முதலில் அங்கிருந்த பெண்மணிகளைப் பார்க்கும்படி நேர்ந்தது. அவர்களில் எல்லாருக்கும் பின்னால் ஒதுங்கி நின்ற பூங்குழலி ஏதோ சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்த போது, வந்தியத் தேவன் ஈரத் துணிகளுடன் அலங்கோலமாக உட்புகுந்ததைக் கண்டு திடுக்கிட்டாள். அவளைப் பார்த்தவுடனே தான் வந்தியத் தேவனும் மணிமேகலைக்கு நேர்ந்த விபத்தைப் பற்றிக் கூறினான். அது அவளுடைய காதில் விழுந்தது; அவள் அருகில் இருந்த இளைய பிராட்டி குந்தவை, வானதி இவர்கள் காதிலும் விழுந்தது. அவர்கள் மூவரும் வந்தியத்தேவன் புகுந்த வாசல் வழியாக விரைந்து சென்றார்கள். தண்ணீர் சொட்டியிருந்த அடையாளத்தைக் கொண்டே அவன் வந்த வழியைக் கண்டு பிடித்துக் கொண்டு சென்றார்கள்.

வந்தியத் தேவனுடைய வார்த்தைகள் அந்த மண்டபத்திலிருந்த மற்றவர்களின் காதில் தெளிவாக விழவில்லை. "காப்பாற்றுங்கள்!" என்ற வார்த்தை மாத்திரம் சிலர் காதில் கேட்டது. கந்தமாறன் - பார்த்திபேந்திரன் இவர்கள் காதில் அந்த வார்த்தைகூட விழவில்லை. ஏதோ உருத்தெரியாத அலறல் சத்தம் மட்டுமே அவர்களுக்குக் கேட்டது.

முதலில் அவ்விருவரும், அப்படி அந்தப்புர வழியில் புகுந்து வந்த உருவத்தை, இறந்துபோன வந்தியத்தேவனின் ஆவி வடிவமோ என்று நினைத்தார்கள். அகால மரண மடைந்தவர்களின் ஆவிகள் இந்த உலகை விட்டுப் போகாமல் இங்கேயே சுற்றி அலையும் என்ற நம்பிக்கை அக்காலத்தில் பலர் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. "வடவாறு திரும்பினாலும் திரும்பும்!" என்று முதன் மந்திரி அநிருத்தர் கூறி வாய் மூடுவதற்குள் வந்தியத் தேவன் சொட்ட நனைந்த ஈரத் துணிகளுடன் அங்கே வந்து தோன்றியதும், அவர்களுக்கு அத்தகைய பிரமை ஏற்படக் காரணமா யிருந்தது.

ஆனால் வந்தியத் தேவனைத் தொடர்ந்து வந்த சேவகர்கள் பரபரப்புடன் உள்ளே புகுந்து அவனைப் பற்றிக் கொண்டதும், மேற்கூறிய பிரமை நீங்கியது.

"சக்கரவர்த்தி! மன்னிக்க வேண்டும்! இந்தப் பைத்தியக்காரன் அரண்மனைப் படித்துறைக் கதவு வழியாகப் புகுந்து ஓடிவந்தான். நாங்கள் தடுத்தும் கேட்கவில்லை!" என்று அச்சேவகர்கள் சொல்லிவிட்டு, வந்தியத் தேவனைத் தங்களுடன் இழுத்துச் செல்ல முயன்றார்கள்.

அம்மம்மா! இந்த வந்தியத் தேவனுடைய உயிர்தான் எவ்வளவு கெட்டியானது? எப்பேர்ப்பட்ட ஆபத்திலிருந்தும் எப்படியோ தப்பித்து வந்து விடு

கிறானே?— இந்த வியப்பு பார்த்திபேந்திரன் உள்ளத்தில் எழுந்தது. அத்துடன் குரோதமும் கொழுந்து விட்டெரிந்தது.

எங்கே போகிறோம் என்பது தெரியாமல் அவன் ஓடிவந்து இங்கே சிக்கிக் கொண்டிருக்கிறான்! இனி ஒரு முறை அவன் தப்பித்துச் செல்வதற்கு இடந்தரலாகாது.-இவ்வாறு ஒரு கணத்தில் முடிவு செய்து கொண்ட பார்த்திபேந்திரன், சக்கரவர்த்தியின் சந்நிதானம் என்பதையும் மறந்து பாய்ந்து சென்று வந்தியத்தேவனுடைய தோள்களில் ஒன்றைப் பலமாகப் பற்றிக் கொண்டான்.

"இவன் பைத்தியக்காரன் அல்ல; கொலைகாரன்! ஆதித்த கரிகாலரைக் கொன்ற வஞ்சகத் துரோகி!" என்று கூவிக் கொண்டே, அவனைப் பிடித்து இழுக்க முயன்ற சேவகர்களை ஜாடையினால் அப்புறப்படுத்தினான்.

பார்த்திபேந்திரனைப் பின் தொடர்ந்து கந்தமாறனும் ஓடிச் சென்று வந்தியத்தேவனுடைய இன்னொரு தோளையும் இறுகப் பிடித்துக் கொண்டான்.

இருவருமாக அவனை இழுத்துக் கொண்டு வந்து சுந்தர சோழ சக்கரவர்த்தி அமர்ந்திருந்த தர்ம பீடத்துக்கு எதிரில் நிறுத்தினார்கள்.

சக்கரவர்த்தி வந்தியத்தேவனை ஏறிட்டுப் பார்த்துவிட்டு, "பால் வடியும் முகமுள்ள இந்தப் பிள்ளையா என் மகனைக் கொன்றதாகச் சொல்கிறீர்கள்? என்னால் நம்ப முடியவில்லையே? இவன்தானே ஆதித்த கரிகாலனிடமிருந்து எனக்கு ஓலை கொண்டு வந்தான்?" என்றார்.

"ஆம், ஐயா! இவன்தான் ஓலை கொண்டு வந்தான்! இவன்தான் தஞ்சைக் கோட்டைக்கு வெளியே மூடு பல்லக்கில் வந்த நந்தினி தேவியைச் சந்தித்து இரகசியம் பேசினான். இவனேதான் இக்கோட்டையிலிருந்து முன்னொரு தடவை தப்பி ஓடினான். இப்போதும் பாதாளச் சிறையிலிருந்து தப்பித்து ஓடினான்!" என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

"என் முதுகிலே குத்திக் காயப்படுத்திவிட்டுத் தப்பி ஓடியவன் இவன்தான்!" என்று சொன்னான் கந்தமாறன்.

முதன் மந்திரி அநிருத்தர், "ஏன், அப்பா! இவனைத்தானே நீ முதுகில் வேலெறிந்து கொன்றதாகச் சற்று முன் சொன்னாய்?" என்று கேட்டார்.

"ஆம்; சொன்னேன்! தாங்கள் இக்கொலைகாரனுக்கு ஒத்தாசை செய்து இவனை உயிர்ப்பித்துக் கொண்டு வந்து சேர்ப்பீர்கள் என்று நான் கண்டேனா?" என்றான் கந்தமாறன்.

பொன்னியின் செல்வர் இத்தனை நேரமும் செயலற்று நின்றார். வந்தியத்தேவன் மறுபடியும் தப்பி ஓடப் பார்த்து நதியில் குதித்திருக்கிறான் என்றும், நீச்சல் பயிற்சி போதிய அளவு பெறாதபடியால் திரும்பக் கரையேறி இப்படித் தெறிகெட்டு வந்து சபையில் புகுந்திருக்கிறான் என்றும் அவர் எண்ணிக் கொண்டார். இதனால் அவருக்கு வந்தியத்தேவன் மீது பிறந்த கோபம் தணிவதற்குச் சிறிது நேரம் ஆயிற்று.

கந்தமாறனுடைய கடைசி வார்த்தைகளைக் கேட்டதும், பொன்னியின் செல்வர் கம்பீரமாக நடந்து முன்னால் வந்து வந்தியத்தேவன் அருகில் நின்றார்.

"தந்தையே! இந்த வல்லத்து இளவரசர் என் உயிர்க்குயிரான நண்பர். இலங்கையிலும் நடுக் கடலிலும் எனக்கு நேர்ந்த அபாயங்களில் என்னைக் காப்பாற்றியவர். இவர் உயிர் பிழைத்து வந்தது பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன். இவர் மீது குற்றம் சுமத்துவது என் மீது குற்றம் சுமத்துவது போலாகும்!" என்றார்.

அவருடைய குரலில் தொனித்த அதிகார தோரணை எல்லாரையும் சிறிது நேரம் மௌனமாக இருக்கச் செய்தது.

பின்னர் முதன் மந்திரி அநிருத்தர், "பொன்னியின் செல்வ! சிறிது யோசித்துப் பாருங்கள்! இளம் சம்புவரையரின் வேலுக்கு இரையாகி மாண்டதாகச் சொல்லப் பட்டவர் எப்படியோ உயிரோடு வந்து குதித்திருக்கிறார். அவர் மீது குற்றம் என்னமோ ஏற்கெனவே சாட்டி விட்டார்கள். ஆகையால் விசாரித்து உண்மையைத் தெளிவாக்கி விடுவது நல்லதல்லவா?" என்றார்.

பார்த்திபேந்திரன், "ஆம், ஐயா! தாங்கள் நாளைச் சோழ சிங்காதனத்தில் ஏறப் போகிறவர்கள். எப்பேர்ப்பட்ட குற்றவாளியானாலும் தண்டிக்கவோ மன்னிக்கவோ தங்களுக்கு அதிகாரம் உண்டு. ஆனால் விசாரணையே வேண்டாம் என்று சொல்வது உசிதமா? வீண் சந்தேகங்களுக்கு இடம் தருமல்லவா?" என்றான்.

"அத்துடன் நம் இளங்கோ இன்னொரு விஷயத்தையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இளவரசர் தாம் சிங்காதனம் ஏறுவதற்காக இந்த வந்தியத்தேவனை அனுப்பித் தம் தமையனைக் கொல்லச் சதி செய்ததாக ஒரு வதந்தி பரவி வருகிறது.

அதற்கு இடந்தரக் கூடாது அல்லவா?'' என்றான் கந்தமாறன்.

இதைக் கேட்டு அங்கிருந்தோர் அனைவரும் பயங்கர மடைந்து நின்றார்கள். சம்புவரையர் மட்டும் முன் வந்து கந்தமாறனைக் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை அறைந்து, ''அடே மூடா! உன்னால் நமது பழமையான வம்சமே நிர்மூலம் ஆகி விடும் போலிருக்கிறதே! சமய சந்தர்ப்பம் தெரியாமல் உளறுவதில் உனக்கு நிகர் வேறு யாரும் இல்லை!'' என்று கோபமாகச் சொன்னார்.

கந்தமாறன் அவனுடைய தந்தையை வெறித்து நோக்கினான். அவனுடைய உதடுகள் துடித்தன. அடுத்த நிமிஷம் அவன் என்ன செய்திருப்பானோ, என்ன சொல்லியிருப்பானோ, தெரியாது! நல்லவேளையாக அச்சமயத்தில் பெரிய பழுவேட்டரையர் ஓர் அடி முன் வந்து சம்புவரையரைப் பிடித்துக் கொண்டார். தொண்டையை முன் போல் கனைத்துக் கொண்டு, ''சம்புவரையரே! உமது மகன் செய்த மூடத்தனமான காரியங்களுக்கெல்லாம் பிராயச்சித்தம் செய்து விட்டான்! சோழ சாம்ராஜ்யத்துக்கு ஒரு பெருந் தொண்டு செய்திருக்கிறான். அதைத் தெரிந்து கொள்ளும் போது தாங்களே அவனைப் பெற்றது குறித்துப் பெருமை அடைவீர்கள். கொஞ்சம் பொறுங்கள்! அவன் மீது சீற்றங் கொள்ள வேண்டாம்!'' என்று சொல்லிக்கொண்டே சம்புவரையரைப் பிடித்து இழுத்துச் சிறிது அப்பால் கொண்டு போய் நிறுத்தினார். பின்னர் இளஞ் சம்புவரையனைப் பார்த்து, ''நீ இந்த வந்தியத் தேவன் மீது வேல் எறிந்து கொன்றதாகச் சொன்னாய் அல்லவா? இவன்தான் அப்போது குதிரை மேல் நதியைக் கடந்தவன் என்று சொல்ல முடியுமா?'' என்று கேட்டார்.



முதன் மந்திரி, ''ஐயா! இது பற்றி என் சீடன் ஒரு வார்த்தை சொல்ல அநுமதிக்க வேண்டும்!'' என்றார்.

ஆழ்வார்க்கடியான் முன்னால் வந்து, ''பிரபுக்களே! என் குற்றத்தை நான் ஒப்புக் கொள்கிறேன். இந்த வல்லத்து இளவரசர் குதிரை மேலேறி ஓடவே இல்லை. இவர் நமது உண்மை மதுராந்தகத் தேவரைக் கொலைகாரனிடமிருந்து காப்பாற்றி விட்டுக் காயம் பட்டு விழுந்தார். இவரை நானே மூடு பல்லக்கில் ஏற்றிக் கோட்டைக்குள் கொண்டு வந்து சேர்த்தேன். நாலு நாளாக இங்கேதான் இவர் இருந்து வருகிறார். ஆகையால் இளஞ் சம்புவரையர் இவர் முதுகில் வேலெறிந்திருக்க முடியாது!'' என்றான்.

பெரிய பழுவேட்டரையர், ''நானும் அப்படித்தான் ஊகித்தேன். சம்புவரையரே! உமது மகனுடைய தவறுகளையெல்லாம் மன்னித்து விடுங்கள்! சோழ சாம்ராஜ்யத்துக்கு அவன் மகத்தான சேவை செய்திருக்கிறான்! அவன் வேலெறிந்து கொன்றவன் வீர பாண்டியனுடைய மகனாகவே இருக்க வேண்டும். அன்று மாலை முதல் பழைய மதுராந்தகனைக் காணவில்லையல்லவா? ஓடிப் போக முயன்றவன் அவனாகவே இருக்க வேண்டும்; கடவுள் எத்தனை பெரிய விபத்திலிருந்து இந்த இராஜ்யத்தைக் காப்பாற்றினார்!'' என்று கூறி நிறுத்தினார்.

இந்த வார்த்தைகளினால் ஏற்பட்ட வியப்பும் திகைப்பும் தீர்வதற்குள் அந்த முதுபெருங் கிழவர் மேலும் கூறினார்:—

"சக்கரவர்த்தி! அடியேனுடைய கடைசி வார்த்தைகளைச் சிறிது செவி கொடுத்துக் கேளுங்கள்! தூமகேது தன்னுடைய தீய காரியத்தைச் செய்துவிட்டு மறைந்து விட்டது. தங்கள் திருப் புதல்வர் ஆதித்த கரிகாலரும் மறைந்து விட்டார். ஆனாலும் தங்கள் குலத்து முன்னோர்களும் என் குலத்து முன்னோர்களும் இரத்தம் சிந்தி உயிரைக் கொடுத்து ஸ்தாபித்த சோழ சாம்ராஜ்யத்துக்கு நல்ல காலம் இருக்கிறது; இன்னும் நெடுநாள் இந்தச் சாம்ராஜ்யம் நிலைத்திருக்கப் போகிறது; விரிந்து பரவி மகோந்நத நிலையை அடையப் போகிறது. ஆகையினாலேயே, கதைகளிலே கூடக் கேட்டறியாத பெரிய விபத்திலிருந்து இந்தச் சோழ குலமும் சாம்ராஜ்யமும் தப்பியது. அவ்விதம் தப்புவதற்கு முக்கிய காரணமாயிருந்தவன், இந்த வாணர் குல வீரன் வந்தியத் தேவன்தான்! இவன் மூலமாகவே மோகத் திரையினால் மூடப்பட்டிருந்த என் கண்கள் திறந்தன. சம்புவரையர் மாளிகையில் நாங்கள் நள்ளிரவுக் கூட்டம் நடத்திய அன்று இவன் தற்செயலாக அங்கு வந்து சேர்ந்தான். அன்றைய தினம் இந்தச் சிறு பையனுக்குத் தெரியக் கூடாதென்று மூடி மறைந்து ஒரு காரியத்தை நாம் செய்ய வேண்டியிருக்கிறதே யென்ற அவமான உணர்ச்சி எனக்கு உண்டாயிற்று. பிறகு இவன் தஞ்சைக் கோட்டைக்கு வெளியே நந்தினியைச் சந்தித்துப் பேசியதாக என் சகோதரன் கூறினான். நந்தினியின் உதவியினாலேயே இவன் கோட்டையை விட்டுத் தப்பிச் சென்றதாகவும் கூறினான். அதிலிருந்து என் உள்ளத்தில் சந்தேகத்தின் முளை தோன்றி வளர்ந்து வந்தது. என்னைச் சுற்றிலும் நடப்பவற்றையும் அவற்றின் காரணங்களையும் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினேன். அடிக்கடி மாயை இருள் வந்து என் அறிவை மூடினாலும் மீண்டும் மீண்டும் உண்மை ஒளியின் கிரணங்கள் உட்புகுந்து இருளைப் போக்க முயன்றன. கடைசியில், துர்க்கா பரமேசுவரியின் கிருபையினால் மதுரை ஆபத்துதவிகளின் சதியாலோசனையைப் பற்றி அறிந்தேன். நானே மறைந்திருந்து அவர்களுடைய பேச்சுக்களைக் கேட்டிரா விட்



டால், நம்பியே இருக்க மாட்டேன். அதற்குப் பிறகும், தங்கள் செல்வக் குமாரி இளையபிராட்டி-என் உள்ளத்தை வேறு விதத்தில் குழப்பி விட்டார். நந்தினி அவருடைய சகோதரி என்றும், அவளுக்கு நான் இங்கு இழைக்கக்கூடாது என்றும் கூறினார். அவரும் ஒருவேளை ஏமாந்திருக்க முடியுமோ என்று ஐயுற்றேன். எனினும், மாறு வேடம் பூண்டு கடம்பூர் சென்று உண்மையை அறிய விரும்பினேன். காளாமுகச் சைவ வேடம் தரித்தேன். புலித்தோல் ஆடையும் மண்டை ஓட்டு மாலையும் அணிந்து சென்றேன். பிரபு! காளாமுகச் சைவர்கள் என்னை அவர்களுடைய தலைவனாகக் கொண்டிருந்தார்கள். என் அவமானத்தைக் கேளுங்கள். இந்தச் சோழ சாம்ராஜ்யத்துக்கு நானே சக்கரவர்த்தியாக வேண்டுமென்ற துரோகமான துராசையின் விதையை என் மனத்தில் நந்தினி விதைத்தாள். காளாமுகக் கூட்டத்தார் அந்தத் துராசைக்குத் தூபம் போட்டு வந்தார்கள். மதுராந்தகருக்குப் பட்டம் கட்டுவதுபோல் கட்டி விட்டுப் பிறகு அவரையும் துரத்தி விட்டு நானே சக்கரவர்த்தி யாகிவிட வேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள். அந்தக் காளாமுகர்களிலே ஒருவனை இடும்பன்காரி சம்புவரையர் அரண்மனையில் சேவகனாயிருந்தான். மதுரை ஆபத்துதவிகளுக்கும் அவன் ஒற்றனாக உதவி வந்தான். அவனைப் பயமுறுத்தி, அச்சமயம் கடம்பூர் அரண்மனையின் வேட்டை அறையில் மதுரை ஆபத்துதவிகள் இருப்பதை அறிந்தேன். ஆதித்த கரிகாலர் நந்தினியின் அறைக்குச் சென்றிருப்பதையும், மணிமேகலையும் வந்தியத்தேவனும் அங்கேயே ஒளிந்து கொண்டிருப்பதையும் அறிந்தேன். நந்தினிக்கும் கரிகாலருக்கும் நடக்கும் சம்பாஷணையை ஒட்டுக் கேட்டு அவர்களுடைய இரகசியத்தை அறியும் ஆசை என் உறுதியைக் குலைத்து விட்டது. நந்தினியைப் பற்றிய உண்மையையும் அறிந்து கொள்ளலாம் என்ற ஆசை எழுந்தது. நந்தினியின் அறைக்குப் போக யாழ்க் களஞ்சியத்தின் மூலம் ஓர் இரகசிய வழி இருக்கிறதென்பதை அறிந்து அங்கே போய்ச் சேர்ந்தேன். நல்ல சமயத்திலே தான் போய்ச் சேர்ந்தேன். நந்தினியைப் பற்றிய உண்மையை அவள் வாயாலேயே சொல்லக் கேட்டு அறிந்தேன். ஆதித்த கரிகாலர் நடத்தையில் களங்கமற்றவர் என்றும் தெரிந்துகொண்டேன். நந்தினியும் அவளைச் சேர்ந்தவர்களும் வீர பாண்டியனுடைய சாவைப் பழி வாங்குவதற்கு எவ்வளவு பயங்கரமான திட்டமிட்டிருக்கிறார்கள் என்பதையும் அறிந்து கொண்டேன். அந்தச் சதி வெற்றி பெறாமல் தடுக்க முயன்றேன். ஆனால் விதியை என்னால் வெல்ல முடியவில்லை. கரிகாலர் என் கண்முன்னாலேயே உயிரற்றுக் கீழே விழுந்ததைப் பார்க்கும் துர்ப்பாக்கியம் பெற்றேன்......"

இவ்விதம் கூறிவிட்டுப் பெரிய பழுவேட்டரையர் தம் முகத்தைக் கையால் மூடிக்கொண்டு விம்மினார். அந்த விம்மலின் ஒலி, புயல் அடிக்கும்போது அலைகடலில் எழும் பேரோசையை ஒத்திருந்தது. யாரும் அச்சமயம் வாய் திறந்து பேசத் துணியவில்லை. அனைவருடைய உள்ளமும் அந்த வீரப் பெருங் கிழவரின் மாபெரும் துயரத்தைக் கண்டு இளகிப் போயிருந்தன.

பெரிய பழுவேட்டரையர் மேலும் மேலும் பொங்கி வந்த விம்மலைத் தமது வைரம் பாய்ந்த இரும்பு நெஞ்சின் உதவியால் அடக்கிக் கொண்டார். முகத்திலிருந்து கையை எடுத்து விட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தார்.

"விதி வசத்தினால், ஆதித்த கரிகாலர் இறந்து விட்டார். ஆனால் துர்க்காபரமேசுவரியின் கருணையினால், அதே சமயத்தில் பேராபத்துக்குள்ளான பொன்னியின் செல்வர், விதியையும் மதியினால் வென்று உயிர் தப்பினார். பிரபு! சக்கரவர்த்தி! பிரம்மராயரே! என் அருமைத் தோழர்களான சிற்றரசர்களே! சோழ சிங்காதனத்தில் அருள்மொழி வர்மரை ஏற்றிவைத்து முடிசூட்டுங்கள்! அவர் மூலமாக இந்தச் சாம்ராஜ்யம் மகோந்நதத்தை அடையப் போகிறது!" என்றார்.

முதன் மந்திரி அநிருத்தர், "ஐயா! தங்கள் விருப்பம் நிறைவேறத்தான் போகிறது. பொன்னியின் செல்வர்தான் அதற்குத் தடையாயிருப்பார் என்று பயந்தோம். சோழநாட்டின் அதிர்ஷ்டத்தினால் அவரே முடிசூட்டிக் கொள்ள இசைந்து விட்டார்! ஆனால், ஆதித்த கரிகாலர் எப்படி இறந்தார் என்று தாங்கள் கூறவில்லையே?" என்றார்.

"அதைப் பற்றி ஏன் கேட்கிறீர்கள்? கொன்ற கை யார் கையாயிருந்தால் என்ன? உண்மையில் அவருடைய மரணம் விதியினால் நேர்ந்தது!" என்றார் அந்த வீரக் கிழவர் நடுங்கிய குரலில்.

"அது தெரியா விட்டால், இதோ குற்றம் சுமத்தப்பட்டு நிற்கும் வாலிபன் மீது ஏற்பட்டிருக்கும் சந்தேகம்நீங்காது. கரிகாலரின் மரணத்துக்காக இவனைத் தண்டிக்கும்படி நேரிடும்!" என்றார் முதன் மந்திரி அநிருத்தர்.

"ஆகா! இவன் மீது குற்றம் சுமத்துவதா? யார் சுமத்துகிறார்கள்?"

"கந்தமாறனும் பார்த்திபேந்திரனும் சுமத்துகிறார்கள்!"

"ஆகா! முழு மூடர்கள்! கந்தமாறா! பார்த்திபேந்திரா! நீங்கள் இந்த வாலிபன் மீது குற்றம் சுமத்தக் காரணம் என்ன? எதைக் கொண்டு இவன் ஆதித்த கரிகாலரைக் கொன்றதாகச் சொல்லுகிறீர்கள்?"

இதற்கும் அநிருத்தரே பதில் கூறினார்:—"இவன் அச்சமயம் நந்தினி தேவியின் அந்தப் புரத்தில் ஒளிந்து கொண்டிருந்திருக்கிறான். மணிமேகலையும் அங்கே இருந்திருக்கிறாள். மணிமேகலை தான் கொன்றதாகச் சொல்லுகிறாள். அவ்விதம் இருக்க முடியாது. அவள் காட்டிய கத்தியில் இரத்தக் கறையே இல்லை. வந்தியத் தேவனைக் காப்பாற்றுவதற்காகவே அவள் அவ்விதம் சொல்லியிருக்க வேண்டும் அல்லவா? வந்தியத் தேவன் மறைவிடத்திலிருந்து கரிகாலரைக் கொன்றதை அவள் பார்த்திருக்கலாம் அல்லவா?"

"மணிமேகலை கொல்லவில்லை என்றால், வந்தியத் தேவன் மட்டும் எப்படிக் கொன்றிருப்பான்? எந்த ஆயுதத்தைக் கொண்டு?"

"இந்த ஆயுதத்தைக் கொண்டு! இரத்தம் தோய்ந்து காய்ந்திருக்கும் இந்தக் கூரிய திருகுக் கத்தியைக் கொண்டு!" என்று கூறிப் பார்த்திபேந்திரன் நாம் முன்னமே பார்த்திருக்கும் திருகுக் கத்தியைக் காட்டினான்.

வந்தியத் தேவன் கரிகாலருடைய உடலைத் தீப்பிடித்த மாளிகையிலிருந்து எடுத்து வந்து போட்டு விட்டுத் தானும் மூர்ச்சையடைந்து விழுந்த போது, அவனிடமிருந்த திருகுக் கத்தியைப் பார்த்திபேந்திரன் எடுத்துப் பத்திரமாக வைத்திருந்தான். அதை இப்போது எடுத்துக் காட்டினான்.

பெரிய பழுவேட்டரையர் அவனை நோக்கி, "எங்கே, இப்படி அந்தக் கத்தியைக் கொடு!" என்று சொல்லி அதை வாங்கிக் கொண்டார்.

அதை நன்றாக உற்றுப் பார்த்து விட்டு "ஆகா! இது இடும்பன்காரியின் கத்திதான்!" என்று முணுமுணுத்தார்.

"கந்தமாறா! பார்த்திபேந்திரா! நீங்களும் நானும் இந்த வந்தியத் தேவனை மூன்று தரம் வலம் வந்து கும்பிட வேண்டும்! நந்தினியின் மோக வலையில் இந்தக் கிழவனைப் போலவே நீங்களும் விழுந்திருந்தீர்கள். ஆனால் இவன் ஒருவன்தான் அந்த மாய வலையில் சிக்கவில்லை. இவன் இந்தக் கத்தியை எறியவும் இல்லை; ஆதித்த கரிகாலரைக் கொல்லவும் இல்லை!"

"எதனால் அவ்வளவு நிச்சயமாகச் சொல்லுகிறீர்கள்?" என்று முதன் மந்திரி அநிருத்தர் கேட்டார்.

"ஆம்; நிச்சயமாகத்தான் சொல்லுகிறேன். இந்தக் கத்தியை எறிந்து கரிகாலரைக் கொன்றவன் எவன் என்பது எனக்கு நன்றாய்த் தெரியும்!"

"யார்? யார்?"

"ஆம், ஆம்! அதைச் சொல்லிவிட வேண்டியதுதான். சொல்லா விட்டால் உங்கள் சந்தேகம் தீராது. எல்லாரும் கேளுங்கள். இந்த வாலிபன் யாழ்க் களஞ்சியத்தில் ஒளிந்து கொண்டிருந்தான். நான் அதன் வழியாக இறங்கி வந்தேன். இவன் என்னைப் பார்த்துச் சத்தமிடக் கூடாது என்பதற்காகப் பின்னாலிருந்து இவன் கழுத்தைப் பிடித்து

நெருக்கினேன். இவன் விழி பிதுங்கி, உணர்விழந்து கீழே விழுந்து விட்டான். ஆதித்த கரிகாலரைக் கொன்றது யார் என்பது இவனுக்கு அச்சமயம் தெரிந்து கூட இருக்க முடியாது.''

''யார்! யார்! கொன்றது யார்?''

''இந்தத் திருகுக் கத்தியை நான்தான் இடும்பன்காரியிட மிருந்து வாங்கிக் கொண்டு வந்தேன். இதை வீசி எறிந்த வன் நானேதான்! இந்த என்னுடைய வலது கரந்தான்! சோழ சக்கரவர்த்தி களுக்கு முடி சூட்டிய பரம்பரையில் வந்த இந்தக் கரந்தான் கத்தியை எறிந் தது. ஆனால் இளவரசர் கரிகாலர் மீது எறியவில்லை. நந்தினியின் பேரில் எறிந் தேன். என்னை மோகவலையில் ஆழ்த்தித் துரோகப் படுகுழியில் வீழ்த்திய அந்த மாயப் பிசாசைக் கொன்றுவிட எண்ணி எறிந்தேன். அது குறி தவறிக் கரிகாலர் மீது விழுந்தது!......''

''ஐயையோ!'' ஆஹாஹா!'' என்ற குரல்கள் பல அச் சபையில் எழுந்தன.

''நூறு ஆண்டு காலமாகப் பழுவூர்க் குலம் சோழ குலத்துக்குச் செய்திருக்கும் தொண்டுகளுக் கெல்லாம் களங்கம் உண்டு பண்ணி விட்டேன். அந்தக் களங்கத்தை எப்படி நீக்கப் போகி றேனோ, தெரியவில்லை!''

''அண்ணா! இதோ அந்தக் களங் கத்தை நான் போக்குகிறேன்!'' என்று சின்னப் பழுவேட்டரையர் கர்ஜித்து விட்டுத் தமது கத்தியை உருவிக்கொண்டு அண்ணன் அருகில் விரைந்து வந்தார்.

''சோழ குலத்துக்குத் துரோகம் செய் கிறவர்கள் யாரா யிருந்தாலும் அவர் களைப் பழி வாங்குவதாக நீயும் நானும் சபதம் ஏற்றிருக்கிறோம். அந்தச் சப தத்தை இப்போது நானே நிறைவேற்று வேன். உன்னை இந்தக் கணமே கொன்று நம் குலத்துக்கு நேர்ந்த பழியைத் துடைப்பேன்!'' என்று சின்னப் பழு வேட்டரையர் கத்தியை ஓங்கினார்.

''வேண்டாம்! வேண்டாம்! இங்கே இரத்தம் சிந்த வேண்டாம்!'' என்றார் சுந்தர சோழச் சக்கரவர்த்தி.

இளவரசர் அருள்மொழி வர்மரும் முதன் மந்திரி அநிருத்தரும் பாய்ந்து சென்று சின்னப் பழுவேட்டரையரின் கைகளைப் பிடித்துக் கொண்டார்கள்.

அச்சமயத்தில் பெரிய பழுவேட்டரை யர் கூறினார் :—''தம்பி! நம் குலத்துக்கு என்னால் நேர்ந்த பழியைத் துடைக்கும் வேலையை உனக்கு வைக்க மாட்டேன். அத்துடன் 'தமையனைக் கொன்ற தம்பி' என்ற பழியை உனக்கும் ஏற்படுத்த மாட்டேன். இதோ துர்க்கா பரமேஸ் வரிக்கு என் சபதத்தை நிறைவேற்று வேன்!'' என்று கூறிக் கொண்டே தம் கையிலிருந்த சிறிய திருகுக் கத்தியைத் தமது மார்பை நோக்கி ஓங்கினார்.

முன்னொரு தடவை அவர் ஓங்கிய பெரிய வாளை மறுபடியும் உறையில் போட்டிருந்தபடியால், அவர் தமது பழைய உத்தேசத்தை விட்டு விட்டதாக மற்றவர்கள் எண்ணிக் கொண்டிருந் தார்கள். பார்த்திபேந்திரனிட மிருந்து வாங்கிக் கொண்டிருந்த திருகுக்கத்தியை அவர் உபயோகிப்பார் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை.

''ஐயோ! வேண்டாம்!'' என்று அருள்மொழி வர்மர் கூவிக் கொண்டு அவர் அருகில் பாய்ந்து வருவதற்குள் பெரிய பழுவேட்டரையர் தம் உத்தே சத்தை நிறைவேற்றி விட்டார்.

நெடுங்காலம் வேர் விட்டு நெடிது வளர்ந்திருந்த தேவதாரு மரம் வேருடன் பெயர்ந்து கப்பும் கிளையுமாகக் கீழே விழுவதுபோலத் தரையில் சாய்ந்தார்.

''ஹா ஹா!'' ''அடடா!'' ''அந்தோ!'' என்பவை போன்ற குரல்கள் அச்சபை யில் ஒலிக்கத் தொடங்கின.

விழுந்த பெரிய பழுவேட்டரையரை நோக்கிச் சிலர் ஓடி வந்தார்கள்.

அதே சமயத்தில் கண்களை மூடிக் கொண்டு சிங்காதனத்தில் சாய்ந்த சுந்தர சோழ சக்கரவர்த்தியை நோக்கி இன் னும் சிலர் ஓடினார்கள்.

மந்திராலோசனை சபை கலைந்தது.

* * *

அன்றிரவு பெரிய பழுவேட்டரை யர் மரணத்துடன் போராடிக் கொண் டிருந்தபோது பலர் வந்து அவரைப் பார்த்து விட்டுச் சென்றார்கள்.

சக்கரவர்த்தியும், அருள்மொழி வர்மரும், அநிருத்தரும், இளையபிராட்டி குந்தவையும் கூட வந்திருந்தார்கள்.

சோழ குலத்துக்கும் சாம்ராஜ்யத்துக் கும் பெரிய பழுவேட்டரையர் செய் திருக்கும் சேவைகளைப் பற்றிச் சக்கர வர்த்தியும் மற்றவர்களும் பாராட்டிப் பேசினார்கள். அவர் இளம் பிராயத்தில் எத்தனையோ போர்க்களங்களில் செய்த வீரச் செயல்களைப் பற்றிக் கூறினார்கள். தக்கோலத்தில் தோல்வி யடைந்து சிதறி ஓடிய சோழ சைன்யத்தை அவர் திரட்டி அமைத்துத் தோல்வியை வெற்றியாக மாற்றிய செயலை வியந்து பாராட்டி

ளூர்கள். சோழ நாட்டின் தனாதிகாரியாக இருந்து திறமையாக நிர்வாகம் நடத்தியதைப் புகழ்ந்தார்கள்.

சென்ற மூன்று வருஷத்துச் சம்பவங்களைப் பற்றி ஒரு வார்த்தையும் பேசாமலே விடைபெற்றுப் புறப்பட்டார்கள்.

பின்னர் அவர்கள் நால்வரும் பெரிய பழுவேட்டரையர் படுத்திருந்த அறைக்குள்ளேயே அவர் பார்க்க முடியாதஇடங்களில் மறைந்து நின்று கொண்டார்கள்.

அச்சமயம் சின்னப் பழுவேட்டரையர் ஆழ்வார்க்கடியானை அழைத்துக் கொண்டு வந்தார். பெரிய பழுவேட்டரையருக்கு எதிரில் கொண்டு வந்து அவனை உட்கார வைத்து விட்டுத் தாமும் அருகில் அமர்ந்தார்.

பார்வை விரைவாக மங்கி வந்த கண்களினால் பெரிய பழுவேட்டரையர் ஆழ்வார்க்கடியானைப் பார்த்து விட்டு, "ஆகா! இந்த வைஷ்ணவன் இங்கு எதற்காக வந்தான்? நான் வைகுண்டத்துக்குப் போக விரும்பவில்லை. தம்பி! சிவபதம் அடைய விரும்புகிறேன்!" என்றார்.

"ஐயா! நாளை உதயத்தில் வைகுண்ட ஏகாதசி புண்ணிய நாள்! தாங்கள் கைலாசத்துக்குப் போக விரும்பினாலும் வைகுண்டத்தின் வழியாகவே போக வேண்டும்!" என்றான் திருமலை.

"வேண்டாம்! வேண்டாம்! நீ உன் மகாவிஷ்ணுவிடம் திரும்பிச் சென்று..."

"ஐயா!நான் மகாவிஷ்ணுவின் தூதனாக இப்போது வரவில்லை. என் சகோதரியிடமிருந்து செய்தி கொண்டு வந்தேன்!"

"அது யார் உன் சகோதரி?"

"என்னுடன் பல நாள் வளர்ந்த சகோதரி—நந்தினியைச் சொல்லுகிறேன். ஐயா! நந்தினி தங்களுக்கு அவளுடைய நன்றியைத் தெரியப்படுத்தும்படி என்னை அனுப்பினாள். கரிகாலரைக் கொன்ற பழி அவள் பேரில் விழாதிருக்கும் பொருட்டுத் தாங்கள் அதை ஏற்றுக் கொண்டதற்காக நன்றி தெரிவிக்கச் சொன்னாள். எத்தனை ஜன்மம் எடுத்தாலும் தங்கள் அன்பை மறக்க முடியாது என்றும் தெரிவிக்கும்படி சொன்னாள்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"ஆகா! அவள் இன்னும் அப்படி நினைக்கிறாளா? நினைத்துக் கொண்டு சந்தோஷப் படட்டும். எவ்வளவுதான் அவள் வஞ்சகம் செய்து எனக்குத் தீங்கு புரிந்திருந்தாலும் அவளை என்னால் மறக்க முடியவில்லை. அவள்பேரில் கோபித்துக் கொள்ளவும் முடியவில்லை. தன் உயிரைக் கொடுத்துச் சக்கரவர்த்தியைக்

காப்பாற்றிய உத்தமியின் புதல்வி அல்லவா அவள்? உண்மையாகவே அடுத்த பிறவிகளிலும் அவள் என்னைத் தேடிக் கொண்டு வந்து விடுவாளோ, என்னமோ?'' என்றார் பழுவேட்டரையர்.

ஏற்கெனவே மரணத்தின் சாயை படர்ந்திருந்த அவருடைய முகத்தில் இப்போது இலேசான புன்னகை தோன்றியது.

''வைஷ்ணவனே! யாரிடமாவது ஒருவரிடம் என் உண்மையைச் சொல்ல வேண்டும். உன்னிடமே சொல்கிறேன். நான் எறிந்த கத்தி இளவரசர் பேரில் விழவில்லை. அதற்கு முன்பே அவர் விழுந்து விட்டார். நானே இளவரசரைக் கொன்றதாக ஒப்புக் கொண்டதற்குக் காரணம் நந்தினியின் பேரில் பழி விழாமல் தடுப்பதற்காக மட்டுமல்ல; அதைவிட நூறு மடங்கு முக்கியமான காரணம் உண்டு. அருகில் வா! சொல்லுகிறேன்! உன் சிநேகிதன் வந்தியத்தேவன் இருக்கிறானே, அவன் அருமையான பிள்ளை! அவனுக்குச் சோழ குலம் ரொம்பக் கடமைப் பட்டிருக்கிறது. இளைய பிராட்டியின் உள்ளத்தை அவன் கவர்ந்து விட்டான். இளையபிராட்டியிடம் நான் அநாவசியமாகக் குரோதம் பாராட்டினேன். அதற்கெல்லாம் பரிகாரமாகக் குற்றத்தை நான் ஒப்புக் கொண்டேன். நான் அப்படிப் பகிரங்கமாக ஒப்புக் கொண்டு என்னையும் பலி கொடுத்திரா விட்டால், வந்தியத்தேவன் பேரில் யாராவது களங்கம் கற்பித்துக் கொண்டே இருப்பார்கள். இனி ஒருவரும் அவ்வாறு பேசத் துணிய மாட்டார்கள். வைஷ்ணவனே! என்றாவது ஒரு நாள் இளையபிராட்டியிடம் இதை நான் கூறியதாகச் சொல்லு! நந்தினியின் பேச்சைக் கேட்டு அவரை நான் துவேஷித்ததற்காக என்னைத் தயை கூர்ந்து மன்னிக்கும்படி சொல்லு!''

நெடுநேரம் பேசியதால் அந்தத் தீரக் கிழவருக்கு மூச்சு வாங்கத் தொடங்கியது. அவர் கூறியதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த ஆழ்வார்க்கடியானின் உள்ளமே உருகி விட்டது என்றால், பின்னால் மறைவிடத்தில் நின்று கேட்டுக் கொண்டிருந்த குந்தவை தேவியின் கண்ணிலிருந்து கண்ணீர் கலகலவென்று பொழிந்ததில் வியப்பில்லை அல்லவா?

''வைஷ்ணவனே! இன்னும் ஒரு விஷயம் முதன் மந்திரி பிரம்மராயரிடம் சொல்லு! இலங்கையிலிருந்து பாண்டியன் கிரீடத்தையும் இந்திர ஹாரத்தையும் எப்படியாவது கொண்டு வர வேண்டும். அதற்குத் தகுந்தவன் வல்லத்து இளவரசன்தான்! அவனும் நீயும் போய்க் கொண்டு வாருங்கள். பிறகு மதுரைக்குச் சென்று அங்கே ஒரு தடவை பொன்னியின் செல்வருக்கு மகுடாபிஷேகம் நடத்த வேண்டும். தெரிகிறதா? அருள்மொழியிடம் எனக்காக ஒன்று வேண்டிக் கொள்! என்பேரில் ஏற்படும் பழியை என் சகோதரன் மீது சுமத்த வேண்டாம்! அவனைப் போல் சோழ குலத்துக்கு உற்ற துணைவன் வேறு யாரும் இல்லை என்று சொல்லு! தேவி! துர்க்கா பரமேசுவரி! என் சபதத்தை நிறைவேற்றி விட்டேன்! இதோ வருகிறேன்! சோழ குலத்தைக் காப்பாற்று!''

வரவர மெலிந்து கொண்டு வந்த பெரிய பழுவேட்டரையரின் குரல் அடியோடு மங்கி நின்றது. அந்தத் தீரப் பெருங் கிழவரின் உயிர்ச் சுடரும் அணைந்தது.

## அறிவுக் களஞ்சியத்தை இழந்தோம்!

தமிழுக்கு டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் அருமையான சேவை செய்தார்கள். பெருந்தன்மை என்பது டி. கே. சி. அவர்களிடம் குடி கொண்டிருந்தது. தமிழ்க் குலத்தின் பண்பாட்டிற்கு ஓர் எடுத்துக்காட்டு வேண்டுமானால் டி. கே. சி. என்று ஒருதலையாகக் கூறலாம். விருந்தளித்தல் என்பது அவர்களிடம் ஒரு கலையாக விளங்கிற்று. குற்றாலத்தில் அவர்களைக் காண நற்றமிழ் அறிஞர்கள் வருவார்கள்; பெருஞ் செல்வர்கள் வருவார்கள்; மந்திரிகள் – அதிகாரிகள் வருவார்கள்; பிற நாட்டு நல்லறிஞர்களும் வருவார்கள். இவர்கள் எல்லோரையும் நல்விருந்தாலும் சொல் விருந்தாலும் மகிழ்விக்கும் சிறப்பு டி. கே. சி. அவர்களிடம் நிகரற்ற முறையில் அமைந்திருந்தது. குற்றாலத்தின் பெருமையை யெல்லாம் தன் பெருமையாக்கிக் கொண்ட ரஸிகமணி அவர்கள் இன்று நம்மை விட்டுப் போய் விட்டார்கள். அவர்களோடு நெருங்கிப் பழகிய இலக்கிய நண்பர்களுக்கு இப்போது குற்றாலம் ஆவியகன்ற கூடு போலவே தோன்றும். மலை யிருந்தென்ன, மந்தமாருதம் இருந்தென்ன, அருவிதான் இருந்தென்ன! அறிவுக் களஞ்சியத்தை இழந்து விட்டோம். அருமையாகத் தமிழின் பெருமையை உணர்த்தும் அறிஞரை இழந்து விட்டோம். பண்பாட்டின் நிலையமாகிய பெரியாரை இழந்து விட்டோம். டி. கே. சி. அவர்கள் நம் கண்ணுக்கு மறைந்தாலும் கருத்திற்கு ஒருநாளும் மறையார்.—*ரா. பி. சேதுப் பிள்ளை – (வானொலிப் பேச்சு)*


KAMINIA
OIL
KAMINIA
PERFUMERY Co
BOMBAY
காமினியா
ரிஜிஸ்டர்ட் ஆயில் ரிஜிஸ்டர்ட்
காமினியா ஆயிலின் (ரிஜிஸ்டர்ட்) ஜீவசக்தியுள்ள சரக்குகள், இந்த பிரசித்தி பெற்ற ஹேர் ஆயிலை மற்றெல்லா ஹேர் ஆயில்களினின்றும் மாறுபட்டு விளங்கச் செய்கிறது. கேசத்தை வளப்படுத்துவதற்கு அவசியமானவற்றைத் தவிர வேறொன்றுமே இல்லை. இந்த பாட்டிலில் பூராவும் காமினியா ஆயில்தான். வேறொன்றும் இத்துடன் கலக்கப்படுவதில்லை. இதில் அடங்கியுள்ள தைலம் பூராவும் உபயோககரமாக செலவழிக்கப் படுகிறது. எனவே, நீங்கள் காமினியா ஆயில் (ரிஜிஸ்டர்ட்) வாங்குவதானால் உங்கள் பணத்திற்கான முழு மதிப்பையும் பெறுகிறீர்கள்.
சாம்பிள் பெற தபால் செலவிற்கு அணு 4 ஸ்டாம்பு அனுப்பவும்.
ஆங்கிலோ இந்தியன் டிரக் & கெமிகல் கோ.
பம்பாய்-2

# ஹாஸ்ய மணி டி.கே.சி.

இரண்டு பேர் சேர்ந்து பாடுதல், இரண்டு பேர் சேர்ந்து பேசுவது போல் ஆகும்..

கன்றின் காலக் கேட்டு....
கன்றின் காலக் கேட்டு....

பெரியோர்களே! தாய்மார்களே!..
பெரியோர்களே! தாய்மார் களே!..

## நன் கொடைச் சம்பவம்!

டம், டீம், டுஸ் புஸ், டுஸ் டாம் டீம்...

ஒரு வண்மணி ஏராளமான பொருளை ஒரு கலாசாலைக்கு நன்கொடையாகக் கொடுத்தாள். அம்மாதாசியின் தாராளத்தை, மேடையில் அநேகர் இங்கிலீஷில் பாராட்டிப் பேசினார்கள். டி.கே.சி. மேடை சென்று "அம்மா! உங்களைப் பாராட்டியது, உங்களுக்கு ஒன்றும் புரிந்திருக்காது... இனிமேல் நீங்கள், தமிழில் பாராட்டிப் பேசும் ஸ்தாபனங்களுக்கு நன்கொடை கொடுங்கள்" என்றார்.

## ஒரே தோற்றம்




மார்க்-டுவெயின்: அது நீங்கள் சொன்ன ஹாஸ்யமா நான் சொன்னதா?

டிகேசி: அது இருக்கட்டும் இது நீங்களா இல்லாவிட்டால் நானா?

வையவர்கள்: எங்கள் கூட்டத்தில் நீங்கள் வந்து பேசவேணும் அழைப்பதற்குத்தான் வந்தோம்.........

டி.கே.சி: நீங்கள் தான் கூட்டமாக வந்திருக்கிறீர்களே! இங்கேயே பேசிவிடுகிறேனே.



# எந்த நாள் காண்போம்?

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

ரசிகமணி! எவ்வளவு பொருத்தமான பெயர். இப்பெயருக்கு மிக மிகத் தகுதியுடையவர் அவர். கலையை — சிறப்பாகக் கவிதையை ரசித்து அனுபவிப்பதையே தம் வாழ்க்கைப் பண்பாகவும் பயனாகவும் அவர் கொண்டிருந்தார்.

அவர் கவிதையை அநுபவிக்கின்ற முறையே தனி; ரசிக்கின்ற பாணியே வேறு. பாட்டைப் பாடுவார்; பன்முறை பாடுவார்; பாடிப் பாடி அதன் ஓசையின்பத்தில் உள்ளத்தைப் பறிகொடுப்பார். பொருளாழத்தில் அமிழ்வார். கற்பனை நயத்தில் கலந்து நிற்பார். ஒவ்வொரு கவிதையும் ஒவ்வொரு நாடகமாகக் காட்சியளிக்கும் அவருக்கு.



ரசிகமணியும் - கவிமணியும்

கம்ப ராமாயணத்தை இன்று தமிழுலகம் அறிவதற்கும் மதிப்பதற்கும் படிப்பதற்கும் காரணமாயிருந்தவர் நம் ரசிகமணி அவர்களே. ஷேக்ஸ்பியர் கவிதைத் தரத்தை விடக் கம்பன் கவிதை ஒரு சிறிதும் தாழ்வில்லாதது என்று சொன்னாற்போதாது, அதனினும் மேம்பட்டதுமாகும் என்று ஆங்கிலம் கற்ற புலவர்களிடையே அஞ்சாமல் எடுத்துக் கூறின ஆண்மையாளர் அவர். அந்தக் கருத்தை எழுத்துக்களின் மூலமும் சொற்பொழிவுகளின் மூலமும் ஓயாமல் எடுத்து விளக்கி நிலைநாட்டிக் கம்பர் கவிதைக்கு ஏற்றம் தந்த பெருமை நம் ரசிகமணி யவர்களையே சாரும். தமது இடையறாத உழைப்பினால் எத்தனையோ ஆங்கிலம் கற்ற கம்ப ராமாயணப் புலவர்களைத் தமிழ் நாட்டில் தோற்றுவித்து விட்டார்கள். எத்தகைய எதிர்ப்புகள் தோன்றினும் மங்காத ஒளியுடன் கம்பர் கவிதையைத் தமிழ் நாட்டில் நிலைக்க வைக்கும் ஒரு புலவர் பரம்பரை இன்று எழுந்துவிட்டது. இது அவர் செய்த ஒப்பற்ற தமிழ்த் தொண்டாகும். அவர் வாழ்க்கையின் முக்கிய குறிக்கோள் இதுவாகவே இருந்தது.

பாரதமணி பண்டித நேருவும் ரசிகமணி டி. கே. சி. யும்



ரசிகமணி தம்மிடம் வருகிறவர்களுக்கு எல்லாம் கவியமுதை அள்ளி அள்ளி வழங்குவார். இனிக்க இனிக்கப் பேசுவார்; எளிமையாகப் பேசுவார். அப்படியே தான் எழுதுவார். வீட்டிலும் சரி, மேடையிலும் சரி, அவர் பேச்சு ஒரேமாதிரியாகவே இருக்கும். அவர் மொழி நடை

# தமிழ்ப் பொக்கிஷம்

ராஜா ஸர் முத்தய்யா செட்டியார்

ரஸிகமணி அவர்கள் தமிழ் நாட்டு இலக்கியங்களை அனுபவிப்பதிலும், தாம் அனுபவித்த இன்பங்களைப் பிறருக்கு வெகு சுலபமான நடையில் எடுத்துக் காட்டி அவர்களை அனுபவிக்கச் செய்வதிலும் மிகவும் திறமை வாய்ந்தவர்கள். அன்பில் சிறந்த நண்பர். ரஸிகமணி அவர்களும், அவர்களுடைய மனைவியாரவர்களும் அவர்கள் இல்லத்தில் நண்பர்களுக்கு அளித்து வந்த உபசரிப்பை யாரும் மறக்க முடியாது. கடவுளிடத்தில் நம்பிக்கையுடன், தாம் எடுத்த காரியத்தைச் செய்து முடிப்பதிலும், தம் கடமையைச் செய்வதிலும் ஒப்பற்றவர். தமிழின் ஆற்றலையும், அழகையும் சிறு குழந்தையும் அறியக் கூடிய தேனினும் இனிய சின்னஞ் சிறு சொற்களால் எடுத்து உணர்த்தக்கூடிய உத்தமர்.

ரஸிகமணி அவர்களின் மறைவு பல்லாயிரம் தமிழ் நண்பர்களுக்குப் பெரிய நஷ்டம். தமிழ்நாடு தமிழ்ப் பொக்கிஷத்தை இழந்தது. தமிழுக்கும், தமிழிசைக்கும், தமிழ் வளர்ச்சிக்கும் தமிழ்க் கலை வளர்ச்சிக்கும், தமிழ் நாட்டுக்கும் இவர் செய்த தொண்டுகள் ஏட்டில் அடங்கா.

"டி. கே. சி." இம் மூன்று எழுத்துக்கள் நம் நாடு உள்ளளவும் தமிழர்கள் உள்ளத்தில் என்றென்றும் ஒலித்துக் கொண்டேயிருக்கும். இவ்வுத்தமரின் ஆன்மா சாந்தியடைய அனைவரும் பிரார்த்திப்போமாக.

யில் ஒரு தனிச் சிறப்பும் கவர்ச்சியும் உண்டு. பேச்சில் போலச் செய்கையிலும் இனிமை இருந்தது. யாவரையும் அன்புடன் உபசரிப்பார்; உண்பிப்பார். அவர் இல்லம் எப்போதும் விருந்தினர் விடுதியாகவே காட்சியளிக்கும்.

ஆங்கிலம் கற்றவரே கற்றவரென்றும், தமிழ்க் கல்வி இழிவானது என்றும், தமிழில் பேசுவதும் எழுதுவதும் அநாகரிகமென்றும் எண்ணி வந்த கால மொன்றிருந்தது. பட்டதாரிகள் பலர் மேடை மீதேறி நின்று 'எனக்குத் தமிழில் பேச வராது; ஆங்கிலத்திலேதான் பேச முடியும்' என்று பெருமையோடு சொல்லி வந்தார்கள். அந்தக் காலத்தில் நமது ரஸிகமணி 'தமிழில் சொல்ல முடியாதது என்ன உண்டு?' என்று ஆர்வத்தோடு கூறி, அவர்களைத் தமிழாசையும், கவிதை வெறியும் கொள்ளச் செய்தார்கள்.

அவர், யாவருக்கும் உத்தம நண்பர். எனக்கு உயிர் நண்பர். என்னைத் தமிழ் நாட்டின் பல பகுதிகளுக்கும் அழைத்துச் சென்று உபசரித்ததை நான் என்றும் மறக்க முடியாது. அன்னைபோலிருந்து என்பால் அன்பு சொரிந்தார். அருவியில் நீராட்டினார். அருகிருந்து உணவூட்டி உபசரித்தார். என்னைப் பாராட்டினார். என் கவிதைகளைப் பாராட்டினார். இவற்றையெல்லாம் ஏற்கவும் முடியாமல் மறுக்கவும் முடியாமல் அன்றும் நான் கல்லாகத்தா னிருந்தேன். அவரைப் பிரிந்த இன்றும் செய்யும் வகை அறியாது அப்படிக் கல்லாகத்தான் இருக்கிறேன்.

தந்தியை வாசிக்கக் கேட்டேன். தூக்கிவாரிப் போட்டது. துணுக்குற்றேன்; தத்தளித்தேன்; கண்ணீருகுத்தேன். அரிய நண்பரைப் பிரிந்து அவருக்குச் சரமகவி பாடவா நான் இங்கு இருக்க வேண்டும் என்று ஏங்குகிறேன். என்ன செய்வது? ஈசன் செயலுக்கு எதிர்ச்செயல் இல்லை என்று எண்ணி அமைவதைத் தவிர வழியேது? அவர் பிரிவால் வருந்தும் அவரது இல்லக் கிழத்தியாருக்கும், பேரப் பிள்ளைகளுக்கும் இப்படியே தேறுதல் கூறிக் கொள்கிறேன். அவர் அமர வாழ்வெய்தி விட்டார். அவர் ஆன்மா அங்கும் உம்பர் அமுதத்தினும் மேலாகக் கம்பர் கவியமுதத்தை ஆரத்துய்த்து இன்புறுவதாக!

புன்னகை பூத்துப்
பொலியும் முகத்தழகன்

கன்னலைச் சொல்லில்
கலந்தளிப்போன்—மன்னுபுகழ்ச்

செந்தமிழ்ச் செல்வன்
சிதம்பர நாதனைநாம்

எந்தநாள் காண்போம்
இனி!

# அவருக்கு இணை அவர்தான்!

டாக்டர் ஆர். எம். அழகப்பச் செட்டியார்

டி. கே. சி. அவர்களையும் குற்றாலத்தையும் நினைக்கும் பொழுது அகஸ்தியரையும் அவர் வாழ்ந்த பொதிகை மலையையுந்தான் எண்ணத் தோன்றும். அகஸ்தியர் கதை பொய்யில்லை, உண்மைதான் என்று நிரூபிக்கும் போக்கில் டி. கே. சி. அவர்களின் தமிழ்ப் பணி விளங்கி வந்தது. தமிழ் மொழி மிகவும் இனிமை வாய்ந்த மொழி, எளிமை வாய்ந்த மொழி என்று சொல்லுகிறவர்களின் தொகையோ ஆயிரம், ஆயிரம். ஆனால் டி. கே. சி. அவர்களைப் போல அதன் இனிமையையும் எளிமையையும் ஆழத்தையும் எடுத்துக் காட்டுகிறவர்கள் எத்தனை பேர் என்று எண்ணத் தொடங்கினால், அப்பொழுது தெரியும் டி. கே. சி. அவர்களுக்கு இணையாக டி. கே. சி.யைத்தான் சொல்ல முடியும் என்பது.

கவிதையினுடைய சுகத்தை அனுபவிக்க வேண்டுமென்றால், அது தாய்மொழியில்தான் முடியும் என்பது டி. கே. சி.யின் சித்தாந்தம். அதுவே "டி. கே. சி. தத்துவ"த்தின் அஸ்திவாரம். எந்த மேடையிலும், எவர் முன்னிலையிலும் அவர்கள் அதைச் சொல்லுவதற்குத் தயங்க மாட்டார்கள்.

டி. கே. சி. அவர்கள் உத்தமக் கவிதையின் உரைகல். "இது கவிதை" என்று அவர்கள் ஒரு பாடலை அறுதியிட்டால், அது கவிதைதான். அதன் கௌரவத்தையும் கலை எழிலையும் எவராலும் மறுக்கவே முடியாது. ஆனால் அவர்களிடம் பாடல் ஒவ்வொன்றும் கவிதா முத்திரை பெறவேண்டுமென்றால், அது எளிதான காரியமில்லை.

கவிதா இன்பமெல்லாம் மெத்தப் படித்த ஏகபோக உரிமையாக இருந்த காலம் உண்டு. டி. கே. சி. அவர்களின் மகத்தான சேவையால் சிலருக்கே உரியதாக இருந்த தனி அருமை இன்று பலருக்கும் வாய்த்துவிட்டது. பல்லாயிரக் கணக்கான மக்கள் உள்ளத்தில் ரசனைத் தீபம் இன்று ஒளி வீசி நிற்கிறது.

அழகைக் காண்பது ஒரு வகை ஆற்றல்; அபூர்வமான ஒருவகை வாய்ப்பு. அது ஒரு வரப்பிரசாதம். ஆனால் டி. கே. சி. அவர்களுக்கு அரிதான அந்த வரப்பிரசாதம் எளிதான பொழுதுபோக்காக வாய்த்துவிட்டது. அழகைத் தவிர வேறு எதையும் அவர்களுடைய கண் பார்க்காது. மேலும் பார்க்கவும் தெரியாது. அழகுக்கு அஞ்சலி செய்வதில் அவர்களை மிஞ்சின பக்தரைக் காண்பது

பதினெட்டு ஆண்டுகளுக்கு முன் எடுத்த இந்தப் புகைப்படத்தில், வலமிருந்து முதலில், மலர்ந்த முகத்துடன் இருப்பவர், ரஸிகமணியின் அருமைப் புதல்வர் காலஞ்சென்ற ஸ்ரீ தீத்தாரப்பன் ('தீபன்')





1946-ல் ரஸிகமணி டி. கே. சி. பம்பாய் சென்றிருந்த போது அமரகவி ரவீந்திரருடைய சகோதரரின் குமாரரும், பிரபல ஹிந்தி கவிஞர் சுமித்திராநந்தன் பந்த், ஹிந்தி இலக்கிய கர்த்தாக்களான ஸ்ரீ நரேந்திர சர்மா, ஸ்ரீ அம்ருதலால் நாகர் முதலியோரும் ரஸிகமணியிடம் 'தமிழ்க் கவிதையைப் பற்றியும், தமிழ்ப் பண்பாட்டைப் பற்றியும் கேட்டு இன்புற்றனர்.

கஷ்டந்தான். அவர்களுடைய அழகுத் தத்துவத்தில் போரத்திற்கு இடம் கிடையாது. தாருக்கு இடம் கிடையாது. சலிப்புக்கும் இடம் கிடையாது. அவர்களுடைய கம்ப ராமாயண வெளியீடே அதற்கு அத்தாட்சி. கம்பனிடத்திலுள்ள மகாகவி அம்சத்தைக் கண்டு மக்களுக்குக் காட்டிய பெருமை அவர்களுடைய தனி வெற்றி.

அவர்கள் எண்ணியதையே சொல்வார்கள்; சொல்வதையே எண்ணுவார்கள். அவர்கள் ஒரு தத்துவக் கொள்கலம். சில வகையான தத்துவங்கள் சிற்சில காலமே செல்வாக்குடன் திகழும். ஆனால் "டி. கே. சி. தத்துவம்" என்றென்றும் திகழும். மார்க்கண்ட இனத்தைச் சார்ந்தது.

கலைஞர்களை அவர்கள் ஆயுட் காலத்திலே பாராட்டும் பாக்கியம் வெகு சிலருக்குத்தான் உண்டு. அவர்கள் மறைந்த பின்னர் அவர்கள் பெருமையைப் பாராட்டி அவர்கள் ஞாபகார்த்தமாகச் சின்னங்களை ஏற்படுத்த முன் வருவது உலக இயல்பு. அதுமட்டுமல்ல, அப்பெரியார்கள் உயிருடன் வாழ்ந்த காலத்தில் அவர்களை மறந்து தக்க பாராட்டுச் செய்யாமலிருப்பதும் உலக மரபுதான்.

**"ஹோமரைப் பிச்சையெடுக்கவிட்ட ஏழு நாடுகளும் அவன் மடிந்த பின்னர் அஸ்திக்குப் போட்டியிட்டனவாம்." ***

அப்படியல்லாமல், டி. கே. சி. இவ்வுலகில் உள்ள காலத்தே அவருடைய கம்ப ராமாயணப் பதிப்பை அரங்கேற்றல் செய்ய முன் வந்த தமிழ் மக்கள் பெரும் பாக்கியம் செய்தவர்கள். புண்ணியம் உள்ளவர்கள். அவ் விழாவுக்கு நமது ராஜாஜி தலைமை தவகித்து மிகப் பொருத்தம். அதில் ஓரளவு பங்கெடுத்துக் கொண்டது என் பாக்கியம்.

டி. கே. சி. அவர்களிடம் அன்பு கொண்டிருந்தவர்கள் அவர்கள் தமிழுக்கு ஆற்றிய பணியை இடைவிடாது தொடர்ந்து நடத்துவதே அவர்களுக்குச். செய்யும் மரியாதையாகும். அப்படியே தமிழ் நாட்டுக்குக் கடவுள் அருள் புரிவாராக.

* "Seven countries claimed the ash of
Homer dead
Through all of which he begged
his way for bread."



நாள் முழுதும்

கவர்ச்சிகரமாய்

இருக்க



## பியர்லைன்
## ப்ரெஞ்சு லாவண்டர்
## பிரிலியன்டைன்



இயற்கையான ப்ரெஞ்சு லாவண்டர் புஷ்பங்களிலிருந்து தயாரிக்கப்பட்டது. தனிச்சிறப்பும், கண்யமும் பெற அதை தினசரி விடாது உபயோகிக்கவும்.

## பியர்லைன்
## ப்ரெஞ்சு லாவண்டர்

தற்காலத்திற்கேற்ற, ஒரு லட்சியமான புத்துணர்ச்சியளிக்கும் சாதனம். ஸ்நானத்திற்குப் பின்னர் அதை உபயோகித்து நாள் முழுவதும் குளிர்ச்சியுடனிருங்கள்.



## பியர்லைன்
## ஓ-டி-கொலோன்

PEARLINE-PARIS LTD. P. O. Box No. 493, BOMBAY

# டி. கே. சி. என்னும் ஆனந்த தத்துவம்

எஸ். மகாராஜன்

நம்முடைய ஞானிகள் பலரும் ஆனந்தத்தை அடைவதற்கான பல தந்திரங்களைக் கையாண்டு வந்திருக்கிறார்கள். "நான்" என்ற ஒன்று இருக்கிறதே, அதை மாத்திரம் மடக்கி விட்டால், ஆனந்தம் பொங்கி வழிய ஆரம்பித்து விடும் என்று கண்டார்கள் அவர்கள். ஆனால், அந்தக் காரியத்தைச் சாதிப்பதிலே, எவ்வளவோ கஷ்டப்பட்டிருக்கிறார்கள். ஞானி ஒருவர், பெண்ணைப் போல, புடவையும், ரவிக்கையும் அணிந்து, நாணிக் கோணி நடந்து, பாவனை மூலம் ஆடவன் என்ற உணர்ச்சியையே இழந்து விட்டார், பல ஆண்டுகளுக்குப் பின். ஆனால், ஆணுக்குரிய ஆணவம் கழன்றதும், பெண்ணுக்குரிய ஆணவம் வந்து அவரைப் பற்றிக் கொண்டது. என்ன செய்வது! நாயோடு நாயாகத் திரிந்து பார்த்தார். மனித வர்க்கத்துக்குரிய ஆணவம் நீங்கி, மிருக வர்க்கத்துக்குரிய ஆணவம் வந்து அவரைத் தொத்திக் கொண்டது. இப்படியெல்லாம் கஷ்டப்பட்டு, ஆணவத்தை வென்று, ஆனந்தத்தை அடைந்தார்கள் சில ஞானிகள்.

இருபது ஆண்டுகள் டி. கே. சி. யோடு நெருங்கிப் பழகினபோது, ஆனந்தத்தை அடைவதற்கு இப்படியெல்லாம் அவஸ்தைப்பட வேண்டாம் என்று தெரிந்தது. உணர்ச்சியோடு கவி உலகத்திலே புகுந்து விட்டால், 'தன்னை மறந்த லயம்' தானே பிறந்து விடும் என்று தெரிந்தது. ஒரு நல்ல பாடலுக்குள்ளே புகுந்து, நோயை மறந்து, ஐந்து மணி நேரம் ஆறுமணி நேரம் சமாதியிலிருப்பார்கள்; கூடியிருக்கும் சகாக்களையும் ஆனந்த அனுபவத்திலே, அழுத்தி விடுவார்கள். டி. கே. சி. யை விட்டுப் பிரிந்து போன பிறகும், பாடல் நம்மை விட்டுப் பிரிவதில்லை; மனசுக்குள்ளே நின்று ரீங்காரம் செய்யும்; ஆழமான ஒரு மன நிலையிலே, நம்மை நிலைக்கச் செய்து விடும்.

"நேர் கோட்டில் அழகில்லை; பனைமரத்தைப் பார்த்து வெகு நேரம் அனுபவிக்க முடியாது. வளைவு, நெளிவுகளில்த் தான் ரஸமிருக்கிறது; முண்டும், முடிச்சுமாய், கரடு முரடாயிருக்கும் மஞ்சணத்தி மரத்தைப் பார்த்து அனுபவித்தவாறே இருக்கலாம். அதிலே மனசு எளிதில் பற்றிக் கொள்ளுகிறது. 'மிலிட்டரி மார்ச்'சை அழகாயிருக்கிறது என்று அநுபவிக்க முடியுமா! ஆனால், எத்தனையோ ஜதி வேறு பாடுகளோடு, தாளத்துக்குக் கட்டுப்பட்டு ஆடுகிற நாட்டியம் மனசைக் கொள்ளை கொண்டு விடுகிறது. இதேபோல, வசன நடையிலே மனம் ஈடுபடுவதில்லை. ஆனால், பம்மல், துள்ளல், பாய்ச்சலோடு கூடிய கவிதையிலே, மனம் சிக்குண்டு கிறங்கி விடுகிறது" என்ற சித்தாந்தத்தை டி. கே. சி. வலியுறுத்தி வந்தார்கள்.

ஆனால், இந்தக் கிறக்கம் ஆடவர்களுக்கு அதிகம் ஏற்படுவதில்லை. உணர்ச்சி தத்துவத்தை அடக்கியும், மறைத்தும் வருகிறவர்கள் ஆடவர்கள். பெண்டிருக்குத்தான், உணர்ச்சி காரணமாக, கவிதை உலகமும், கலையுலகமும் எளிதில் வழி திறக்கின்றன என்பதையும் ரஸிகமணி டி. கே. சி. உணர்ந்தார்கள்.

என்னுடைய தமக்கையாரும், செண்பகத்தம்மாளும் கவிதையை அனுவிக்கும் பக்குவத்தைப் பார்த்து அவர்கள் கீழ்க்கண்டவாறு சொன்னார்கள்:—"பாடலைவிட நீங்கள் மேலானவர்கள் ஆய்விட்டீர்கள்; பசுவைவிடக் கன்று மேல்; தாயைவிடக் குழந்தை மேல்; இறைவனைவிட அடியவர்கள் மேல்." ஆனந்தத்தைக் கொடுக்கும் கருவி உணர்ச்சி என்றிருந்தால், ஆனந்தத்தைக் காட்டிலும், அது மேலானதுதானே.

ஆகவே, எந்தத் துறையிலானாலும் சரி, அவர்கள் கையாண்ட கஜக்கோல் ஒன்றே ஒன்றுதான். "அது ஆனந்தத்தைக் கொடுக்கிறதா! இல்லையேல், குப்பையிலே போடு" என்பார்கள்.

சமுதாய இயலை எடுத்துக் கொண்டால், சொத்து என்ற தத்துவம்தான் மனிதனுடைய பண்பைக் கெடுத்து, ஆனந்தத்தைக் குலைக்கிறது. ஆகையால், தனி மனிதனுக்குச் சொத்துரிமை கொடுப்பதே தவறு என்று கண்டிப்பார்கள். பொறாமையும், போட்டி மனப்பான்மையும்

ரஸிகமணியின் வாழ்க்கைத் துணைவியாரும் அவர்களுடைய பேத்தி ஸ்ரீமதி தங்கம்மாளும்





பழைய கவர்னர் பவநகர் மகாராஜாவும், டி. கே. சி. யும்

சூழ்ந்த இடத்திலே, பண்பாடு எப்படி வளரும்! "பூனைகள் இருக்கும் இடத்திலே, எலி பேரன் பேத்திகள் எடுத்த கணக்குத்தான்" என்று முத்தாய்ப்புக் கொடுப்பார்கள்.

வாழ்க்கைத்தரம் உயர வேண்டுமென்றால், உல்லாஸமாகக் கூடி வாழப் படிக்க வேண்டும். பல திறப்பட்டவர்களை ஒன்று சேர்த்து, சந்தோஷப் படுத்துவதற்கு விருந்தோம்பல் நல்ல சாதனம் என்று கண்டார்கள்.

"பள்ளிக்கூடத்திலே தீயை வை" என்று சொன்னதெல்லாம், கல்வி முறை ஆனந்தத்தைக் கொடுக்காத காரணத்தால் தான், உண்மையோடு ஒட்டிய படிப்பு மிக மிக அவசியம், வெறும் புஸ்தகங்களோடு மாரடித்துக் கொண்டிருப்பதால், மாணவர்களுடைய உள்ளம் வறண்டு விடுகிறது. "அஸ்ட்ராணமி வானத்தி லிருக்கிறது; ஜீயாலஜி பூமிக்குள்ளிருக்கிறது; பாட்டனி காட்டி லிருக்கிறது; பிஸியாலஜி தேகத்தி லிருக்கிறது; ஸைக்காலஜி உள்ளத்திலிருக்கிறது. இவையெல்லாம் புஸ்தகத்தில் எப்படி இருக்கும்! கலியாணம் பண்ணிக் கொள்ள விரும்புகிற ஒருவனுக்கு, பெண் பாடசாலை ஒன்றின் ஆஜர் அட்டவணையைக் (Attendance Register) கொடுத்துப் புரட்டிப் பார் என்ற கணக்குத்தான்" என்று அவர்கள் பாவ விளக்கம் கொடுப்பார்கள்.

கவிதையை நிர்ணயம் செய்வதிலும், அதே கேள்விதான்: "ஆனந்தத்தைக் கொடுக்கும் சத்தம் இருக்கிறதா! இல்லையென்றால், உடைப்பிலே போடு!" என்பார்கள். "சொன்

னைப் பாட்டைக் கம்பன் எழுதியிருக்கவே மாட்டான்" என்று துணிந்து சொல்வார்கள். போலிக் கலை, போலிக் கவிதையோடு பழகுவதே மனகக்தக் கேடு என்றுணர்ந்தவர்கள் டி. கே. சி.

மூன்று வருஷங்களுக்கு முன், டி. கே. சி.க்கு மலேரியா ஜுரம் கண்டு பிழைக்க மாட்டார்கள் என்ற நிலை ஏற்பட்டது. வழக்கம் போல் மாலை ஆறு மணிக்கு அவர்களைப் பார்ப்பதற்காகக் குற்றாலம் போயிருந்தேன். என்னைக் கண்டதும் எழுந்து உட்கார்ந்தார்கள். காய்ச்சல் 104 டிக்ரி இருந்ததையும் மறந்து ஆவேசத்தோடு என்னுடன் பேச ஆரம்பித்தார்கள்:— "சென்ற 40 வருஷ காலமாக இலக்கியப் பிரசாரம் செய்து வருகிறேன். ஏதோ சில பேர்தான் என்னோடு ஒட்டி நான் சொல்வதைக் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறார்கள். அவர்களும்கூட என்னிடத்தில் உணர்ந்ததை, உணர்ந்தபடி சொல்லப் படித்துக் கொள்ளவில்லை. ஆகையினால், நீங்கள் ஒன்று மாத்திரம் செய்து கொண்டிருந்தால் போதும். 'டி. கே. சி. என்ற ஒருத்தன் இருந்தான். அவன், கம்பனுக்கு ஈடான கவிஞன் உலக இலக்கியத்திலேயே கிடையாது: தமிழுக்கு இணையான பாஷை எந்த நாட்டிலுமே இல்லை' என்று சொல்லுவான் என்பதை மாத்திரம் சொல்லிக்கொண்டே இருக்க வேண்டும். ஐந்நூறு வருஷம் அல்லது ஆயிரம் வருஷம் கழித்தாவது அந்த உண்மையை உலகம் ஒப்புக் கொள்ளும்."

அவர்கள் இறப்பதற்கு இரண்டு தினங்களுக்கு முன் குற்றாலம் போயிருந்தேன். எலும்பும், தோலுமாக இருந்தார்கள். ஆனாலும், அந்த உத்லாகம் கொஞ்சங்கூடக் குறையவில்லை. நண்பர்களைப் பார்த்து, "உங்களோடு உல்லாஸமாகப் பேச வேண்டும் என்று ஆசை. ஆனால், கடிவாளம் போட்டு, என் நாக்கை இழுத்து வைத்த மாதிரி இருக்கிறது" என்று மூறுவலோடு சொன்னார்கள்.



புது கவர்னர் ஸ்ரீப்ரகாசவும், டி. கே. சி.யும்

இறப்பதற்குச் சில மணிநேரத்துக்கு முன், கண்ணை மூடிக் கொண்டு, "ஆனந்தமான லோகத்துக்கு இழுத்துக்கொண்டே போகிறது மனசு" என்று தாழ்ந்த குரலில் கூறினார்கள். காலை எட்டு மணிக்கு ஆனந்தத்தோடு கலந்து விட்டார்கள். "அறுபத்து மூவர் தம் கூட்டத்திலோ", "செம்பொன்னம்பலத்தோ" சென்று புகுந்து விட்டது டி. கே. சி. என்னும் ஆனந்த மயமான அற்புதம்.



# பழுத்த பழம் உதிர்ந்தது!

பிரபல வக்கீலும், மாஜி நீதிபதியும், ஹிந்து தர்மத்தின் இணையற்ற பிரதிநிதியும், தலை சிறந்த கலா ரஸிகரும், இடது கை அறியாமல் வலது கையினால் அள்ளி அள்ளி வழங்கி வந்த வள்ளலுமான ஸ்ரீ வி. வி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் சென்ற பிப்ரவரி மீ 25உ இரவு இறைவன் திருவடி நிழலை அடைந்தார்கள். இந்த மண்ணுலகை அவர்கள் நீத்த அன்று மாலைகூடக் கடற்கரை சென்று விட்டு வந்தார்கள். கடைசி நிமிஷம் வரையில் தெளிந்த அறிவுடன் இருந்து வந்தார்கள். ஒரு நாள்கூட நோயாய்ப் படுத்திராமல், நன்றாகக் கனிந்த பழம் மரத்திலிருந்து உதிர்வது போல் எண்பத்து மூன்றாம் வயதில் அநாயாஸ மரணமடைந்த இந்த மகான் இறைவனுடைய எல்லையற்ற கருணைக்குப் பரிபூரண பாத்திரமானவர் என்பதில் ஐயமில்லை.

ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் சென்னை நகருக்கு வந்த போது முதன் முதலாக அவருக்குக் கிடைத்த அரும் பெரும் நண்பர் ஸ்ரீ வி. வி. சீனிவாச ஐயங்கார் அவர்கள் தான். ரஸிகமணியின் கம்பராமாயணச் சொற்பொழிவுகளில் மிக்க ஈடுபாடு கொண்டு, தமது இல்லத்தில் ஒரு நாள் அழைத்து, பாடல்கள் சொல்லச் செய்து, சரிகைத் துப்பட்டா அன்புப் பரிசாக அளித்துக் கௌரவித்தார்கள்.

ரஸிகமணியின் நினைவு இதழாக வெளியாகும் இந்தக் "கல்கி" இதழிலேயே ஸ்ரீ வி. வி. சீனிவாச ஐயங்கார் அவர்கள் விண்ணுலகு சென்ற செய்தியையும் நாம் வெளியிடுமாறு நேர்ந்து விட்டது. அந்த இரு ரஸிக சிரோமணிகளும் வானுலக மார்க்கத்தில் சந்தித்து அளவளாவி யிருப்பார்கள் என்றும் எதிர்பார்க்கலாமல்லவா?


நீங்கள் பிரயாணம் செய்யும்போது ...
ஞாபகமிருக்கட்டும்
பிரிட்டானியா பிஸ்கோத்துகள் உபரி விடமின் சத்துடன் கூடி, ருசியாகவும், புஷ்டியாகவும், பரிசுத்தமாயுமிருக்கின்றன. பிரிட்டானியா பிஸ்கோத்துகள் உங்களுக்குத் தேவையான போஷாக்களிக்கட்டும்.



## மைசூர் பாங்கியின் அஸ்திவார விழா

சென்ற 20—2—54 அன்று சென்னை நேத்தாஜி சாலையில் மைசூர் பாங்கியின் புதிய கட்டிடத்தின் அஸ்திவார விழா வெகு சிறப்பாக நடந்தேறியது. ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் கடவுள் வாழ்த்துப் பாட விழா ஆரம்பமாயிற்று. நமது சென்னை முதன் மந்திரி ராஜாஜி தலைமை வகித்து அருமையான பிரசங்கம் செய்து பாங்கிக்கு வாழ்த்துக் கூறினர். மைசூர் ராஜப்பிரமுகர் அடிப்படைக் கல்நாட்டினர். இந்த விழாவின் கோலாகலமான காட்சிகளை இப்பக்கத்தில் காணலாம்.

# வட்ட மேஜை

வாழ்வு அநித்யம்—சாவு சாசுவதம் என்ற வேதாந்தம் இந்தமாதிரி சமயங்களில் அவ்வளவாக மனத்தில் உறைப்பதில்லை. ரஸிகமணி மறைந்தாரா! "இதய ஒலி" எழுதிய மகா ரஸிகரின் இதயம் ஒலி செய்வதை நிறுத்தி விட்டதா! 'இருக்க முடியாதே' என்று உள்ளம் ஐயுறுகிறது.

கம்பனை உண்மையாக உணர்ந்த மகா புருஷர் அவர். கம்பரிடம்தான் ரஸிகமணியும் போய்ச் சேர்ந்திருப்பார். கம்பர் பாக்கியசாலிதான். நாம் அநாதைகளாகி விட்டோம்.

பிரம்பூர் 17—2—54 ஜடாதரன்

●

தமிழ் அமுதைத் தனக்கே உரித்தான முறையில், — தமிழன் ஒவ்வொருவனுக்கும் தமிழகத்தின் கவிக் களஞ்சியத்தை அதனூடே உள்ள பொருட் சுவையையும் கருத்தையும் இனிமையான மிக மிக எளிமையான முறையில் எடுத்துக் காட்டித் தினைக்க வைத்த பெருமை ஸ்ரீ டி. கே. சி. அவர்கள் ஒருவருக்கே உண்டு. நம் தமிழகத்தில் உள்ள சிறந்த தமிழ் நூல்களை, காவியங்களை எல்லோரும் அறியச் செய்தவர் அவரே.

அயன்புரம் 21-2-54 வெ. ஸ்ரீநிவாசன்

●

டி. கே. சி. அவர்கள் பழந் தமிழ்ப் பண்பாட்டுக்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்கி வாழ்ந்து வந்தார். அவர் காவியப் பயிற்சியிலும், கலை நுகர்ச்சியிலும் ஒரு பெரும் புரட்சியைத் தொடங்கி வெற்றி பெற்றார். இனிய தமிழ்க் கவிகளையும் இன்பக் கலைகளையும் தாம் நயமுணர்ந்து ரசித்து இன்புற்றதோடு, பிறரும் அவற்றை ரசித்து இன்புற வழிகாட்டி வகை செய்து உதவினார். இன்று தமிழ்ப் பொது மக்களிடையே கம்பன் காவியம் பிரபல மடையச் செய்த பெருமை பெரிதும் நம் டி. கே. சி. அவர்களுக்கே உரியதாகும். தமிழ்நாடு ஒரு தமிழ்ச் சான்றோரை இழந்து விட்டது. எனினும், தமிழ் மக்கள் அவரை மறக்க மாட்டார்கள்.

சென்னை 17—2—54 ம. வி. ராகவன்

●

தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் யாரும் செய்தறியாத, செய்யவும் நினைக்க முடியாத அருமையான ஆற்றுதற்கரிய தமிழ்த் தொண்டைத் தெய்வத் தொண்டாகச் செய்திருக்கிறார் குற்றாலத்து மா முனிவர் ரஸிக மணி டி. கே. சி. அவர்கள்.

டி. கே. சி. மறைந்து விடவில்லை. ஆமாம்! இந்த அருமையான எழுத்துக்கள் — ஆஹா! எத்தனை தவம் செய்தனவோ! — இந்த மூன்று எழுத்துக்களும் தமிழர் உள்ளத்தில் என்றென்றும் அழியா. யாராலும் அழிக்கவும் முடியாது. அவ்வளவு ஆழத்துடன் பதிந்துள்ளவை அவை.

செங்கல்பட்டு 17—2—54 ம. இ. ரங்கசாமி (சேவா சங்கத்தின் சார்பாக)

●

அப்பொழுது நான் பத்தாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தேன். அந்த வருடம் எனக்கு வைத்திருந்த தமிழ்ப் புத்தகத்தில் மூத்தொள்ளாயிரத்திலிருந்து எடுக்கப்பட்ட சிறந்த பாடல் ஒன்று இருந்தது. அச்செய்யுளைப் படித்த போதுதான் எனக்கு ரசிகமணி டி. கே. சி. அவர்களைப்பற்றி அறிய நேர்ந்தது. பிறகு நான் முதன் முதலாக (பள்ளிக்கூடப் பாடங்களைத் தவிர்த்து) மூத்தொள்ளாயிரத்தைப் படித்தேன். மூத்தொள்ளாயிரத்தைப் படிப்பதற்குமுன், இலக்கண வழுவில்லாமல் பேசுபவர்களும், எழுதுபவர்களும், தமிழ்ப் பண்டிதர்களும், பேரறிஞர்கள் மட்டும் தான் இலக்கியங்களைப் படிக்கலாம் என்ற எண்ணமே என் உள்ளத்தில் குடி கொண்டிருந்தது. ஆனால் இந்த எண்ணம் மிகவும் தவறானது என்று என் மனத்தில் படுவதற்குக் காரணமாயிருந்தது டி. கே. சி. அவர்களால் வெளியிடப்பட்ட மூத்தொள்ளாயிரம் என்ற புத்தகம்தான்.

ஒருநாள் நான் கம்ப ராமாயணம் படித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது அதில் ஒரு பாடல் படித்தேன். எனக்கு அது சற்று விசித்திரமாகப் பட்டது. அந்தப் பாடல் "மாதர்கள் கற்பின் மிக்கார்" என்று தொடங்கியது. இதே பாடலுக்கு டி. கே. சி. அவர்கள் செய்திருந்த திருத்தம் என் கவனத்துக்கு வந்தது. அவர் "மாதர்கள் வயதின் மிக்கார்" என்று திருத்தியிருந்தார். பார்க்கப் போனால் இது ஒரு சிறிய (ஒரே ஒரு வார்த்தைதான் வித்தியாசம்) திருத்தம்தான். ஆனால் அதில் அடங்கியுள்ள பொருள் செறிவும், கருத்தும் மாகடலினும் பெரிதல்லவா!

ஜெ. ராமமூர்த்தி
தேவகோட்டை 19-2-54

## தாளம் தவறியதோ?

விண்ணுயர்ந்த பாடல் விலைமதித்துச் சொல்பாப்பும்
வண்ணத் தமிழ்நிலவு வாய்மூடிப் போனதுவோ?

வானருவி போலே வழிந்தொழுகப் பண்ணிசைத்த
தேனருவிச் சாரல்வரு தென்றல் மறைந்ததுவோ?

ஐந்தருவிச் சாலை அமுதளிக்கும் அன்புமனைச்
சந்தம் அடங்கியதோ? சாந்தம் முடங்கியதோ?

பாட்டில் நிலையூன்றிப் பண்ணில் பதம்பிடிக்கும்
நாட்டியத்து மங்கை நடையிழந்து நின்றனளோ?

கம்பன் கவிதைக் கனிச்சாறு குற்றாலக்
கொம்புத்தேன் கூத்தன் நுரைகழற்கே வார்ந்ததுவோ?

கோளும் உலகும் குலவிக் கலந்திசைத்த
தாளம் தவறியதோ? தமிழையா டி.கே.சி!

— மு. க. தங்கவேலன் எம். ஏ.

# அரவிந்த்

## உயர் ரகத்துணிகள்

இப்பொழுது

•SANFORIZED• REGD

(சான்பொரைஸ்ட்) ஏற்கனவே சுருக்கப்பட்ட
ஷர்டிங்குகள் - பாப்லின்கள் - கோட்டுத்துணிகள்
மற்றுமுள்ள

சிறப்புவாய்ந்த பல-வர்ணங்
களிலுள்ள ப்ரிண்டுத்துணிகள்

வாயல்கள் - கேம்ப்ரிக்குகள் - பாப்லின்களும்

எல்லா இடங்களிலும்
கிடைக்கும்




அரவிந்த் மில்ஸ் லிமிட்டெடு,
அஹமதாபாத் - 2.

---

ஏஜண்டுகள் :

அஜீத் பாய் ஜயந்திலால் & கம்பெனி
5, டெக்கு தெரு, சென்னை-76, கீழ மாரட் வீதி, மதுரை & விஜயவாடா

யு. என். ஷர்மா
சிக்பேட், பெங்களூர் சிட்டி

கணேஷ்மல் பிரதாப்மல் & கம்பெனி
கார் தெரு, பெல்லாரி

நாக்ஜி புருஷோத்தம் & கம்பெனி லிமிடெட்
பெரிய கடைத் தெரு, த. பெ. 36, கோழிக்கோடு

# யார் மறக்க முடியும்?

**திருப்புகழ்மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயர்**

நம் டி. கே. சி. அவர்களா மறைந்து விட்டார்கள்? ஆயிரக் கணக்கான மக்களுக்கு அருள் தந்தையாய் விளங்கிக் கொண்டு அல்லவா இருந்தார்கள்? அவருடன் சிறிது நேரம் பேசி அவர் வாக்கைச் சற்று அநுபவித்தவர்கள் புத்துயிர் பெற்று விடுவார்களே! அன்பின் தாகமுற்ற நண்பர்களுக்கு அவர் நினைவே உற்ற சாந்தியாக இருந்ததே? செந்தமிழும் நாப்பழக்கம் என்பார்கள். அவருடைய நாவில் அல்லவா செந்தமிழ் பழகி வளர்ந்தது? தமிழ் ஓர் அற்புதமான பாஷை. அதனால் அல்லவோ எட்டு பாஷைகளில் பிரவீணரான அருணகிரி, திருப்புகழைத் தமிழில் பாடினார்? இந்த அரிய, அழகிய, எளிய, தெளிந்த தமிழை, பாஷா ஞானச் சிலம்ப வித்தை பழகிப் பிறர் அறிவுக்கு எட்டாத வகையில் கையாளுவது முறை அல்ல என்று கூறினார் நமது ரஸிகமணி டி. கே. சி.

பாட்டுக்குரியது தமிழ்.
பக்திக்குரியது தமிழ்.
தெளிவுக்குரியது தமிழ்.
பண்புக்குரியது தமிழ்.
விண்போல் பரந்தது தமிழ்.

சுருங்க வைத்தடக்கும் ஆற்றல் உடையது தமிழ். அன்பும் பெருமையும் தானேயாகி விளங்குவது தமிழ்.

இத்தகைய தமிழ்ப் பண்பைச் சென்ற சென்ற இடங்களில் எல்லாம் வாரி இறைத்துக் கொண்டிருந்தார் இந்தப் பெரியார்.

குற்றாலத்திற்கு ஒரு வேராக, சிற்றிடத்தில் அடக்கமொடு வீற்றிருந்தார் நமது டி. கே. சி.

[குறுகிய ஆலம்-குற்றாலம்; அதன் வேர் - குற்றால நாதர்; சிற்றிடம் - சித் இடம்; அடக்கம் - ஐம்புலனடக்கம். இவ்வளவும் இப்பெரியாருக்குப் பொருந்தும்.]

அவர் உயிர் இழக்க வில்லை. ஊன் கடிந்தார். உயிரெல்லாம் ஓர் உயிர் என்றுணர்ந்து உலகெலாம் ஒன்றெனக் கலந்தார். தமிழ்ப் பண்பில் பற்றுடையோர் உள்ளத்தில் அவர் எப்பொழுதும் நிறைந்தே நிற்பர்; ஐயமில்லை.

அவர் தோழமை எனக்குக் கிடைத்தது; முருகன் அருள்.

வந்தவர்கள் யாவரையும் உற்சாகப்படுத்தி அனுப்புவார். உடல் கலக் குறைவினால் வேதனை இருந்த போதிலும் அதைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல மாட்டார்.

கடைசியாக அவர்களைத் தரிசித்து விடை பெறுங்கால், என்றைக்கும் ஒன்றை வேண்டுமென்று கேளாதவர், தாம் கேட்டு வாங்கி எப்போதும் தம்முடன் இருக்க வேண்டுமென்று பெற்றது ஒன்று உண்டு. அது என்ன? பூஜை செய்வதற்குரிய 'ஜாலர்!'

ஜாலர் சகிதம் வரவேண்டும் என்பார். அன்பாகக் கடிதம் எழுதுவார். ஜாலர் சத்தம் கேட்டால் ஒரே ஆனந்தம். சென்ற டிசம்பர் மாதத் திருத்தணி படித் திருவிழாவைப் பற்றி எழுதும் போது "அந்தப் பக்தி வெள்ளத்தில் திருத்தணி மலை பிழைத்தது போதும்!" என்று வரைந்திருந்தார்! திருநெல்வேலியில் சந்தித்து வஸந்த மண்டபத்தில் ஆற்றிய உபன்யாசத்தை யார் மறக்க முடியும்!

பொருள் கலந்த சங்கீதத்துக்குப் பெரும் சேவை செய்தவர். காதைக் குத்தும் சங்கீதத்தை விலக்க வேணுமென்றும், மனோலய சங்கீதத்தை வளர்க்க வேண்டுமென்றும் பன்முறை வற்புறுத்தியுள்ளார். சங்கீதம் ஆத்மாவை எழுப்பவேண்டும் என்பார். அவர்களின் கம்ப ராமாயண உபன்யாசங்களைப் பல்லாயிரம் பேர்கள் ரஸித்து அனுபவித்திருக்கின்றார்கள். அவருடைய உலக வாசம் முற்றிற்று என்றாலும், அன்பர்களின் இதய வாசத்தில் எப்போதும் கலந்து நிற்பார்.

## இழந்தோம் இரண்டாம் சடையப்ப வள்ளலை!

நல்ல மழை பெய்தென்ன? நிலவளம் மிகுந்தென்ன? தமிழ் நாட்டுக்குப் பெரிய நஷ்டம் ஏற்பட்டு விட்டது டி. கே. சி.யின் மறைவால்! நம் டி. கே. சி. மறைந்தது, நாளுக்கு நாள் ஊறி ஊறி உள் புகுந்து ஹிருதயத்தை உருக்கும் துக்கச் செய்தி. குற்றாலத்து நீர் அருவி அநாதையாகிவிட்டது. சாரல் யார் பாடல்களுக்குப் பக்க வாத்தியம் வாசித்து வந்ததோ, அந்தப் பொதிகை மலைப் புனித முனிவர் எல்லாவற்றையும் உதறித் தள்ளி இறைவனடி ஏகிவிட்டார்.

ரஸிகமணி கம்பனைச் சித்திரிக்கும் அழகைச் சொல்வதா? கம்பனில் பதிந்து கமழும் நாடகத்தை விளக்கும் பக்குவத்தைச் சொல்வதா? கம்பனையுமே தோற்கச் செய்யுமோ வெனும் பாவத்தையும் உணர்ச்சியையும் சொல்வதா? கண்கள் வைரக் கல்லைப்போல் ஒளி வீச, மீசை ஆனந்தத்தில் துடிதுடிக்க, முகத்தில் இனிய புன்னகை தவழ (சில வேளைகளில் சிறுவர்களைப் போன்று குறும்புச் சிரிப்புந்தான்!) ரஸிக மணி அவர்கள் பாடல் சொல்லும் போது, கேட்பவர்களில் பதுமைபோல் சிலரும், மின்சார வேகம் புகுந்ததுபோல் துள்ளுபவர் சிலரும், அநுபவிக்கும் காட்சியைச் சொல்வதா! கடவுளும் கம்பனும் ரஸிக மணி டி. கே. சி. யும் அழியா நிலையில் ஒன்றாகி விளங்குகிறார்கள்! — **ஒய். ஜி. துரைசாமி**

# முப்பது வருஷத்தில் மூன்று அனுபவம்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் எம். ஏ.

பொதிகை மலைச் சாரலிலே இருப்பது குற்றாலம். குற்றால நாதரும் குழல்வாய் மொழியம்மையும் கோயில் கொண்டிருக்கிறார்கள் அங்கே. 'சிற்றாறு என்பது பெற்றாலும் சிறியவர் மனப் பெருமை போல் சித்ரா நதி பெருகி வருகிற' இடம் அது. இவற்றிற்கெல்லாம் மேலாக அங்கே தான் வற்றாத வட அருவி வான் கிழித்து ஒழுகுகின்றது. இந்த அருவியில் நீராடுவதே ஒரு அற்புதமான அனுபவம். அருவியில் ஐந்து நிமிஷம் குளிப்போம்; பத்து நிமிஷம் குளிப்போம்; நீராடியது போதும் என்று நினைத்து அருவியை விட்டு வெளியில் வருவோம். ஆனால் திரும்பவும் ஒரு ஆசை தோன்றும், இன்னும் கொஞ்ச நேரம் குளிக்கலாமே என்று. திரும்பவும் அருவிக்குள்ளேயே நுழைவோம். இப்படிப் பல தடவை குளித்த பின்புதான் ஜாகைக்குத் திரும்புவோம்.

இதே அற்புத அநுபவத்தைத் தான் டி. கே. சி. தமிழ்ப் பாக்களைப் பாடிக் காட்டும் போது பெற்றார்கள்; அவர்களை அடுத்துள்ள அன்பர்களையும் பெறச் செய்து வந்தார்கள்.

கிட்டத் தட்ட முப்பது வருஷத்துக்கு முன் திருநெல்வேலி இந்து கலாசாலையிலே நான் ஒரு மாணவன். ஒரு நாள் மாலையிலே கல்லூரி மண்டபத்தில் டி. கே. சி. யின் பேச்சு மாணவர்களும் பெரியோர்களும் நிறைய இருந்து பேச்சைக் கேட்டனர். பேச்சு, கவிச் சக்கரவர்த்தி கம்பனது கவிதையைப் பற்றி. ராமனுக்குப் பட்டம் சூட்டத் தீர்மானித்து விட்டார் தசரதர். சிற்றரசர்களும் மந்திரக் கிழவர்களும் ஒத்துக் கொண்டு விட்டார்கள். அவர்களுக்கு எல்லாம் ஒரே எக்களிப்பு. இதே செய்தியை, கோசலையின் தாதிப் பெண்கள் நால்வரும் கேட்கிறார்கள். அதைக் கோசலையிடம் சொல்ல விரைகிறார்கள்; ஓடுகிறார்கள். அவர்கள் நிலையை வர்ணிக்கிறார் கம்பர். அதைச் சொல்கிறார்கள் டி. கே. சி. விஷயத்தைத் தெளிவாக்கி விட்டு. பாட ஆரம்பித்தார்கள்:

" ஆடு கின்றனர்
பண் அடை இன்றியே "

என்று. அப்போது என் பக்கத்தில் இருந்த பள்ளி மாணவன் ஒருவன் 'கொஞ்சம் வெளியே போய் வருவோமா!' என்றான். 'இல்லை, நீ போய்வா' என்றேன் நான். சரியென்று போய் விட்டான். கல்லூரிக்கு வெளியே உள்ள காப்பி ஹோட்டலுக்குப் போய் காப்பி சாப்பிட்டுவிட்டு, வெற்றிலை பாக்கெல்லாம் போட்டு விட்டு. கொஞ்ச நேரம் வெளியில் நின்றவர்களிடம் அரட்டையும் அடித்து விட்டு, அரை மணி நேரம் கழித்துத் திரும்பவும் ஹாலுக்குள் வந்தான். வந்தால் ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் அப்போதும்,

" ஆடு கின்றனர்
பண் அடை இன்றியே "

என்று ஆடிக்கொண்டே பாடிக் கொண்டிருப்பதைத்தான் கேட்டான். எத்தனை தரம்தான் அந்தப் பாட்டை — அந்தப் பாட்டை என்ன! அந்தப் பாட்டின் முதல் இரண்டு அடிகளைத்தான் திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டிருந்தார்கள்! அதைக் கேட்ட நானும், திரும்பத் திரும்ப அவர்களுடன் சேர்ந்து பாடிக் கொண்டே இருந்தேன். வீட்டுக்குத் திரும்பினாலும், படுக்கையில் படுத்தாலும் இரண்டு அடிகளும் திரும்பத் திரும்ப நாவிலே நடமாடிக் கொண்டே இருந்தன, இரவு முழுவதும். இது அருவி ஆடும் அநுபவம் தானே! இது நடந்தது 1925-ல்.

பத்து வருஷம் கழிந்தது. ஒரு நாள் மத்தியானம் டி. கே. சி. அவர்கள் வீட்டில் நானும் எங்கள் 'வட்டத் தொட்டி' அன்பர்கள் சிலரும் தங்கியிருந்தோம். எல்லோரும் ஒன்று — ஒன்றரை மணிக்குச் சாப்பிட உட்கார்ந்தோம். சாதாரணமாக டி. கே. சி. அவர்களுடன் சாப்பிட உட்கார்ந்தால், சாப்பிட்டு முடிய ஒரு மணி நேரத்துக்குமேல் ஆகும். அன்று சாப்பாடு முடிகிற சமயத்தில் டி. கே. சி. பாடல் பாட ஆரம்பித்து விட்டார்கள். காதலால் வாடுகிறாள் ஒரு பெண்- காமன் அவள்மீது மலர்க் கணைகளை ஏவுகிறான். அவளுக்கோ இந்தக் காமன் பேரிலே ஒரே கோபம். ஆனால் சில தினங்களில் அவள் காதல் கை கூடிவிடுகிறது; காதலனை அடைந்து விடுகிறாள். காதலனோடு கூடிய பின், காமனைத் துச்சமாக எண்ணிப் பேசுகிறாள், பாடுகிறாள். பாட்டு வந்தது; பாடுகின்றார்கள் டி. கே. சி.

எய்ய வந்த காமா!
இனி உனக்கு வேலை இங்கென்?
உய்ய வந்தான் தன்னோடு
உறவானேன்—பையவே
தேரைவிட்டு, வெண் கரும்பைத்
தின்றுவிட்டு, செய்ய வந்த
போரை விட்டுப் பூ முடித்துப்
போ!

பாடினார்கள் இந்தப் பாட்டைப் பல தடவை ரஸிகமணி. சாப்பிட்ட கையெல்லாம் நன்றாக உலர்ந்து போவதையும் அறியாமல் கேட்டுக் கொண்டே யிருந்தோம் எல்லோரும். பரிமாறிக் கொண்டிருந்த அண்ணியும் நின்றே கேட்டார்கள் அத்தனை நேரமும். கடைசியில் அண்ணி சொன்னார்கள். 'சரி—இன்னும் ஒரு பாட்டும் வரட்டும். அதற்குள் டிபன் தயாராகிவிடும். இந்த இலையை எடுத்துவிட்டு டிபனுக்கு இலை போடுகிறேன்' என்று. எவ்வளவு ரஸமான பேச்சு! என்னடா என்று கடிகாரத்தைப் பார்த்தால் மணி மூன்றரைக்கு மேலாகி இருந்தது அப்போது. இப்படி ஒரு அநுபவம். இது நடந்தது 1935-லே.

இன்னும் பத்து வருஷம் கழிந்தது. குற்றாலத்தில் ஒரு நாள் மாலை. நானும் 'ஹரிஜன்' சாஸ்திரி அவர்களும் டி. கே. சி. அவர்களுடன் இருந்து பேசிக் கொண்டிருந்தோம். ஒரு பாட்டு வந்தது. மதுரையிலே ஒரு வைத்தியர்—சொக்கலிங்கம் பிள்ளை என்று பெயர். வீரபத்திரப் பிள்ளை மகன். அவர் ஒரு கவிஞருடைய தீராத நோயைத் தீர்த்து வைக்கிறார். கவிஞருக்கு நன்றி உணர்ச்சி பெருகுகிறது. அது ஒரு பாட்டாக அவர் உள்ளத்திலிருந்து வெளிப்படுகிறது.

மிக்க மது ரைச்செவனும்
விரபந்தி ரன் சுதனும்

சொக்கர் இருவர் எனத்
தோன்றினர்—அக்கோன்

பிறவாமற் காப்பான்
பிறந்தானை மண்மேல்

என்று பாட்டை மடக்கி மடக்கிப் பாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களோடு பாட்டை மனனம் பண்ணி வந்த நான் கொஞ்சம் தணிச்சலாகவே,

'இறவாமற் காப்பான் இவன் !'

என்று பாட்டை முடித்தேன். டி. கே. சி.க்கோ ஒரே உற்சாகம். 'சரி, ரொம்ப சரி; கடைசி அடி அதுதான். அப்படித்தான், கேட்கக் கேட்க பாட்டு நம்முடையதுதானே என்று தோன்றும் படி ஆகிவிட வேண்டும். அதுதான் நல்ல பாட்டிற்கு அடையாளம்' என்று பேச ஆரம்பித்து விட்டார்கள். திரும்பவும் பாட்டைப் பல தடவை பாடிக் காண்பித்தார்கள். அவ்வளவுதான். நானும் அந்தப் பாட்டை இரவு முழுவதும் பாடிக் கொண்டே இருந்தேன். மறு நாள் காலையில் எழுந்ததும் டி. கே. சி. அவர்களிடம் ஹரிஜன் சாஸ்திரி செய்த புகார் இதுதான்: 'இந்த பாஸ்கரனுக்கு மாலை வேளைகளில் நல்ல பாடல்களைச் சொல்லிக் கொடுக்காதீர்கள். அவர் பக்கத்தில் படுத்திருக்கும் எங்களை எல்லாம் உறங்க விட மாட்டேன் என்கிறார்' என்று. இப்படி ஒரு அநுபவம். இது நடந்தது 1945-லே.

ரஸிகமணி அவர்களோடு நான் கிட்டத் தட்ட முப்பது வருஷ காலமாகத் தொடர்பு வைத்துக் கொண்டவன். எத்தனையோ பேர் எப்படி எப்படி எல்லாமோ அவர்களைப் போற்றலாம். என்றாலும் அவர்களுடைய கவிதை அனுபவத்துக்கு ஈடு, இணை எங்குமே, என்றுமே கிடையாது. பாட்டைப் பாடி அனுபவிக்க ஆரம்பித்து விட்டால், ரீங்காரம் செய்யும் வண்டைப் போலவே, பாட்டோடு ஒன்றிய நிலையில் தான் மட்டுமல்ல, மற்றவர்களையுமே சேர்த்து உயர்த்தி விடுவார்கள்.

இன்று டி. கே. சி. அவர்கள் குற்றாலத்தில் இல்லை. ஆனால் என் இதயத்தில் இருக்கிறார்கள். நான் படிக்கும் பாக்களில் எல்லாம் இருக்கிறார்கள். என் பழைய நினைவுகளிலே இருக்கிறார்கள். இந்த நினைவுகளைக் கொண்டே இன்னும் முப்பது வருஷத்தைத் தள்ளி விடுவேன்.

# தமிழ்க் குரல் கேட்குது

ரா. பார்த்தசாரதி பி. ஏ., பி. எல்.,

"ஒரு பாட்டுப் பார்க்கலாமல்லவா!" என்றார் ரஸிகமணி டி. கே. சி. அவர்கள்.

நாங்கள் கேட்டுச் சொல்ல வேண்டும் என்று அவர் காத்திருக்கவில்லை. குழந்தைகளை அன்னை பாலூட்டி அமுதூட்டிப் போஷிப்பதற்குக் குழந்தையின் உத்தரவு வேண்டுமா!

"இது எந்தப் பாடல்! யார் செய்தது!" என்று மெதுவாகக் கேட்டேன்.

"குற்றாலக் குறவஞ்சியில் வரும் பாட்டு" என்று சொன்னார்.

ருசிகண்ட குழந்தைகள் நாக்கைச் சப்புக் கொட்டிக் கொண்டு கேட்பது போல் நாங்கள் கேட்டுக் கொண்டிருந்தோம்.

அந்தக் குறும்புக்காரக் குறத்தியுடன் திரிகூட மலையையே சுற்றித் திரிந்தோம். 'செங்கதிரோன் தேர்க்காலும் பரிக்காலும்' வழுக்கும் தேனருவிப் பக்க மெல்லாம் சென்றோம். வானரங்களைக் கனிகளுக்காக வான் கவிகள் கெஞ்சும் வேடிக்கையைக் கண்டோம். பூம்புனல்கள் ஓடக் கண்டோம். தவம் செய்யும் யோகியர் உள்ளம் ஒடுங்கக் கண்டோம். கிம்புரியின் கொம்பொடித்து, தினைமாவை இடித்துத் தின்னும் மலை ஜாதியினரைச் சந்தித்தோம். குறத்தி கூறிய மலைநாட்டு வளம் கேட்டோம். மேரு மலையையும், தெற்கு மலையையும், நடுவில் உள்ள கொல்லிமலை முதலிய பற்பல மலைகளையும் அவள் ஒரேயடியில் சுருட்டித் தன் பையில் போட்டுக் கொண்ட சாமர்த்தியத்தை மெச்சினோம்.

கடியாரம் மணி அடித்துக் கொண்டே இருந்தது; அடிக்கட்டும்! அதை யார் கவனித்தார்கள்! அன்று முதன் முதலில் குற்றாலக் குறவஞ்சியை டி. கே. சி. யிடம் கேட்டது இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. ரஸிக மணி டி. கே. சி. அவர்களின் ஆனந்தக் குரலின் இருந்த இனிமையை வேறு எங்கும், யாரிடமும் காண முடியாது. அது உள்ளத்தைத் தொடும் நாதம்; இதயத்தை எழுப்பும் அற்புத ஒலி.

அதுமுதல் குற்றாலம் போகும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து ஏங்க வேண்டிய நிலை வந்தது. அருவி ஸ்நானத்துக்காகப் போவதில்லை. வற்றாத அறிவுச் சுனையில் மூழ்கி ஆத்ம ஸ்நானம் செய்யவே போவோம்; உள்ளத்தின் ஆரோக்கியத்துக்காகவே குற்றாலம் எங்களை இழுத்தது. இனி அந்தப் பாக்கியம் நமக்கில்லை.

** ** **

மேதை டி. கே. சி. அவர்கள் அறிவின் பொக்கிஷம் மட்டுமல்ல; அன்புக் களஞ்சியமாக விளங்கினார். அவரது அன்பு வெள்ளம் அவரை யணுகிய அனைவரையும் ஆட்கொண்டது. யாரிடத்திலும் அவ்வளவு பரிவு அவருக்கு. எதற்காக நம்மிடம் இவ்வளவு அன்பும் பரிவும் வைக்கிறார் என்று திகைப்படையச் செய்யும். பிறருக்கு நன்மை செய்வதில் அவருக்கு ஒரு தனித் திருப்தி. எத்தனை பேர்கள் அவரது ஆதரவையும் யோசனையையும் நாடிப் பலன் அடைந்திருக்கிறார்கள்!

காவியத்தில் கம்பராமாயணம் போலும், அருங்கலைகளில் நமது கர்நாடக சங்கீதம், பரதநாட்டியம் போலவும் தமிழ் இலக்கிய உலகில் தமிழ்ப் பண்பாட்டின் முதிர்ந்த சின்னமாக விளங்கினார்.

டி. கே. சி. அவர்கள் மறைவினால் தமிழ் மக்களாகிய நாம் தந்தையை இழந்த அநாதைகள் ஆனோம். ஒப்பற்ற தவப் புதல்வனைத் தமிழன்னை இழந்து விட்டாள். என்றைக்குமே உலகத்தின் நல்ல பெரியார்கள் வாழ அமரர்கள் பொறுக்க மாட்டார்கள் என்பது புராணம். இப்போது அதை மீண்டும் நிரூபித்து விட்டார்கள்.

மார்ச்
3உ
முதல்

சென்னை
ஸ்ரீ கிருஷ்ண
சித்ரா
ராஜகுமாரி
உமா
லக்ஷ்மி
மற்றும்
தென்னாடெங்கும்

மனோகர் பிக்சர்ஸ்

# மனோகரா

டைரக்ஷன்
பிரசாத்
தயாரிப்பு
எம். சோமசுந்தரம்
ஸ்டுடியோ
நெப்ட்யூன்

கதை
நாடகப் பேராசிரியர்
P. சம்பந்த முதலியார்

திரைக் கதை, வசனம்
கலைஞர் மு. கருணாநிதி

BAJAK

RKF

RIGHTS CONTROLLED BY
ராதாகிருஷ்ண பிலிம்ஸ் லிமிடெட் ஆலப்புழை



# கைத்தறிப் புடவை

ஜெயலக்ஷ்மி

"அத்தான்! எனக்கா இந்தப் புடவை நெய்திருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"ராசம்மா! உனக்கு இந்தப் புடவையைப் போலவே வேறு ஒரு புடவை நெய்து தாரேன். ஆனா......இது உனக்கில்லே."

"இதைத்தான் எனக்குக் கொடுங்களேன்."

"பச்சைப்பிள்ளை மாதிரி கேக்கிறியே. நம்ம குடும்ப நிலைமை தெரிந்திருக்கும் நீ இப்படிக் கேட்கிறது எனக்குக் கஷ்டமா யிருக்கு."

"ஆமாம், எப்பத்தான் நம் கஷ்டம் விடியப் போகுது!" என்று வெறுப்புடன் கூறி விட்டு உள்ளே சென்றாள் ராசம்மாள்.

ராசம்மா அவ்விடத்தை விட்டுச் சென்றதும் ரத்னசாமியின் மனம் தறியில் செல்ல மறுத்துவிட்டது. அப்படியே அசைவற்று உட்கார்ந்து விட்டான். அவனுக்கும் கலியாணம் ஆகி ஐந்து வருஷங்கள் சென்று விட்டன. அப்போதே பிடித்து ராசம்மா பச்சை வர்ணப் புடவை யொன்று நெய்து தரும்படி கேட்டுக் கொண்டிருக்கிறாள். அவனால் அவளுடைய அந்த ஆசையை நிறைவேற்றிக் கொடுக்க முடியவில்லை. ராசம்மா இப்போது ஆறு மாதக் கர்ப்பிணி.

போனவாரந்தான் கோடி வீட்டுப் பெரிய பண்ணையாரின் சம்சாரம் பச்சை நிறத்தில் புடவை நெய்து கொண்டு வரும்படி சொல்லியிருந்தாள். இந்த மட்டுமாவது ஒரு அம்மா புடவை வாங்கிக் கொள்கிறேன் என்று சொன்னார்களே என்று மனங் குதூகலித்தான் ரத்னசாமி. ராமய்யச் செட்டியாரிடம் சரிக்குச் சரி வட்டி போட்டு எழுதிக் கொடுத்து, பணம் கடன் வாங்கி, நூல் வாங்கி வந்து புடவை நெய்ய ஆரம்பித்தான். இந்தப் புடவை விற்றாலாவது நாலு நாட்கள் வயிறு கழுவலாமே என்கிற எண்ணம் அவனுக்கு.

ஜீவாதாரமாக விளங்கும் புடவையைப் பரிசாகக் கேட்கிறாள் மனைவி ராசம்மா! அவனுக்கும் ஆசை தான்.

இந்தத் தறியில் நெய்வதைத் தவிர வேறு ஒரு வேலையும் செய்யத் தெரியவில்லையே! அப்படியே பழக்கமாகி விட்டதே என்று மனம் வருந்தினான். அவன்தான் என்ன செய்வான்!

அவர்களும் ஒரு காலத்தில் சௌகரியமாகத் தான் வாழ்ந்து வந்தார்கள். கைத்தறித் துணிகளுக்கு அப்போது நல்ல கிராக்கியிருந்து வந்தது. இப்போது நாகரிகம் மிஞ்சிவிட்டது. நீடித்த உழைப்பை விரும்பாது வெளிப் பார்வையையே விரும்பி அந்த மில் துணிகளையே எல்லோரும் விரும்பி வாங்கத் தொடங்கவே, நெசவாளர்களின் தொழில் படுத்து விட்டது. அவர்கள் ஜீவனம் செய்வதே கஷ்டமாகி விட்டது. உண்ணும் உணவும், உடுக்கும் உடைகளும், நிற்க நிழலும் இல்லாமல் தவித்து நிற்கும் குடும்பங்கள் சுமார் பத்து லக்ஷமிருக்கும். இந்தக் கஷ்டங்களெல்லாம் தீர்ந்து பழைய சுபிட்சம் என்று நிலவப் போகிறது நெசவாளர்களுக்கு என்று ஏங்கித் தவித்தான் ரத்னசாமி.

அப்போது வீட்டை விட்டு வெளியே வந்த ராசம்மா, "வீட்டைப் பார்த்துக்குங்க. நான் தண்ணிக்குப் போய் வரேன்" என்று கூறி விட்டுச் சென்றாள். மனைவியின் குரல் கேட்டுச் சிந்தனையிலிருந்து விடுபட்ட ரத்னசாமி, தறியைத் தட்டி விட்டான்.

ஒரு வழியாகப் பச்சைப் புடவையை நெய்து எடுத்துக் கொண்டு பண்ணையாரின் வீட்டை யடைந்தான் ரத்னசாமி. மணிக்



எட்டையாபுர பாரதியார் மண்டபத் திறப்பு விழாவுக்கு ராஜாஜியும் எட்டையாபுர மகாராஜாவும் புடைசூழ ரசிகமணி வருகிறார்.

விடத்தில் ஏற்பட்ட ஏமாற்றத்தின் விளைவினால் ரத்னசாமியின் துயரம் ஆத்திரமாக மாறியது. "இந்தா, சனியனே! இந்தப் புடவையை நெய்ய ஆரம்பித்ததிலிருந்து 'எனக்கு எனக்கு' என்று நச்சரித்தாய். தொலைத்துக் கொள்! புடவையை இடுப்பிலே கட்டிக்கிட்டுப் பட்டினி கிட. பண்ணையார் வீட்டு அம்மா இதை வேண்டாம்னுட்டாங்க!" என்று கூறிக் கொண்டே புடவையைத் தூக்கி ராசம்மாவின் மீது வீசி யெறிந்து விட்டு விடுவிடு வென்று வெளியேறினான் ரத்னசாமி.

கோபமே அடையாத புருஷன் கோபித்ததும், நிறைமாதக் கர்ப்பிணி என்றும் யோசிக்காது புடவையைத் தன் மேல் வீசி யெறிந்து விட்டுச் சென்றதும், அளவு கடந்த பசியின் தளர்வினாலும், மன வேதனையினாலும் உடலும் உள்ளமும் ஒருங்கே துடி துடித்தன ராசம்மாவுக்கு. விம்மி விம்மி யழுதாள். பசி காதை யடைத்தது. அட, பாவமே! நான் ஏன் அப்படிக் கேட்டேன். குடும்பக் கஷ்டம் தெரிந்திருந்தும் நான் அவரைப் புடவை கேட்டேனே! அவர் மனசைப் புண்படுத்தி விட்டேனே!' என்று மனம் மாழ்கினாள் ராசம்மா.

'நேரம் ஊர்ந்து கொண்டே யிருந்தது. புடவைப் பொட்டலத்தை எடுத்துப் பிரித்தாள். பச்சைப் புடவை அதில் பளபளத்துக் கொண்டிருந்தது. அவள் உள்ளத்தில் ஒரு யோசனை பளிச்சிட்டது. அந்தப் புடவையைக் கையிலெடுத்துக் கொண்டு விடு விடுவென்று பண்ணையார் வீட்டை நோக்கி நடந்தாள். உடலின் அயர்வு அவளை நடக்கவொட்டாமல் பின்னுக் கிழுத்தது.

கொல்லைப் புறமாகச் சென்று உள்ளே நுழைந்தாள் ராசம்மா! இவளைக் கண்டதும் "யாருடி அது! எங்கே வந்தாய்?" என்று இரைந்தாள் பண்ணையாரின் சம்சாரம்.

"நான்தானுங்க, புடவைக்காரரின் மனைவி! நீங்க ஏதோ புடவை வேணுமென்று கேட்டீங்களாமே, பச்சை நிறத்தில். அதை எடுத்து வந்திருக்கேனுங்க."

"உன் கணவர் தான் காலையிலே கொண்டு வந்தான். நான் வேண்டாம் என்று சொல்லி யனுப்பி விட்டேனே! இப்போது நீ எதற்கு அதை எடுத்துக் கொண்டு வந்தாய்?"

"நீங்க வேணும் என்று கேட்டதனாலே தானுங்க கையிலே பணமில்லாமல் ராமய்யச் செட்டி கிட்டே ஒண்ணுக்கு ரெண்டு வட்டி கொடுத்து, பணம் வாங்கி, நூல்வாங்கி வந்து கொடுத்தாங்க. இப்போ புடவையை வேண்டாம் என்றால் நாளைக்குக் கடன்காரன் வந்து ரூபாயைக் கேட்பானுங்களே! ஏழை நாங்க என்ன செய்வோம்! இதை நீங்கள் விலைக்கு எடுத்துக் கிட்டா கடன்காரனுக்கு கொடுத்து விட்டு ரெண்டு நாளைக்காவது நாங்க சோறு சாப்பிடுவோம். இப்ப நாங்க

கணக்காய் நின்று கொண்டிருந்தான் வாசலில். எங்கு வந்தாய்? எதற்கு வந்தாய்? என்று கேட்பவர்களில்லாது நின்று பார்த்து விட்டு வீடு திரும்பிவிடலாமென்று எண்ணினான். நல்ல வேளையாக எஜமானியம்மாள் யதேச்சையாக வாசலுக்கு வந்தாள். புடவையை அவளிடம் நீட்டி, கூழைக் கும்பிடு போட்டான் ரத்னசாமி.

புடவையைக் கையில் வாங்காமலேயே, "என்ன அது?" என்று வெகு அலட்சியமாகக் கேட்டாள் எஜமானி.

"இல்லீங்க...வந்து...நீங்க...பச்சை நிறத்தில் புடவை நெய்துகிட்டு வரச் சொன்னீங்களே......அதைத்தான் கொண்டு வந்திருக்கிறேனுங்க" என்று கூறிப் புடவையைக் கட்டியிருந்த காகிதத்தைப் பிரித்தான்.

"வேண்டாம்...வேண்டாம் பிரிக்காதே! உன்னிடம் சொல்லிப் பத்து நாட்களுக்கு மேலாகி விட்டது. இது வரையில் பார்த்தேன். கொண்டுவரவில்லை நீ. வேறு புடவை வாங்கிவிட்டேன். இன்னொரு சமயம் பார்த்துக் கொள்ளலாம், போ" என்று கூறி விட்டு உள்ளே சென்று விட்டாள் எஜமானி!

அவ்வளவுதான்! ரத்னசாமிக்கு உலகமே இருண்டு போய்விட்டது போலிருந்தது. அப்படியே கற்சிலையாகச் சமைந்து நின்று விட்டான். 'நாளைக்கு ராமய்யச் செட்டிக்கு ரூபாயைத் திருப்பிக் கொடுத்தாக வேண்டுமே, என்ன செய்வது?' என்று நினைத்து அங்கலாய்த்து மனங் கலங்கினான்.

புடவையை எடுத்துக் கொண்டு தெருத் தெருவாய் அலைந்தான். ஒருவரும் விலை கேட்கவில்லை. அப்படி இரண்டொருவர் கேட்டால்கூட, நூல் கிரயத்திற்கும் கம்மியாகவே துணிந்து கேட்டார்கள். தவித்தான் ரத்னசாமி. தளர்ந்த நடையுடன் வீடு வந்தான்.

வாடின கொடியைப் போல் துவண்டிருந்த ராசம்மாவைக் கண்டதும் வெளியில் சென்ற

சாப்பிட்டு நாலு நாளாச்சுங்க" என்று பரிதாபமாகக் கெஞ்சினாள் ராசம்மா.

"இதென்னடி இது தொந்தரவாப் போச்சு! உனக்குச் சோற்றுக்கு இல்லையென்பதற்காக நான் உன்னிடம் புடவை வாங்கிக் கொள்ள முடியுமா?"

"அது சரிதானுங்க. நீங்க முதலிலே வேணும் என்று சொன்னதினாலேதானுங்க ரூபா கடன் வாங்கி நூல் வாங்கினாரு."

"சரி! இந்தப் புடவையின் விலையென்ன?" என்று வினவினாள் பண்ணையாரின் மகள்.

"இது அம்மாவுக்காக செய்ததுங்க. பதினெட்டு முழமுங்க. இருபத்திரண்டு ரூபாய்!"

வீட்டினுள் சென்று அப்புடவைக்குரிய தொகையை எடுத்து வந்து ராசம்மாவிடம் கொடுத்து விட்டு, "இனி அடிக்கடி இந்தப் பக்கம் வந்து கொண்டிரு; எல்லோருக்கும் சொல்லிக் கூடிய மட்டும் கைத்தறிச் சேலைகளையே வாங்கும்படி சொல்லுகிறேன்" என்று கூறினாள் பண்ணையாரின் மகள்.

* * *

வீட்டுக்கு வந்ததும் அரிசி வாங்கிக் கொண்டு வந்து சோறு சமைத்து வைத்தாள். வீட்டு வேலைகளையெல்லாம் முடித்துக் கொண்டு வாசற்புறத்தில் வந்து உட்கார்ந்தாள் ராசம்மா!

அப்போது துவளும் நடையுடன் தள்ளாடிக் கொண்டு வந்த ரத்னசாமி, "இந்தா, ராசம்மா! இந்த இரண்டு ரூபாய்க்கு அரிசி வாங்கி வந்து சோறாக்கு. பசி வயிற்றைப் புரட்டுது" என்று கூறிய படியே ராசம்மாவிடம் இரண்டு ரூபாய்களைக் கொடுத்தான்.

"ஏது இந்த ரூபாய்? யார் கிட்டே கடன் வாங்கியாந்தீங்க?" என்றாள் ராசம்மா.

"யாரோ, என்னவோ கட்சியாம். அதுக்கு அவங்களோடே ரோடிலே கூச்சல் போட்டுக் கத்திக்கிட்டுப் போனா, தலைக்கு ரெண்டு ரூவா கொடுக்கிறாங்களாம். அதுக்குத்தான் நாளைக்கு வரேன்னு சொல்லிவிட்டு, இப்போ அச்சாரமா இரண்டு ரூபாய் வாங்கி வந்தேன் நாளைக்கு நீயும் வந்தாயானால் நாலு ரூபாய் கிடைக்கும்" என்றான்.

"அட, பாவமே! அந்தக் காலிக் கூட்டத்திலே நீங்களும் சேர்ந்து விட்டீங்களா?"

"சரியான வழியிலேதான் சம்பாதிக்க முடிய வில்லையே ராசம்மா!"

"ஏன் முடிய வில்லை? இதோ பாருங்க! அந்தப் பச்சைப் புடவையைப் பண்ணையார் வீட்டிலே கொண்டுபோய்க் கொடுத்து விட்டு பணம் வாங்கி வந்து விட்டேன். இதிலே அந்த ராமய்யச் செட்டியாருக்குக் கொடுக்க வேண்டியதை கொடுத்து விடுங்கள்."

"என்ன? பண்ணையார் வீட்டிலே புடவையைக் கொடுத்து விட்டுப் பணம் வாங்கி வந்தாயா? அவங்கதான் காலையில் புடவை வேண்டாம் என்று சொல்லி அனுப்பி விட்டாங்களே!"

"நானே போய் எல்லாம் விவரமா எடுத்துச் சொன்னேன். பிறகு அவங்க மனசு இளகிப் போய் அந்தப் புடவையையும் வாங்கிக்கிட்டு இனிமே நாங்க கைத்தறிப் புடவையும், வேஷ்டியும் வாங்கிக் கொள்ளுகிறோம். எனக்குத் தெரிஞ்சவங்ககிட்டேயெல்லாம் சொல்லி அவங்களையும் கைத்தறித் துணிகளையே வாங்கும்படியாகச் சிபார்சு செய்யறேன்னு சொல்லி என்னை அடிக்கடி அங்கே வந்து போகச் சொன்னாங்க."

"நீ சொல்கிறதெல்லாம் எனக்கு ரொம்ப ஆச்சரியமாகவே இருக்கிறது. என்னால் நம்பவே முடிய வில்லையே, ராசம்மா!"

"இதோ பாருங்க! நமக்குக் கஷ்டம் தீர்ந்து சௌக்கியம் வரதுன்னா அது வந்து சர்க்காராலேயும் பொது ஜனங்களாலேயுந் தானுங்க! கண்டவங்க சொல்றதைக் கேட்டுக்கிட்டு நம்ம பேரைக் கெடுக்காதீங்க. காலமே போயி இந்த இரண்டு ரூபாயைத் திருப்பிக் கொடுத்துட்டு வந்திடுங்க" என்று பரிவோடு பவ்யமாகக் கூறினாள் ராசம்மா!

"அப்படியே செய்கிறேன்" என்று சொல்லிச் சாப்பிடச் சென்றான் ரத்னசாமி.

# கம்பர் தரும் ராமாயணம்

"ஒரு புதுப் புஸ்தகம் வெளியானால் நான் உடனே ஒரு பழைய நூலை வாசிக்கிறேன்" என்று கூறினார் ஓர் ஆங்கில ஆசிரியர்.

அவர் கூறியவற்றில் எவ்வளவோ பொருள் இருக்கிறது. அந்த ஆசிரியரைப் போலவே நம்மில் பலரும் உணர்ந்திருக்கக் கூடும். ஆனால் நம் பழைய நூல்களை, நம் அரும் பெரும் தமிழ் இலக்கியச் செல்வங்களை, நல்ல முறையில் பதிப்பித்த புஸ்தகங்கள் இல்லையே என்ற ஆற்றாமையும் ஏற்பட்டிருக்கக்கூடும். அந்த ஆற்றாமை இனி வேண்டிய தில்லை என்ற நற்செய்தியைச் சொல்ல விரும்புகிறோம்.

ஆயிரம் வருஷப் பழமையாகியும், புத்தம் புதிய ஒளியுடன் பிரகாசிக்கும் கவிச் சக்கரவர்த்தி கம்பரின் ராமாயணம் ரஸிகமணி டி. கே. சி. அவர்களால் பதிப்பிக்கப்பட்டு வெளியாகியிருக்கிறது. இந்நூலைப் பார்த்த பிறகு, மேலே கூறிய ஆங்கில ஆசிரியர் தமிழராகப் பிறந்து இப்பொழுது நம்மிடையே இருந்தாரில்லையே என்ற ஏக்கம் ஏற்படுகிறது. ஆங்கிலத்தில் ஆயிரம் வருஷத்துக்கு முற்பட்ட நூல், கவிதைச் சுவை இவ்வளவு நிரம்பிய நூல் ஏது? மற்ற எந்த பாஷையில்தான் கம்பரின் கவிதைக்கு இணையாகச் சொல்லக்கூடிய நூல் இருக்கிறது?

இப்படி நாம் சொன்னால், இது உயர்வு நவிற்சியாகத் தோன்றக் கூடும். நல்லது; மகரிஷி வ. வே. சு. ஐயரைப் பற்றிக் கேள்விப்படாத தமிழர் இருக்க முடியாது. ஐயரவர்கள் வடமொழி, கிரேக்க மொழி, லத்தின் மொழி, ஆங்கிலம், பிரஞ்சு ஆகிய பல பாஷைகளில் தக்க புலமை சான்றவர்கள். அவர்கள் கவிச் சக்கரவர்த்தியைப் பற்றிக் கூறுவதைச் சற்றுக் கேளுங்கள்:—

"உலக வாழ்க்கையில் மனிதன் பெறக் கூடிய பேறுகள் பலவற்றுள் கம்பனுடைய ராமாயணத்தைப் படித்து அனுபவிப்பது மிகப் பிரதானமானவைகளில் ஒன்று என்பது எம்முடைய அபிப்பிராயம். ஏனெனில் ஆத்மானுபவத்துக்கு அடுத்தபடி கவிதானுபவம்தான் மனிதனுக்கு உன்னதமான ஆனந்தத்தைத் தருகிறது. கவிதையில் தமிழ் பாஷையில் மாத்திரமல்ல; மற்றெந்த பாஷையிலுங் கூடக் கம்ப ராமாயணத்திற்கு மேலான கவிதை எங்கே காணலாகும்...? கவிதா லோகத்தின் பேரரசர் என்று சொல்லத் தகுந்தவர்கள் எல்லாம் கம்பனுடைய சந்நிதியில் முடிசாய்த்து வணங்க வேண்டியதுதான்."

மேல்நாட்டு இலக்கியங்களிலும் தமிழிலும் ஓரளவு பயிற்சியுள்ளவர்கள், வ. வே. சு. ஐயரின் வாக்கு உண்மையில் 'மகரிஷியின் வாக்கே' என்று வேத கால ரிஷிகளுடைய வாக்குடன் சமமாக மதித்துப் பூரிப்படைவார்கள். இத்தகைய மகிழ்ச்சி சாதாரணத் தமிழ்ப் பயிற்சி பெற்றவர்களும் அடையக் கூடிய வகையில், ரஸிகமணி டி. கே. சி. அவர்களின் பதிப்பு அமைந்திருக்கிறது.

கம்பருடைய பாடல்கள் ஒவ்வொன்றின் உட்பொருளும் எளிய தமிழில் பாட்டின் முன்னுரையில் விளக்கப்பட்டிருக்கிறது. பாடல்களோ, சீர் பிரித்து, பதம் பிரித்து, ஒரு வரியில் இரண்டு சீர்களுக்கு மேற்படாமல் அழகிய எழுத்துக்களில் அச்சிடப்பட்டிருக்கின்றன.

அடிக் குறிப்பில் சற்றுக் கடினமான வார்த்தைகளுக்குப் பொருளும், பாட்டில் தொனிக்கும் நயங்களும் பாவங்களும் குறிக்கப்பட்டிருக்கின்றன. இவ்வளவு உதவிகளுடன் யாருமே பதிப்பித்திராத வகையில் ரஸிகமணி இந்நூலைப் பதிப்பித்திருக்கிறார்கள். இந்நூல் கையிலிருந்தால் போதும், மகரிஷியின் வாக்கின் உண்மை புலப்பட்டு விடும். மகரிஷியின் வாக்கு இலக்கணம் என்று கொண்டால் ரஸிகமணியின் பதிப்பு அதற்கு இலக்கியமாக விளங்குகிறது.

ரஸிகமணி தமது பதிப்பிற்குச் செய்துள்ள நாமகரணம் நமது சிந்தனையைக் கிளறுவதாக அமைந்திருக்கிறது. "கம்பர் தரும் ராமாயணம்" என்று பெயர் சூட்டியிருக்கிறார்கள்.

இன்று 'கம்ப ராமாயணம்' என்று வழங்கும் புஸ்தகங்களில் கம்பர் பாடியவை தவிர இன்னும் யார் யாரோ பாடிய செய்யுள்கள் எத்தனையோ இருக்கின்றன. இது பற்றி ரஸிகமணியவர்கள், "கம்பராமாயணத்தில் காண்கிற மாதிரி வேறு எந்த நூலிலும் காண முடியாத வஸ்து ஒன்று: அதுதான் செருகு கவி. கம்பராமாயண புஸ்தகம் செருகு கவி மயம் என்று சொன்னால் குற்றமில்லை" என்று கூறுகிறார்கள்.

இத்மாதிரியானதோர் புஸ்தகத்திலிருந்து ரஸிகமணியவர்கள் கம்பர் பாடல்களாகக் கண்டு பிடித்துத் தந்திருக்கிறார்கள். தாம் விட்டு விட்ட பாடல்கள் கம்பர் பாடியவையல்ல என்று அழுத்தந் திருத்தமாகக் கூறுகிறார்கள்.

அப்படியானால், ரஸிகமணி, "இது கம்பர் பாடியது, இது கம்பர் பாடியதல்ல" என்று எப்படிக் கண்டு பிடித்தார்கள் என்ற ஒரு கேள்வி எழுகிறது.

போலி வைரத்துக்கும் உண்மையான வைரத்துக்கும் உள்ள வித்தியாசம் நம் சாதாரணக் கண்களுக்குப் புலப்படுவதில்லை. ஆனால் சிறந்த வைர பரிசோதகருக்கோ பார்த்த மாத்திரத்தில் புலப்பட்டு விடுகிறது! 'இது போலி; இது உண்மை!' என்று

அடித்துச் சொல்லுகிறார். அவரிடம் 'நீங்கள் எப்படிக் கண்டு பிடிக்கிறீர்கள்?' என்று கேட்டால் அவர் என்ன பதில் சொல்லுவார்? 'இது வெகு நாளையப் பழக்கத்தின் காரணமாக வருவது' என்றுதான் கூறுவார்.

அப்படித்தான் ரஸிகமணியும். அவர்கள் தமிழின் உயிர் நிலையை உணர்ந்தவர்கள். சென்ற நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழுடனும், தமிழ்க் கவியுடனும், கம்பர் கவிதா விலாசத்துடனும் அல்லும் பகலும் அனவரதமும் பழகி வந்தவர்கள். அதனால் நூற்றுக் கணக்கில் மலிந்து கிடக்கும் செருகு கவிகளின் படலங்களிலிருந்து ஒன்றிரண்டு சுடர் விட்டுப் பிரகாசிக்கும் கம்பர் பாடல்களைக் கண்டு பிடித்து விடுகிறார்கள். மேலும் 'இதுதான் கம்பர் கவி' என்று எவ்வாறாக நிர்ணயிருக்கிறார்கள் என்பதை அவர்கள் வாய்மொழியாகவே கேட்போம்:

"கம்பருடைய கவிகளுக்குத் தனியான ஒரு சுவையுண்டு. செய்யுளினங்கள் பூர்வமானவைதான். ஆனால் இதய பாவத்தை உட்கொண்ட செய்யுள்கள் அடியெடுத்து வைக்கும்போது, தனியான கதி நயங்களைக் காண்கிறோம். அவைகளின் பாவமும் வேகமும் எங்கேயோ இருந்து வந்தமாதிரி புத்தம் புதியவையாய் இருக்கும். ஒவ்வொரு செய்யுளிலும் ஒரு தனியான ரஸம். கவிக்கு ஏதோ நவரஸம் என்கிறார்கள். ஆனால் கம்பருடைய கவிகளைப் பார்க்கும் போது ஆயிரக்கணக்கான ரஸங்கள் உண்டென்று சொல்ல வேண்டியிருக்கிறது.

"இப்படித் தனித்த ரஸம் வாய்ந்த, உயிர்த் தத்துவம் வாய்ந்த கவிகளாய் இருப்பதாலேயே கம்பருடைய கவிகளை இனங் கண்டு கொள்ள முடிகிறது."

நாற்பதாண்டுகளுக்கு மேலாகக் கம்பருடைய கவிதா ரஸத்தில் மூழ்கி, ஈடுபட்டு, பக்தி செலுத்தித் தமது எழுபத்திமூன்றாவது வயதில் இந்நூலை வெளியிட்டார்கள். ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக அகில உலக பாஷைகளின் கவிதா லோகத்தில் ஏக சக்ராதிபதியாக விளங்கும் ஒரு மாபெரும் கவிஞனின் நூலைப் பதிப்பிப்பதில் உள்ள மாபெரும் பொறுப்பை யுணர்ந்து இந் நூலைத் தமது முதிர்ந்த பருவத்தில் பதிப்பித்தார்கள். தாம் கண்ட இன்பத்தை, தம் மனத்தில் உறுதி கொண்ட எண்ணத்தைத் தமிழுலகுக்கு அறிவிக்க வேண்டும் என்றே இந்நூலை வெளி யிட்டார்கள்!

இப்பொழுது பாலகாண்டம் அயோத்தியா காண்டம் இரண்டும் சேர்ந்து ஒரு புஸ்தகமாக வெளிவந்திருக்கிறது.

கூடிய விரைவிலேயே மற்றக் காண்டங்களும் வெளிவரும் என்ற செய்தி தமிழன்பர்களுக்கு உற்சாகம் அளிக்கும்.

கிடைக்குமிடம்: பொதிகைமலைப் பதிப்பு, திருக்குற்றாலம், தென்காசி. விலை: ரூ. 6-0-0.





# அவரைப் போல் காண்பதரிது!

கி. பாலசுப்பிரமணிய அய்யர் பி. ஏ. பி. எல்.

ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களின் பிரிவு அவருடைய நண்பர்களைப் பெருந் துயரத்தில் ஆழ்த்தியிருக்கிறது. அவர் தமிழ்த் தாயின் அரிய புதல்வராவர். முப்பது வருஷங்களுக்கு மேல் நான் அவருடன் நெருங்கிப் பழகும் பெரும் பேறு பெற்றவன். 30 வருஷங்களுக்கு முன் ஆங்கிலம் பயின்ற நம் தமிழ் மக்களில் பெரும்பான்மையோர் தமிழ் உணர்ச்சியையும் தமிழ்ப் பழக்கத்தையுமே இழந்து, தமிழ் தாய் பாஷையாக யிருந்தபோதிலும் அதை மறந்திருந்தார்கள். முக்கியமாகச் சிதம்பரநாதருடைய பெரு முயற்சியால் ஆங்கிலம் பயின்ற தமிழ் மக்கள் கம்ப ராமாயணம் முதலான தமிழ் நூல்களையும், உயர்ந்த காவியங்களையும் படித்து அவைகளுடைய பெருமையையும், கவிச் சுவையையும், சொல் நயங்களையும் அறிந்து மகிழும்படியான பாக்கியத்தைப் பெற்றார்கள். அடிப்படையான தத்துவங்களையும், காவிய ரஸ மேன்மையையும் அவர் தம்முடைய அழகிய கட்டுரைகளாலும் சொற்பொழிவுகளாலும் வானொலிப் பேச்சுகள் மூலமாகவும் தென்னிந்தியா முழுவதும் பரவச் செய்து வந்தார்.

இருபது வருஷங்களுக்குமுன் அவர் தியாகராய நகரில் வசித்து வரும் பொழுது தம்முடைய வீட்டில் விடுமுறை நாட்களில் கம்ப ராமாயண பாசுரங்களைப் படித்து அவற்றின் அழகையும் கருத்துக்களையும் நண்பர்களுக்குச் சொல்வது வழக்கம். அதைக் கேட்டவர்களில் நானும் ஒருவன். முதலியார் அவர்களுடைய வீட்டுக்கு, அவருடைய முக்கிய நண்பராகிய ராஜாஜி அவர்களும், பல தொல்லைகளின் நடுவில் இந்த உபந்யாஸங்களைக் கேட்டு இன்புறுவதற்கு வருவது வழக்கம். கல்கி ஆசிரியரும் தவறாமல் வருவார். பாடல்களின் கருத்துகளை அவர் அறிவிக்கின்ற முறை தனிப்பட்ட அழகு பொருந்தியது. மற்றவர் யாவரிடத்திலும் காண முடியாது. பாடல்களை அவரிடம் கேட்டபின் எனக்கு அவற்றின் கருத்து மறப்பதே இல்லை.

கம்ப ராமாயணத்தில் 'நகர் நீங்கு' படலத்தில் ஒரு பாசுரத்தை இங்கே குறிக்கின்றேன். இந்தப் பாசுரத்தின் கவிச்சுவையும் அழகும் அவர்களுடைய விரிவுரையைக் கேட்ட பிறகு என் மனத்தை விட்டு நீங்கவே யில்லை.

"நதியின் பிழையன்று
நறும் புனலின்மை யற்றே
பதியின் பிழையன்று
பயந்து நமைப் புரந்தான்
மதியின் பிழையன்று
மகன் பிழையன்று, மைந்த!
விதியின்பிழை நீயிதற்
கென்னை வெகுண்ட தென்றான்."

இந்தப் பாட்டைப் பற்றி அவர் பேசும் பொழுது அவர் ஆரம்பித்த முறையே வியப்பானது. உலகத்தில் மழை பெய்வதற்குக் காரணத்தைப் பற்றிச் சொல்லத் தொடங்கினார். அதாவது சூரியனிடத்திலே இருக்கும் சன் ஸ்பாட் (Sunspot) என்பவற்றின் மாறுதல்களையும், அதனால் வங்காளக் குடாக் கடலில் காற்றில் பள்ளம் ஏற்பட்டு அதன் காரணமாக பருவக்காற்று உண்டாகிக் காலா காலத்தில் மழை பெய்கிறது என்ற உண்மையையெல்லாம் விளக்கிவிட்டு, அதன் பிறகு பாட்டைப் படித்து நதியில் தண்ணீர் இல்லாமல் இருப்பது நதியின் குற்றமில்லையென்றும், அதற்குக் காரணம் நியதிதான் என்றும், அந்த நியதியினால் தான் சூரியனுடைய கோளத்தில் மாறுபாடுகள் ஏற்பட்டு அதன் மூலம் மழை பெய்யாமலிருப்பதோ, பெய்கிறதோ நேருகிறதே ஒழிய, நதியின் பேரில் பொறுப்பைச் சுமத்துவதற் கில்லை யென்றும் விரிவாகக்கூறினார்.

அதுபோல் ராமன் கானகம் புகும் சம்பவம் ஏற்பட்டதற்கு அரசனும் காரணம் இல்லை, தாயாகிய கைகேசியும் காரணமில்லை யென்றும், நியதிதான் அதற்கு அடிப்படைக் காரணம் என்றும், வீணாக மற்றவர்களைக் குற்றம் சாட்டக்கூடாது என்றும் ராமன் லக்ஷ்மணனுக்குச் சொன்ன சமாதான மொழிகளின் அழகை, கேட்பவர்களின் மனத்தில் நன்கு உணர்த்தினார். இம்மாதிரி அவர் பல சொற்பொழிவுகளில் தமிழ்ப் பாடல்களின் சுவையை எடுத்துக் காட்டியிருக்கிறார்.

கவிதையின் உயர்வைப் பற்றி அவர் அடிக்கடி சொல்வது என்னவென்றால், அந்தக் கவிதையின் கருத்து வாழ்க்கையை யொட்டி இதயத்தில் ஒலிக்கும்படி செய்கிற உருவம் பெற்றிருக்க வேண்டும் என்பது தான். அப்படி உருவம் பெற்றிருந்தால் அது மெச்சத்தக்கது. இதைக் கிரேக்க தேச அறிஞர்கள் Form என்ற சொல்லால் குறிப்பது வழக்கம்.

மற்றொரு அபிப்பிராயத்தையும் அவர் வற்புறுத்துவதுண்டு. தாய் பாஷையில்தான் காவ்யங்களின் சுவை நமக்கு நன்கு புலப்படுமே தவிரப் பிற பாஷைகளில் அம்மாதிரியான உணர்ச்சி இதயத்தில் எழுவது சாத்யமன்று என்பது அவருடைய தீர்மானமான கொள்கை. காவியங்களைப் படித்து ஆனந்த மடைவதற்குத் தமிழ் மக்கள் கம்ப ராமாயணம் போன்ற உயர்ந்த தமிழ்க் காவியங்களைப் பார்க்க வேண்டுமே தவிர, மற்ற தேச காவியங்களைப் படிப்பதினால் அந்த ஆனந்தம் ஏற்படாது என்று அவர் அடிக்கடி சொல்லுவார். அதுவே நம்முடைய காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியாரைப் போல் பெரியவரை நாம் காண்பது அரிது. கடவுள் அவருடைய ஆத்மாவுக்குச் சாந்தியைக் கொடுத்து அவருடைய கீர்த்தி என்றும் பிரகாசிக்கும்படியாகச் செய்வார்.

# தேநீர்

## ஒவ்வொரு ஸ்டேஷனிலும்...



ஆண்டுதோறும் இந்திய ரயில்வேக்களில் பிரயாணம் செய்யும் 1247·3 லட்சம் பிரயாணிகளில் அநேகர் பிரயாண அலுப்பை சமாளிக்க தேநீரை அருந்துகின்றனர். தேனீர் பிரயாணத்தின் களைப்பை நீக்கி உல்லாச மூட்டுகிறது.

பரீட்சித்துப் பாருங்கள்!

**... அது உங்களுக்குத் தெம்பூட்டுகிறது**



மத்திய டீ போர்டு வெளியீடு

CTB 17 T

# டி. கே. சி. – சில நினைவுகள்

சோமு

திருநெல்வேலியில் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு "தேசிய வாலிபர் சங்கம்" என்ற இளைஞர் கூட்டம் நெல்லை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி ஆபீஸில் அதன் ஆதரவில் பணி செய்து வந்தது. இந்தச் சங்கத்தில் 1938-ம் ஆண்டில் "பாரதியார் விழா" டி. கே. சி. அவர்களின் தலைமையில் தாஸ் மைதானத்தில் நடைபெற்றது. சங்கத்தில் என்னோடு துணை உறுப்பினர்களாக இருந்த நண்பர்கள், அன்றையக் கூட்டம் ஒரே இலக்கிய மயமாக இருக்கும் என்றே எதிர் பார்த்தார்கள். தெய்வ பக்தி நிரம்பிய தொண்டர்கள் சிலர் "டி. கே. சி. இன்று— பாரதியாரின் கண்ணன் பாடல்களை விளக்கு வார்கள்" என்று பேசிக் கொண்டார்கள். ஆனால் நடந்தது என்னவோ வேறு !

நிகழ்ச்சிகள் தொடங்குவதற்கு முன்னால் இரண்டு பேர் எழுந்து "நாட்டு வணக்கம்" பாடினார்கள். உடனே தலைமை உரை ஆரம்பம் ஆயிற்று. ஆச்சரியம் என்ன வென்றால், டி. கே. சி. அவர்களும் அதே "நாட்டுவணக்கத்தை"யே தாமும் பாடினார்கள், ஒரு சிறு – இல்லை – பெரும் மாறுதலுடன் !

"வந்தே மாதரம் என்போம்!" என்று "வந்தே மாதரத்தில்" அழுத்தம் கொடுத்துத்தான் எல்லோரும் பாடுவார்கள். ஆனால் டி. கே. சி. அவர்களோ,

"வந்தே மாதரம் என்போம்" என்று அந்த "என்போ"மில் உணர்ச்சியோடு அழுத்தம் கொடுத்துப் பாடினார்கள். உடனே சொன்னார்கள் :—

இந்தப் பாட்டு எழுந்த காலம், நம் நாட்டில் 'வந்தே மாதரம்' என்று சொன்னாலே வாய்ப் பூட்டுப் போட்ட காலம். அந்த வாய்ப்பூட்டை ஒரு அசைப்பு அசைக்கிறார் பாரதியார்.

"என்போம்"

வந்தே மாதரம் என்று நாங்கள் சொல்லத் தான் செய்வோம். அட அந்நியனே, உனக்கு அதன் அர்த்தம் தெரியவா செய்யும்? அர்த்தத்தைச் சொல்லுகிறோம் கேள்.

எங்கள்
மாநிலத் தாயை
வணங்குதும் என்போம்!
வந்தே மாதரம் என்போம்!

நீ என்ன எங்களைச் சொல்லக் கூடாது என்று கண்டிப்பது? அப்படித்தான் சொல்லு வோம் நாங்கள்.

வந்தே மாதரம் என்போம்!

இந்தப் பாடலைப் பாடி முடித்தார்களோ இல்லையோ, அங்கே கூடியிருந்த நூற்றுக் கணக்கான மக்களுக்கும் அப்படியே ஒரு வெறி உண்டாகி விட்டது! "வந்தே மாதரம்!" என்று கூட்டத்திலிருந்து ஒரு குரல் கம்பீரமாக எழுந்தது. அவ்வளவு தான்; எத்தனையோ நூறு குரல்கள் ஒன்று சேர்ந்து ஏககாலத்தில் "வந்தே மாதரம்!" என்று ஆரவாரித்தன !

ஆயிரம் சொற்பொழிவுகளினால் உண்டாக்கக்கூடிய ஒரு வெறியை, ஐந்து நிமிஷத்தில் ஊட்டி விட்டது ரஸிக மணி டி. கே. சி. அந்தப் பாட்டுக்குச் சொன்ன விளக்கம் !



1910-ம் ஆண்டில் டி. கே. சி.

இன்னொரு சமயம் டி. கே. சி. தலைமை வகித்த இலக்கியக் கூட்டம் ஒன்றில் ஒரு 'எக்கச்சக்கமான' நிலைமை ஏற்பட்டு விட்டது! ஹிந்தி மொழியைப் பற்றி ஏகப்பட்ட ஆராய்ச்சியும் காரசாரமான விவாதமும் மும்முரமாக நடந்து கொண்டிருந்தசமயம் அது. டி. கே. சி. தலைமை வகித்த கூட்டமோ என்றால், நூற்றுக்கு நூறு இலக்கியக் கூட்டம். ஆனாலும் அங்கே பேசிய சொற்பொழிவாளரில் ஒருவர் விவாதத்தைக் கிளப்பி விட்டு விட்டார்! அத்தோடு "தமிழில் வீரம் இல்லை! ஹிந்தி மொழியில் வீரம் இருக்கிறது!" என்று ஒரு பெரும் போடும் போட்டு விட்டார். மறு கணம், கூட்டத்திலே "ஹை! ஹூ!!" என்று குமைச்சல் ஏற்பட்டு விட்டது! பின்னால் பேசிய சொற்பொழிவாளரின் கண்டனம், பிறகு கண்டனத்துக்கு மறுப்பு, அதை யடுத்துக் கண்டன மறுப்புக் கண்டனம் என்று மேலே மேலே போய்விடுமோ என எண்ணிய தருணத்தில், சிரித்துக் கொண்டே டி.கே.சி. எழுந்தார்கள். கூட்டத்தில் ஒரு அமைதி நிலவிற்று. பாஷைகள் சம்பந்தமாக டி. கே. சி. யின் கருத்து அங்கே பலருக்கும் தெரியும். எந்த பாஷையிலும் அவர்களுக்குத் துவேஷம் கிடையாது. ஹிந்தியிலும் கிடையாது. அதே சமயம், தமிழனுக்குத் தமிழ்

தான் ஜீவநாடி என்பது அவர்களுடைய ஆணித்தரமான முடிவு. இதைத்தான் சொல்லப் போகிறார்கள் என்று எல்லாரும் நினைத்தார்கள். ஆனால் டி. கே. சி. அந்த விஷயத்துக்கே போகவில்லை. சொன்னார்கள் :

"நண்பர்களுக்கு ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். பொதுவாக, பாஷை என்பது ஒரு கருவி. அவ்வளவுதான். இந்த உண்மையை நாம் மறந்துவிடக் கூடாது. ஒரு சிறு பெண்ணிலைக் கையில் வைத்துக்கொண்டு வீராதி வீரனையே பயமுறுத்தி விடலாம். 'கொன்று விடுவேன், ஜாக்ரதை!' என்று ஆவேசத்தையே அந்தப் பெண்ணிலில் காட்டி விடலாம்! அதுபோல ஒரு பெரிய உலக்கையைக் கையில் வைத்துக் கொண்டே "வாடா, கண்ணே!" என்று ஒரு குழந்தையை அன்போடு அருகிலே அழைத்து விடலாம். எல்லாம் ஜாடையை, முறையைப் பொறுத்தது. பாஷையும் அது போலத் தான். வீரமோ கருணையோ பெண்ணிலுக்குள் இல்லை. உலக்கைக்கு உள்ளும் இல்லை."

நண்பர்களோடு பேசிக் கொண்டிருப்பது என்றால், மேடைப் பிரசங்கத்தைவிட அவர்களுக்கு உகப்பான காரியம். அதிலும், விஷயங்களை நன்றாக உணர்ந்து அனுபவிக்கக் கூடியவர்களைக் கண்டு விட்டாலோ ஒரே எக்களிப்புதான் அவர்களுக்கு! இது சம்பந்தமாக அவர்கள் அற்புதமான உண்மை ஒன்றைக் குறிப்பிட்டார்கள் :—

"பாஷையோ, பாடலோ, வேறு எந்தக் கலையானாலும் சரி, அனுபவிக்கிறவர்களை நோக்கியே எழுவது; பசுவுக்குப் பால் கன்றை நோக்கிச் சுரப்பது போலத்தான். கடாக்ஷம் கடாக்ஷம் என்பதெல்லாம் ரஸிகர்களுடைய ஆனந்தத்தோடும் வியப்போடும் மலரும் கண்கள்தான்!"

இது டி. கே. சி. யின் அமர வாக்கு. அவர்களுக்கு நாம் இனிச் செய்யக்கூடிய ஆத்ம அஞ்சலி "ஆனந்தத்தோடும் வியப்போடும்" தமிழையும், தமிழை ஒட்டிய கலைகளையும் அனுபவிப்பதுதான்!

# கவிதையின் குரல்

## பெ. தூரன்

சுமார் இருபத்தைந்து ஆண்டுகளிருக்கலாம். ஒருநாள் மாலையில் பச்சையப்பன் கல்லூரியிலே கம்பராமாயணச் சொற்பொழிவு ஒன்று நடக்கப் போகிற தென்று கேள்விப்பட்டு மிகுந்த ஆவலோடு அங்கு சென்றேன்.

ரஸிகமணி டி. கே. சி. யின் பேச்சை அன்று தான் முதல் தடவையாக நான் கேட்டேன். அந்த மாதிரி கம்பராமாயணச் சொற்பொழிவை அது வரை நான் கேட்டதில்லை. கம்பன் கவிதைத் தேனை உண்மையானபடி பருகி மற்றவர்களுக்கும் அதை வழங்க ஒருவர் கிடைத்திருக்கிறார் என்று எண்ணிக் குதூகல மடைந்தேன்.

கம்பராமாயணச் சொற்பொழிவு என்றால் அது வரையில் நான் கேட்டிருந்த முறையே வேறு. கவிதையை அக்குவேறு ஆணிவேறாகப் பிரித்துச் சொற்களுக்குப் பலவகையான பொருள் கண்டு பிடித்துப் பிரசங்கியார் கேட்பவர்களை அப்படியே பிரமிக்க வைத்து விடுவார். "பாரதம் பாட்டறாது; ராமாயணம் பொருள் அறாது" என்று பழமொழி சொல்லுவார்கள். பிரசங்கியாரின் சாதுரியத்திலே கம்பராமாயணத்திற்குப் பொருள் சிக்கல் சிக்கலாக வளர்ந்து கொண்டேயிருக்கும். 'எண்ணிலா அருந்தவத்தோன்' என்று விசுவாமித்திரரைக் கம்பன் குறிப்பிட்டால் அந்தத் தொடருக்கு ஒன்றிரண்டு விளக்கங்களோடு பிரசங்கியார் திருப்தியடைய மாட்டார். 'எண்ணில் ஆ வருந் தவத்தோன்' என்றும், 'எண் நிலா அருந்தவத்தோன்' என்றும், 'எண் நிலாவு அருந்தவத்தோன்' என்றும் இப்படியாக வெவ்வேறு வகையிலே சொற்களைப் பிரித்துச் சமத்காரமாக விளக்கம் கூறுவார். 'கங்கையிரு கரையுடையான்' என்று குகனைக் கம்பன் வருணித்தால் அதற்கு வெளிப்படையாகத் தோன்றும் பொருளிலே பிரசங்கியாருக்குக் கவனம் செல்லாது. திருமாலின் இரண்டு பாதங்களே கங்கையினுடைய இரு கரைகள் என்று அவர் பொருள் சொல்லுவார். கேட்பவர்களுக்கு ஒரே மலைப்பாக இருக்கும். பிறகு பிரசங்கியார் விளக்கம் செய்யத் தொடங்குவார். பிரமன் திருமாலுக்கு அபிஷேகம் செய்த நீர் அவருடைய இரு பாதங்களின் மத்தியிலே ஓடியதாம். அதுவே கங்கையாயிற்றாம். ஆகவே அந்தக் கங்கையின் இரு கரைகள் திருமாலின் திருப்பாதங்களே என்றும், திருமாலுடைய அவதாரமான இராமனின் இரண்டு பாதங்களையும் உள்ளத்திலே இடைவிடாது கொண்டிருப்பவன் குகன் ஆகையால் அவனைக் 'கங்கையிரு கரையுடையான்' என்று கம்பன் வருணிக்கிறான் என்றும் பிரசங்கியார் வியாக்யானம் செய்வார். இவ்வாறு புலமையினால் பெற்ற சமத்காரமான பேச்சைக் கேட்டுக் கொண்டு, அதுவே கம்ப சித்திரம் என்று அப்பொழுது பெரும்பாலும் நம்பிக் கொண்டிருந்தோம்.

டி. கே. சி. யின் சொற்பொழிவு இந்த முறையினின்றும் முழுதும் வேறுபட்டிருந்தது. கம்பனுடைய கவிதை இன்பம் அவர் பேச்சிலே சொட்டிக்கொண்டிருந்தது. தமிழ் என்னும் கடலைக் கடைந்து கம்பன் உலகத்தோருக்கு அமுதம் வழங்கினான் என்பதை உணர்ந்தேன். கவிதைக்கு விளக்கம் கூறும் அவருடைய முறை கம்ப ராமாயணச் சொற்பொழிவில் மட்டுமல்லாமல், கவிதையைப் பற்றிய எந்த விளக்கத்திலும் ஒரு பெரிய மாறுதலை உண்டுபண்ணி விட்டது. அந்தக் காலத்திலே ஆங்கில வகுப்பிலே ஷேக்ஸ்பியரையும் மற்றக் கவிஞர்களையும் படித்து அனுபவித்த முறை வேறு; தமிழ் வகுப்பிலே தமிழ்க் கவிஞர்களைப் படித்து அனுபவித்த முறை வேறு. அங்கே கவிதையைச் சுவைத்தோம்; இங்கு கவிதையைப் பதம் பதமாகக் கூறுபோட்டு அதிசயித்துக் கொண்டிருந்தோம். அனுமன் கையில் கிடைத்த முத்துமாலை போலத் தமிழ்க் கவிதை உருவங் குலைந்து சிதறிக் கொண்டிருந்தது. அந்த நிலைமையை மாற்றுவதற்கு முக்கிய காரணமாக இருந்தவர் ரஸிகமணி டி. கே. சி. அவர்கள்.



கவி தாகூரின் சாந்தி நிகேதனத்தில் தமிழ் நூல் நிலையத்தை ரஸிகமணி திறந்து வைக்கிறார்.

கவிதைக்கு ஒரு தனிப்பட்ட சக்தியிருக்கிறது: நீள நீளப் பேசி விவரிக்க முடியாத உணர்ச்சிகளையும், எண்ணங்களையும் நல்ல கவிதை ஒரு வரியிலே எப்படியோ அற்புதமாக வெளிப்படுத்தி விடுகிறது என்கிற உண்மையை டி. கே. ஸி. நன்ருக எடுத்துக் காட்டினர். கவிதையின் சொல் அழகு, சந்த அழகு எல்லாம் அவர் அதைப் பாடிக் காட்டும்போதே உணர்ச்சியோடு வெளிப்பட்டு விடும். கவிதையே தனக்கு விளக்கம் தெரிவித்துக் கொள்வதுபோல அமையும் அவர் பேச்சு.

உயர்ந்த கவிதை எப்படித் தெளிவாக இருக்கிறதோ, அப்படியே டி. கே. ஸி. யின் பேச்சும் இருக்கும். ஒரு கவிதையை அவர் சுவைத்து அனுபவிப்பது போலவே எல்லோரையும் அனுபவிக்கச் செய்து விடுவார். எளிமையான நடையிலே அழகான உதாரணங் காட்டிக் கவிதையின் உண்மையான வடிவத்தை நம் முன்னாலே கொண்டு வந்து நிறுத்துவதில் அவர் தனிச் சிறப்பு வாய்ந்தவர்.

கவிதையைச் சுவைத்து இன்புற அவர் உருவாக்கிய வழிக்கும் பழைய வழிக்கும் உள்ள வேறுபாட்டை ஒரு சம்பவத்தின் மூலம் நன்ருக விளக்கலாம். நல்ல பரதநாட்டியக் கச்சேரி ஒன்று ஒரு நாள் ஏற்பாடாகி யிருந்தது. அதற்கு நான் போக முடியவில்லை. பரதநாட்டியத்தைப் பற்றிய ஆராய்ச்சிக் கூட்டம் ஒன்றிலே நான் இருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது.

மறுநாள் ரஸிகமணியைச் சந்தித்தபோது நான் நாட்டியக் கச்சேரிக்கு வராததின் காரணத்தை அவர் விசாரித்தார். விஷயத்தைச் சொன்னேன். "அடடா! உண்மையான பரத நாட்டியத்தைப் பார்த்து அநுபவிப்பதை விட்டுவிட்டு, அங்கேஆராய்ச்சி செய்ய உங்களுக்கு என்ன இருந்தது!" என்று அவர் கேட்டார். எங்கள் பரதநாட்டிய ஆராய்ச்சியைப் போலப் பழைய முறையிலே கவிதை வறட்சியாக இருந்தது; டி.கே.ஸி. அவர்களின் கவிதை விளக்கம் பரத நாட்டியக் கச்சேரியை நேரில் பார்த்து அநுபவிப்பது போலச் சுவை பெற்று விளங்கிற்று.

இசையரங்கு ஒன்று ஒரு நாள் நடந்து கொண்டிருந்தது. ரஸிகமணி அதற்கு வந்திருந்தார். நான் அவர் அருகிலே அமர்ந்திருந்தேன். வித்வான் சிரமப்பட்டுப் பாடிக் கொண்டிருந்தார். அவர் பாடிய பாட்டுத் தமிழா, தெலுங்கா, சம்ஸ்கிருதமா என்பதைக் கூட எளிதிலே கண்டு கொள்ள முடியவில்லை. "சங்கீதத்தை அநுபவிப்பதாகப் பாவனை செய்து கொண்டு நாமெல்லாம் இப்பொழுது வேதனைப் பட்டுக் கொண்டிருக்கிறோம் என்பது தெரிகிறதா!" என்று அவர் என்னைக் கேட்டார். திடீரென்று பிறந்த அந்தக் கேள்விக்கு உடனே பதில் கூற முடியாமல் நான் தயங்கினேன். "ஏன், உண்மையை ஒப்புக் கொண்டால் சங்கீதம் தெரியாது என்று ஆகிவிடுமா!" என்று சொல்லி அவர் சிரித்தார். "நாம் கவிதையை அநுபவிப்பதும் இதே கணக்குத்தான்" என்று மேலும் அவர் பொருட் செறிவோடு கூறி விட்டு வித்வானிடம் கவனம் செலுத்தலானர்.

"சங்கீதம் எப்படி யிருந்தாலும் கவிதை பிழைத்துக் கொண்டது" என்றேன் நான்.

"எப்படி!" என்ருர் அவர்.

"கவிதைக்கு உயிர் கொடுக்கத்தான் டி. கே. ஸி. இருக்கிருரே!" என்றேன்.

தமிழ்க் கவிதை பிழைத்தது. அதன் உண்மையான சுவையை அறிந்து இன்புற வழி காட்டியவருள் முதலிடம் வகிப்பவர் ரஸிகமணி டி. கே. ஸி.



சென்னை கார்ப்பொரேஷன் கௌன்சிலரும், பிரபல அட்வகேட்டுமான ஸ்ரீ என். ராமநாத அய்யர் அவர்களின் குமாரி சௌபாக்கியவதி **ஜெயலக்ஷ்மிக்கும்**, ரிட்டயர்டு ரயில்வே டிப்டி சீப் இஞ்சினியர், ஸ்ரீ வி. கே. ராமச்சந்திர அய்யர் அவர்களின் குமாரர் லெப்டினண்ட் **ஆர். பிரபாகருக்கும்** (Ordnance Corps) சென்னையில் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. திருமணத்திற்கு நகர பிரமுகர்கள் பலரும், நண்பர்களும், உறவினர்களும் விஜயம் செய்தனர். மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துக்களும், பரிசுகளும் வந்து குவிந்தன. வாழ்க, மணமக்கள்!



# ஒற்றைத் தலைவலி ஒழிந்ததால்

## பல வருஷங்கள் யௌவன மடைந்தது போன்று உணர்கிறேன்

"பல வருஷங்களாக நான் இரத்த அழுத்தத் தலைவலியால் (Migraine) அவதி யுற்றேன். ஒரே தடவை மூன்று நான்கு நாட்கள் கடும் தலைவலியால் அவதிப்படுவது எனக்கு வெகு சகஜம். சுமார் மூன்று மாதங்களுக்கு முன், நிவர்த்தி எதிர் பாராவிடினும், மனமுடைந்து போனதினால், தினந்தோறும் தவறாமல் கொஞ்சம் க்ருஷன் உட்கொண்டு வந்தேன். முதல் வார முடிவில் தலைவலி ஏகதேசமாகக் குறைந்து விட்டது; மூன்றாவது வாரத்தில் அறவே மறைந்தொழிந்தது."–C.W.C.

கடுமையானதும் தீராததுமான தலைவலி உட்புற அவயவங்கள் அபாயத்துக்குள்ளா யிருக்கின்றன என்பதற்கறிகுறி. விஷத் தன்மை வாய்ந்த கழிவுப் பொருள்கள் ஒழுங்காக வெளியேற்றப் படாமல் உட்புறமே சேமிக்கப் படுகின்றன. இவ் விஷங்களை ஒழித்து அவை மறுபடியும் உண்டாகாமல் தடுங்கள்—தலைவலிகள் தாமே போய்விடும் நிரந்தரமாக. "க்ருஷன்" இப்பணியைச் செய்வதால் துரிதமான நிவாரணத்தையும் புத்துணர்ச்சியையும் அளிக்கிறது.

**"க்ருஷன்"** உங்கள் ஆரோக்கியத்திற்கும் ஆனந்தத்திற்கும் உதவுகிறது

KSA 3




ரஸவாதி

அந்தி மயங்கும் நேரம். விளக்கேற்றி வைத்து விட்டுப் பூஜை அறையில் உட்கார்ந்து உருக்கமாக வீணை வாசித்துக் கொண்டிருந்தாள் ரமா. அந்த இன்னிசை பங்களா முழுவதும் அலை அலை யாகப் பரவி ஒரு விதத் தெய்வீகமான குளிர்ச்சியை ஏற்படுத்திக் கொண்டிருந்தது. தோட்டத்தில் உட்கார்ந்து அந்த அமுத கானத்தை ரசித்துக் கொண்டிருந்தான் பாஸ்கரன்.

சட்டென்று வீணைகானம் நின்றது. திடுக்கிட்டுத் திரும்பின பாஸ்கரன் பூஜை அறையின் ஜன்னலுக் கப்பால் ரமாவின் அழகிய வதனத்தைக் கண்டான். அவன் ஒரு கணம் கூடப் பார்த்திருக்க மாட்டான். அதற்குள் சந்திரன், "பாஸ்கரா! வா, அப்பா! வா! உள்ளே வராமல் தோட்டத்திலேயே உட்கார்ந்து விட்டாயே!" என்று கேட்டுக் கொண்டே அவன் அருகில் வந்தான்.

"உன்னைப் பார்க்கலா மென்றுதான் வந்தேன்! உள்ளேயிருந்து வீணைகானம் வரவே......!" என்றான் பாஸ்கரன்.

"ஓ அதுவா! என் அத்தை மகள் வந்திருக்கிறாள். அவள் வெகு அழகாக வீணை வாசிப்பாள்!" என்றான் சந்திரன்.

இப்படிப் பேசிக் கொண்டே இருவரும் அறை

"மூன்று வருஷங்களுக்கு முன்பெல்லாம் இந்த ரமாவைக் கையிலேயே பிடிக்க முடியாது. பணமும், அழகும் நிறைந்திருந்ததுடன் அவளுக்குக்

என்பதுதான். பதறிக் கொண்டு அதே காரில் பறந்தாள் ரமா! டாக்டருக்கே அடி என்றால் கேட்க வேண்டுமா! நண்பர்களும் பெரிய டாக்டரு மாக எத்தனையோ விதமாக முயற்சி செய்தார்கள். ஆனால் எவராலும் சிவகுமாரை மீட்க முடியவே இல்லை. விளக்கு வைக்கும் நேரம் பார்த்து யமன் ரமாவினுடைய தாலியைப் பறித்துக் கொண்டு போனான்!''

"ஐயோ, பாவம்! இந்தத் துயரக் கதையைக் கேட்க மிகவும் கஷ்டமாக இருக்கிறதே!''

சந்திரன் ஒரு பெருமூச்சு விட்டான். கொஞ்ச நேரம் அங்கு அமைதி நிலவியது. அதற்குமேல் பேச்சு ஓடாமற் போகவே, பாஸ்கரன் விடை பெற்றுக் கொண்டு வீட்டுக்குச் சென்றான்.

★

மெள்ளப் பாஸ்கரன் ரமாவிடம் நெருங்கிப் பழக ஆரம்பித்தான். ரமாவின் சங்கீதமும் பாஸ் கரனின் ரஸிகத் தன்மையும் அவர்கள் நட்பை வளர்க்கும் சாதனமாக அமைந்தன.

ரமாவின் வீட்டிலுள்ளவர்கள் பாஸ்கரன், ரமா இருவரையும் நன்கறிந்திருந்தார்கள். எனவே, அவர்கள் இருவரும் நெருங்கிப் பழகுவதற்கு எவ் விதத் தடையும் விதிக்க வில்லை.

ஒரு நாள் பேச்சுவாக்கில் "சங்கீதத்தைப் பற்றி நான் ஏதாவது தெரிந்து கொண்டிருக்கிறே னென்றால் அந்தப் பெருமை வாஸ்தவமாக என் கணவரைத்தான் சேர வேண்டும்! அவர் மாதிரி ஞானமுள்ளவரை நான் இதுவரை பார்த்ததில்லை''

என்றாள் ரமா. அப்போது அவள் விட்ட பெரு மூச்சில் சோகத்தின் சாயை தெரிந்தது; கண் ணீர்த் திரை பார்வையை மறைத்தது.

அதைக் கண்ணுற்ற பாஸ்கரன், "நீங்கள் வாய் விட்டுக் கதறினாலும் துக்கம் ஒரு வழியாகக் குறை யும். ஏன் அதை இப்படி அடக்கி மௌனமாகக் கண்ணீர் பெருக்கி உங்களையே வதைத்துக் கொள் கிறீர்கள்!'' என்று கேட்டான்.

பழக்கத்தில் இவ்வளவு சுவாதீனமாகப் பேசுகிற பாஸ்கரனை ஆச்சரியத்துடன் ஒரு முறை நிமிர்ந்து பார்த்தாள் ரமா.

"நீங்கள் சொல்வதில் உண்மை இருக்கிறது. ஆயினும் நம் துக்கம் பிறருக்குத் தெரியுமா! மூன்று வருஷங்களுக்கப்புறம் வாய் விட்டு நான் அழுதால்; வெறும் நடிப்பு என்று எண்ண மாட் டார்களா! அவர்கூட அடிக்கடி சொல்வார், 'நம் உள்ளத்து வேதனை நம்முடன்தான் இருக்க வேண்டும். வெளிப்பட்டால் வீணில் வம்பும், கேலிப் பேச்சும் கேட்க நேரும்' என்று! அதனால்...',

"உண்மையான வார்த்தைகள்! உயர்ந்த குணங்களுடையவர் போல் இருக்கிறது, உங்கள் கணவர்!''

"ஆமாம். ஆனால் இத்தனை காலம் அவருடன் வாழ்ந்த போதிலும் அவருடைய உயரிய குணங் களையும், பொன் போன்ற கொள்கைகளையும் இன் னும் என்னால் எட்டிக்கூடப் பிடிக்க முடியவில்லை!''

"நீங்கள் இப்படிப் பேசுவது உங்களது உயர்ந்த பண்பையும், தங்கமான மனப்பான்மையையும் குறிக்கிறது!''



"நீங்கள் எழுத்தாளர்! ஏதேதோ சொல்கிறீர் கள்! ஆனால் எனக்குப் பண்பு என்றால் என்ன வென்றே தெரியாது! மனப்பான்மை என்பது இன்றைக்கும் எனக்கு ஒரு பெரிய புதிர்! எனக்குத் தெரிந்ததெல்லாம் கண வரது மனம் கோணக் கூடாது என்பதுதான்!'' என்றாள் ரமா.

கணவனிடம் அவளுக்கு இருந்த அந்தப் பற்றுதலை அறிந்த பொழுது பாஸ் கரன் ஏற்கெனவே வைத் திருந்ததைக் காட்டிலும் பன் மடங்கு அதிகமாக அவளிடம் மதிப்பு வைத் தான்.

காளடைவில் அவன் மனம் அவளிடம் லயித்து விட்டது. எங்கே தன் மனம், வாய் வார்த்தை களின் மூலம் சந்தர்ப்பம் அறியாமல் வெளிப்பட்டு விடுமோ என்ற பயம்கூட அவனுக்கு அவளுடன் பேசும் பொழுது உண் டாக ஆரம்பித்து விட் டது. அவளிடம் தன் மனத்தைத் திறந்து காட் டத் தேவையான தைரி யம் அவனுக்கு இல்லாமல் இல்லை. ஆனால் அது

அவனை எவ்வளவு தூரம் பாதிக்கும் என்பதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. 'ஒரு வேளை அவள் குற்றமாக எடுத்துக் கொண்டு விட்டால்...!' என்று பயந்தான்.

அவன் மனம் பிடிக்கு அகப்படாமல் துள்ளவே, ஒரு நாள் தோட்டத்தில் ரமாவைத் தனியாகச் சந்திக்க நேர்ந்த போது மனத்தில் துணிவை வரவழைத்துக் கொண்டு, "நான் சொல்வது தவறாக இருந்தால் மன்னிக்க வேண்டும்!" என்று ஆரம்பித்து விட்டான்.

பாஸ்கரன் திடீரென்று அப்படி ஆரம்பிக்கவே, ரமா துணுக்குற்று அவனைப் பார்த்தாள். அவள் முகத்தில் கேள்விக் குறி படர்ந்தது.

"இவ்வளவு நாள் பழக்கத்தில் என் மனம் உங்களிடத்தில் லயித்து விட்டது! என் மனத்தை இதைவிட அப்பட்டமாக வெளியிடுவதென்றால் எனக்கே என்னவோ மாதிரி இருக்கிறது!" என்று தைரியமாக முடித்தான் வாக்கியத்தை.

அதைக் கேட்டபொழுது ரமாவினிடமிருந்து ஒரு நெடு மூச்சு வெளிப்பட்டது. அவள் தலை நிமிர்ந்து அவனைப் பார்த்தபோது அவள் கண்களில் நீர் பளபளத்துக் கொண்டிருந்தது.

பாஸ்கரன் பதறினான்!

"தங்கள் மனத்தை நான் நோக அடித்திருந்தால் மன்னித்து விடுங்கள்! தவறாக எண்ணாதீர்கள். நான் இதோ போகிறேன்!"

இவ்வாறு சொல்லிய வண்ணம் பாஸ்கரன் எழுந்து புறப்படத் தயாராகி விட்டான்.

"நில்லுங்கள்!" என்றாள் ரமா.

அவன் திரும்பிப் பார்த்தபோது புடவைத் தலைப்பினால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டிருந்தாள் ரமா.

"கொஞ்ச நாட்களாக நானும் உங்களைக் கவனித்துத்தான் வருகிறேன். இருந்தாலும்......" என்று நிறுத்தினாள் ரமா.

ரமா வார்த்தையாடத் தொடங்கவே, பாஸ்கரன் தைரியத்துடன் பேச்சைத் தொடர்ந்தான்.

"என் மனத்தை உங்களுக்குத் துணிச்சலுடன் தெரிவித்து விட்டேன். பெண் என்று பிறந்து விட்டால் ஒரு ஆணை ஒட்டித்தான் வாழவேண்டியிருக்கிறது என்கிற உண்மை உங்களுக்குத் தெரியாததல்ல. கொழு கொம்பைச் சுற்றிப் படரும் கொடியைப் போலத்தான் கணவனுடன் அவர்கள் தங்களைப் பிணைத்துக் கொண்டு வாழ்கிறார்கள். ஏதோ சந்தர்ப்ப வசத்தால் கொம்பு முறிந்து கீழே விழுந்தால் கொடி அறுந்து போகிறதுதான். வாடிக்கூடப் போகிறது! ஆனால் சில நாட்களில் மீண்டும் துளிர்க்கிறது. மற்றொரு பற்றுக் கொம்பை நாடிப் படருகிறது! இதுதான் இயற்கையின் நியதி! ஆகவே மறுமணம் செய்து கொள்வது இயற்கைக்கு விரோதமான செய்கையே அல்ல என்பது என் அபிப்பிராயம். உங்களுக்கு விருப்பம் இருந்தால் சொல்லுங்கள். நான் கட்டாயப் படுத்துவதாக எண்ணி விடாதீர்கள்."

பாஸ்கரனின் அந்தப் பிரசங்க மழையில் நனைந்து போனாள் ரமா! அவள் உடல் நடுங்கியது.

"பாஸ்கர்! ஏனோ தெரியவில்லை. ஆசைக்கும் வெறுப்புக்கும் நடுவே என் மனம் ஊசலாடுகிறது. அமரரான என் கணவருக்குத் துரோகம் செய்வதா? இதில் அவருக்குச் சம்மதமிருக்குமா!" அதற்குமேல் பேச ஓடாமல் முகத்தை மூடிக் கொண்டு விம்மினாள் ரமா.

## ஒரு பக்கம் போதுமே!

தமிழ் வசன நடையைப் பற்றி ரஸிகமணி டி. கே. சி. அவர்களின் அபிப்பிராயம் பிரசித்தமானது. அண்ணாமலை சர்வகலாசாலைப் பாட புத்தகக் கமிட்டியில் அவர் ஒரு சமயம் அங்கத்தினராக இருந்தார்.

அப்பொழுது இண்டர்மீடியட் வகுப்புக்கு இறையனார் அகப்பொருள் உரையில் எத்தனை பக்கம் பாடமாக வைக்கலாம் என்ற கேள்வி எழுந்தது. "எண்பது பக்கம் வைக்கலாம்" என்று ஓர் அங்கத்தினர் கூறினார். "எண்பது பக்கம் என்னத்திற்கு? ஒரு பக்கமே போதும்!" என்று டி. கே. சி. கூறியதைக் கேட்டு மற்றவர்கள் திகைத்தார்கள்.

இன்னும் அவர்களைத் தூக்கிவாரிப் போடும் படியாக டி. கே. சி. மேலும் சொன்னார்:—"இந்த மாதிரி தமிழ் நடை எழுதக் கூடாது என்று காட்டுவதற்கு ஒரு பக்கம் போதாதா?"

பாஸ்கரன் அவளை நெருங்கி ஆதுரத்துடன், "ரமா, வெறும் கீழ்த்தரமான எண்ணங்களுடன் உன்னை நான் நெருங்கவில்லை! நீ இருந்தால்தான் என் வாழ்வு மலரும்! வீணையை மீட்டி இன்னிசையைப் பரப்பும் நீதான் என் இருதய யாழையும் மீட்டி நாதத்தைக் கிளப்ப உரிமையுடையவள். என் இன்பம் துன்பம் எல்லாம் உன் கையில்தான் இருக்கின்றன!" என்றான்.

அவனுடைய அந்தக் கெஞ்சும் மொழிகள் ரமாவை என்னவோ செய்தன.

"பாஸ்கர்! நான் என்ன சொல்லப் போகிறேன்! உங்களைப் பார்த்துப் பழகியதில் சங்கீதத்தில் கிடைப்பதை விட அலாதியான ஒரு சாந்தி, மகிழ்ச்சி எனக்குக் கிடைத்திருப்பதை நானும் உணர்ந்துதானிருக்கிறேன். இவ்வளவு தூரத்துக்கு வரும் என்று நான் எண்ணவில்லை. இதைப் பாக்கியம் என்பதா! இல்லை......"

ரமாவின் பேச்சில் கரகரப்பும் முகத்தில் நாணமும் பாவோடி நின்றன.

"ரமா! உனக்குச் சம்மதமிருந்தால் உண்மையில் இந்த விஷயத்தில் அதிர்ஷ்டசாலி நான்தான்!" என்று உணர்ச்சியுடன் பேசியவாறு அவள் கைகளைப் பற்றப் போனான் பாஸ்கரன்.

"ஆனால்......பாஸ்கர்! எனக்குப் பூரணமாக யோசிக்க இரண்டு நாள் அவகாசம் கொடுங்கள்!" என்ற ரமா, தன்னைத் தொட அநுமதிக்கவில்லை.

"ரமா! இரண்டு யுகங்கள் வேண்டுமானாலும் உனக்காகக் காத்திருக்க நான் தயார்!" என்றான் பாஸ்கரன். அப்புறம் இருவரும் பிரிந்தார்கள்.

★

ரமா தன் உள்ளத்தில் தன்னையும் அறியாமல் பாஸ்கரன் இடம் பெற்று வந்ததை அப்போது தான் உணர்ந்தாள். எப்படி நிமிஷத்தில் அவளது வைராக்கியத்தைப் பாஸ்கரன் தனது அன்பு மொழிகளாலும் அறிவு சொட்டும் வார்த்தை

களையும் பொடியாக்கி விட்டான்! அதை நினைக்க நினைக்க அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

பாஸ்கரனுடைய எடுப்பான தோற்றம், விசாலமான அறிவு, கற்பனை வளம், சங்கீதத்தில் இருந்த தேர்ச்சி இவை மெதுவாக அவள் மனக் கண்முன் அணிவகுத்து நடந்தன.

எல்லா விஷயத்திலும் "அவரைப் போலவே இருக்கிறாரே, இவரும்!" என்று ரமா மயங்கினாள்.

அன்றிரவு சாப்பிடும்போது அவள் கலகலப்பாகவே இல்லை. சாப்பாட்டை முடித்துக் கொண்டு படுக்கைக்குச் சென்றவள், படுக்கையில் சாய்ந்தபடியே ஆழ்ந்த சிந்தனையி லிருந்தாள். "நான் செய்யத் துணிந்த காரியம் சரிதானா! ஒருவர் வீற்றிருந்த இதய பீடத்தில் மற்றொருவருக்கு இடமுண்டா! அவர் நினைவை அழித்துப் புது உருவத்தை மனத்தில் எழுதுவதா! இது துரோகமாகாதா!......ஆகாது என்பதற்குப் பாஸ்கரன் கூறும் காரணங்கள் சரி என்றுதானே தோன்றுகின்றன! கொழு கொம்பின் உதவியை நாடும் கொடியாகப் பெண்களை ஏன் படைப்பித்துத் துன்புறுத்த வேண்டும் இந்தக் கடவுள்! இது இயற்கையின் நியதி என்கிறாரே, பாஸ்கரன்! அப்படியானால் நான் மறு மணம் செய்து கொள்வதில் தவறொன்றும் இல்லையே!"

ரமா தூக்கம் பிடிக்காமல் படுக்கையில் புரண்டாள். ஜன்னல் வழியாகப் பூஜை அறையில் விளக்கு மினுக் மினுக்கென்று எரிந்துகொண்டிருப்பது தெரிந்தது. அந்த வெளிச்சத்தில் அவளுடைய கூர்மையான கண்கள் கதவோரமாகச் சாத்தப் பட்டிருந்த வீணையில் நிலைத்தன. "வீணை!...இது எழுப்பிய நாதந்தானே 'அவரை'யும் பாஸ்கரனையும் என்னிடம் பற்றுக் கொள்ளச் செய்தது!"

ரமா அதன் சக்தியை நினைத்து வியந்தாள். தன் கணவனின் ஞாபகம் அவளுக்குச் சட்டென்று வந்தது. அவர் தன்மீது காட்டிய பரிவு, பொழிந்த அன்பு!...... ஆயிரம் பாஸ்கரர்கள் அவருக்கு ஈடாவார்களா!

விளக்குப் படபடத்தது காற்றில். ரமாவுக்கு அது தன் மனச் சஞ்சலத்தைக் கண்டு எள்ளி நகையாடுகிறதோ என்ற பிரமை உண்டாயிற்று. மெதுவாக எழுந்து பூஜை அறைக்குப் போனாள்.

## குவியாத மலர்

கம்பனும் வாழ்ந்து பின்னைக்
கம்பனில் ஒன்றி விட்ட
நம்பியாம் 'டி.கே.சி'யை
நானிலம் இழந்த தென்றால்
உம்பரின் தவமே என்கோ
உயர்தமிழ் மக்கள் செய்த
வம்புகள் ஆய தீங்கின்
வாய்ப்பென்கோ எதனைச்சொல்ல?

கவிதையாய்க் கனிந்த உள்ளம்
கற்கண்டாய் இனிப்பை அள்ளி
அவியாத உணர்ச்சித் தீஞ்சொல்
ஆகியே சொரிதல் கண்டு
புவிதனில் தமிழ ணங்கு
பூரித்தாள்! புளக முற்றாள்!
குவியாத மலர்தான் இன்று
கூம்பிற்று வாடிற் றம்மா!

—வித்வான் வி. துரைசாமி

மனத்தின் குழப்பம் அவளுக்குச் சகிக்க முடியாத வேதனையை அளித்தது. சுவாமி படத்தின் முன் மண்டியிட்டாள். "கடவுளே! இக்கட்டான இந்த நிலையில் என்னை வைத்துவிட்டாயே! உன் விருப்பம்தான் என்ன! வாழ்வு எனக்கு மறுபடியும் உண்டா!" என்று உள்ளுறப் புலம்பினாள்.

இந்தக் கேள்விக்குப் பதிலே போல் அருகிலிருந்த விளக்கிலிருந்து ஒரு சுடர் தெறித்து விழுந்தது!

ரமாவின் முகம் மலர்ந்தது. ஆனால் அடுத்த கணம் என்ன காரணத்தினாலோ விளக்கே அணைந்து போய் விட்டது!

ரமா திடுக்கிட்டாள்!

"கடவுளே! இது என்ன சோதனை!"

மூர்ச்சை போட்டு விட்டது அவளுக்கு!

*

இரண்டு நாட்கள் கழித்துப் பாஸ்கரன் குதூகலத்துடன் வந்தான் ரமாவைப் பார்க்க.

"ரமா!"

"யார் அது!" என்று கேட்டுக் கொண்டே சந்திரனின் தாயார் வெளியே வந்தாள்.

"நான்தானம்மா! அவர்கள் எங்கே!"

"நீயா தம்பி! ரமா இங்கே இல்லையே! இடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டு அந்தப் பைத்தியக்காரப் பெண் ஊருக்கு உடனே போக வேண்டும் என்று அடம் பிடித்தது! நாங்கள் எவ்வளவோ சொல்லிப் பார்த்தோம். கேட்கவே இல்லை அது! சந்திரன்தான் கொண்டுவிடப் போயிருக்கிறான் டில்லிக்கு. பாவம்! அவள் மனசிலே என்ன வேதனையோ, எவ்வளவு துக்கமோ! யாருக்குத் தெரியும்! ஆனால் உண்மையாக அவள் போனதிலிருந்து, அவளுடைய பேச்சுக் குரலும் வீணைச் சத்தமும் இல்லாமல் வீடே வெறிச்சென்று போய்விட்டது!" என்றாள் அந்த அம்மாள்.

பாஸ்கரன் கல்லாய்ச் சமைந்து நின்றான்!

## கவி என்றால் என்ன?

கவி என்றால் இன்னது என்று சொல்லுவதற்கு இலக்கணம் கிடையாது; உலகத்தில் எங்குமே கிடையாது. யாப்பியல் இந்த விஷயத்தில் எந்த உதவியும் புரிய வில்லை. வெண்பா இது, விருத்தம் இது என்று ஏதோ சொல்ல முடியலாம்; ஆனால் கவி இது என்று சொல்லவே முடியாது. ஒரு பாஷையோடும், அதிலுள்ள சிறந்த கவிகளோடும் உண்மையான ஆர்வத்தோடு, படாடோபத்தை எல்லாம் தூரத்தே விட்டு விட்டு, நெடு நாள் பழகி வருவோமானால் அது தெரிய வரலாம். அதுவும் தாய் மொழியில்த் தான் தெரியக் கூடும்.

— ரஸிகமணி டி. கே. ஸி.




நீங்களும் உங்கள் வம்சத்தினரும் அனுகூலமடைய
இவ்வுத்தரவாதம் பெற்ற செக்யூரிடிகளில்

## முதலீடு செய்யுங்கள்

| | |
|---|---|
| நேஷனல் சேவிங்ஸ் சர்டிபிகேட்டுகள் | ரூ. 100 முதலீடு செய்தால் 12 வருடங்களில் ரூ. 150 ஆகக் கிடைக்கும். |
| பத்து வருட<br>டிரெஷரி சேவிங்ஸ் டிபாசிட்டுகள் | 3½ சதவிகித வட்டி கணக்கிட்டு வருடம் இருமுறை வழங்கப்படும். அசல் தொகை 10 வருட காலம் முதலீட்டிலிருக்கும். |
| போஸ்டாபீஸ்<br>சேவிங்ஸ் பாங்க் டிபாசிட்டுகள் | ரூ. 10,000 வரை டிபாசிட்டுகளின் பேரில் 2½% வட்டி சேரும். ஒன்றுக்கு மேற்பட்ட நபர்களின் கூட்டுக்கணக்குகளானாலும் ரூ. 20,000 வரை வட்டி உண்டு. |

இவ்வித வட்டிக்கு இந்திய வருமான வரி கிடையாது

முன்னேற்றப்பாதைக்கு வழிகாட்டிகள்

## இந்தியாவின் சுபீட்சத்திட்டம் வெற்றிபெறுமாக

A.C. 5147H

## 39. சுதாகர் எங்கே?

மனோரமா திடு திப்பென்று அப்படித் தன் கண்களைத் திருப்பிக் கொண்டது சுதாகரின் மனத்தை என்னவோ செய்தது. அவன் என்ன தவறு செய்து விட்டான்? அவள் எதற்காக முகத்தை அப்படி திருப்பிக் கொள்ள வேண்டும்? யோசிக்க யோசிக்க அவனுக்கு அது புரியாத புதிராகவே, சிக்கறுக்க முடியாத முடிச்சாகவே ஆயிற்று.

மனோரமா முகத்தைத் திருப்பிக் கொண்ட பொழுது அவள் கண்களில் பளிச்சிட்ட பாவம் எத்தகையது? கடு கடுப்பானதா? கசப்பானதா? அருவருப்பானதா?

அப்படி யெல்லாம் எப்படி இருக்க முடியும்? கொஞ்ச நேரத்துக்கு முன்பு அவளாகத்தானே சுதாகர் இருக்கும் இடம் தேடி வந்தாள்? தேடி வந்ததோடு மட்டுமா? உள்ளத்து உணர்ச்சிகளை யெல்லாம் அவனிடம் கொட்டினளே! 'நடந்தது நடந்து விட்டது. உங்களோடு ஓடி வந்து விடுகிறேன்!' என்று கூடச் சொன்னளே! அவனிடம் அவள் அளவற்ற அன்பு கொண்டிருந்தால்தானே அப்படியெல்லாம் மனம் விட்டுச் சொல்லியிருக்க முடியும்?

வாஸ்தவம்தான். ஆனல் மாதவப் பிரஸாதுக்கு அருகில் வந்ததும் அவள் அப்படி மாறிப் போவானேன்? ஒரு வேளை மாதவப் பிரஸாதின் மனத்தில் மாசு படிந்த எண்ணம் உதிக்காமல் இருப்பதற்காக இருக்குமோ? ஆம், அப்படித்தான் இருக்க வேண்டும்.

அப்படித்தான் இருக்க வேண்டுமாவது? அவனுக்கும் அவளுக்கும் உள்ள உள்ளத் தொடர்பை அவர் எங்கே அறிவார்? அறியாத அவருக் கெதிரே அநாவசியமாக அவள் அப்படி வேஷம் போடுவானேன்?

அவள் அப்படிக் கபட நாடகம் நடிப்பது யாருக்காக? சுதாகருக்காகவா அல்லது மாதவப் பிரஸாதுக்காகவா?

என்ன இருந்தாலும் மாதவப் பிரஸாத் அவள் கரம் பிடித்த கணவர். கல் என்றலும் கணவன், புல் என்றலும் புருஷன் என்பது முதுமொழி. அவரை ஏமாற்றும் எண்ணத்தில் அவள் அப்படிச் செய்திருக்க மாட்டாள். அப்படியானல் சுதாகரின் மனத்தை ஆழம் பார்ப்பதற்காகச் சொல்லி யிருப்பாளோ? என்ன இரஹஸ்யமோ? யார் கண்டார்கள்?

மனோரமாவின் அந்தச் செயலைப் பற்றி யோசிக்க யோசிக்கச் சுதாகர் 'இந்தப் பெண்களே புரியாத புதிர்' என்ற முடிவுக்கு வந்தான். அந்த முடிவுடன் நிறுத்திக் கொண்டாலாவது தேவலையே! அவன் மனம் திரும்பத் திரும்ப யோசனையில் ஈடுபட்டது.

அதைக் கண்ட அவனுக்கே ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. "சட்! என்ன இது? மாதவப் பிரஸாத் அடியும் குத்தும் பட்டு வந்திருக்கும் இந்த ஆபத்தான நிலையிலா இதைப் பற்றி யெல்லாம் யோசிப்பது?




ரமண்லால் வஸந்தலால் தேசாய்
மொழி பெயர்ப்பு :: ரா. வீ.

மனிதன் குற்றுயிரும் குறை உயிருமாகக் கட்டிலில் கிடக்கிறர்! இப்பொழுதா இதைப் பற்றி யெல்லாம் சிந்திப்பது?' என்று எண்ணி அவன் மறுபடியும் மனத்தை வேறு விஷயத்தில் ஈடுபடுத்த முயன்றான். மாதவப் பிரஸாதின் பயங்கரமும் பரிதாபமும் நிறைந்த நிலையைக் கண்ணுற்ற பொழுது அவன் மனத்தை என்னவோ செய்தது. இருதயம் இளகியது; உள்ளம் கசிந்தது. கண்களில் கண்ணீர் தேங்கியது. பொங்கும் கண்ணீரை ஒருவாறு அடக்கிக் கொண்டு மாதவப் பிரஸாதை மறுபடியும் பார்த்தான்.

வருத்தமே வடிவமாக மனோரமா அவர் அருகில் உட்கார்ந்திருந்தாள். அப்பொழுது அவளுடைய ஒரு கை அவருடைய தலையை வருடி விட்டுக் கொண்டிருந்தது. இன்னொரு கை மாதவப் பிரஸாதின் கையோடு கையாகக் கூடி யிருந்தது.

அதைக் கண்ணுற்ற சுதாகர், மனைவி கணவனுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைப் பற்றி யெல்லாம் சிந்திக்கத் தொடங்கி விட்டான். மனோரமா அவன் கண்களுக்கெதிரே இருஹ லக்ஷ்மியாக, கற்புக்கரசியாகத் திகழ்ந்தாள். அவளைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் நினைப்பது மிகத் தவறு, மகாபாவம் என்ற எண்ணம் அவன் சித்தத்தைப் பலமாக ஆட் கொண்டது.

அதே சமயம் மாதவப் பிரஸாத் மூடிய தம் கண்களைத் திறந்து மலங்க மலங்க விழித்

தார். அவருடைய அந்தப் பார்வை ஒரு நிலைக்கு வரச் சிறிது நேரம் பிடித்தது.

எதிரே சுதாகர் நிற்பதைக் கண்ட அவர் வைத்த கண் வாங்காமல் சிறிது நேரம் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார். அவர் பார்த்த அந்தப் பார்வை 'யார்?' என்று கேட்கும் பாவனையில் இருப்பதாக மனோரமாவுக்குத் தோன்றியது.

ஆனால் அவளுக்கு என்ன பதில் சொல்வது, எப்படிப் பதில் சொல்வது என்றுதான் புரியவில்லை. மறுபடியும் தலையைக் கவிழ்ந்து கொண்டாள். அவளுடைய உள்ளத்தில் சொல்ல வொண்ணாத உணர்ச்சிப் போர் நடந்து கொண்டிருக்கிறது என்பதை அவள் முகம் தெளிவாக எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது. சுதாகர் அவளுடைய அந்த முக பாவத்தையும் படிக்கத் தவறவில்லை.

பக்கத்தில் நின்று கொண்டிருந்த லக்ஷ்மி மனோரமா பேசத் தயங்குவதைக் கண்டாள். 'அகப்பட்டுக் கொண்டாயா? எத்தனை நாட்கள்தான் உன் வண்டவாளங்களை மூடி மூடி மறைத்து வைத்திருக்க முடியும்?' என்று கேட்கும் பாவனையில் ஒரு முறை அவளைப் பார்த்தாள். ஆனாலும் அந்த நிலையை வெகு நேரம் அவள் நீடிக்க விட விரும்பவில்லை. எனவே, 'வந்திருப்பவர் விருந்தாளி!' என்று சொல்ல வாய் எடுத்தாள். ஆனால் அதற்கு முன்பாகவே சுதாகர், "ஜ்வாலாப் பிரஸாத் என்னைத் தங்களிடம் அனுப்பினார். என் பெயர் சுதாகர்!" என்றான்.

"சுதாகர்!' என்னும் சொல்லைக் கேட்கும் பொழுது மனோரமாவுக்கு ஒரு முறை மெய் சிலிர்த்தது; தூக்கி வாரிப் போட்டது.



மாதவப் பிரஸாத் வாய் திறந்து அவனுக்கு நல் வரவு கூற வேண்டும் என்று தான் விரும்பினார். ஆனால் அடிபட்ட அதிர்ச்சி காரணமாக அவரால் சரியாகப் பேச முடியவில்லை. வாய் மூடி மூடித் திறந்ததே யொழிய சொற்கள் சரியாக வெளி வரவில்லை. எனவே, கைதூக்கித் தமது இல்லத்திலேயே தங்குமாறு சமிக்ஞை செய்தார்.

சுதாகர் "ஆகட்டும்!" என்று சம்மதம் தெரிவித்தான். பிறகு, "தாங்கள் இந்த நிலையில் அதிகமாகப் பேச வேண்டாம். பேசவும் கூடாது. உடல் குணமான பிறகு பேசிக் கொள்வோம்!" என்று சொன்னான்.

மாதவப் பிரஸாத் மறுபடியும் மனோரமாவின் கரத்தைப் பற்றிக் கொண்டார். அவர் ஆயாசம் தீர்ந்த பாடில்லை. அவருடைய கண்கள் சோர்ந்து போய் அவரை அறியாமல் தாமாகவே மூடிக் கொண்டன.

அவர் அப்படி அடிக்கடி அயர்ச்சியுற்று மூர்ச்சையுறுவதைக் காண எல்லோருக்குமே மிகவும் பயமாகப் போய் விட்டது. வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு இருந்த இடத்தை விட்டு அசையாமல் மாதவப் பிரஸாதையே பார்த்த வண்ணம் நின்றனர். மனோரமாவுக்குத் தன் மனத்தை இன்னது செய்கிறதென்றே விளங்கவில்லை. தலையைத் தூக்கிப் பரிதாபமாக அறையில் உள்ளவர்களை நோக்கினாள். கண்களில் திரையிட்ட நீர் யாரையும் பார்க்கவொட்டாமல் மறைத்தது.

அதைக் கண்ட சுதாகரினால் அதற்குமேல் அங்கே நிற்க முடியவில்லை. 'வேலைக் கென்று நாம் வந்திருக்கும்பொழுதா இந்தமனிதருக்கு இந்தக் கஷ்டம் வந்திருக்க வேண்டும்? இது என்ன அபசகுனம்?' என்று தோன்றியது. அதோடு மனோரமாவின் மனத்தில் நிகழ்ந்து கொண்டிருந்த மனப் போராட்டம் வேறு அவனை அங்கே நிற்க முடியாதபடி அடித்து விரட்டியது. அவளுடைய மனோபாவத்தை அறிந்திருந்தாலாவது நாலு ஆறுதல் வார்த்தைகள் சொல்லி அவளுடைய மனத்தைத் தேற்றலாம். மாதவப் பிரஸாதுக்காகக் கலங்குகிறாளா, அல்லது தனக்காக வருந்துகிறாளா என்பதே அவனுக்குச் சரியாக விளங்கவில்லையே! என்ன செய்வான்? எனவே, யாரிடமும் எதுவும் சொல்லிக் கொள்ளாமல் அந்த அறையை விட்டு வெளியேறி, தான் தங்கியிருந்த அறைக்குச் சென்றான்.

அவன் சென்ற சில நிமிஷங்களுக் கெல்லாம் டாக்டர் வந்து சேர்ந்தார். அவர் பாதிப் பரிசோதனை செய்து கொண்டிருக்கும் பொழுது மாதவப் பிரஸாத் மறுபடியும் கண் விழித்துக் கொண்டார். இந்தத் தடவை அயர்ச்சி அவ்வளவு அதிகமாயில்லை. எனவே, அவர் சுற்று முற்றும் ஒரு தடவை தம் பார்வையை ஓட்டினார். பிறகு பக்கத்திலிருந்த மனோரமாவின் மீது தம் பார்வையைச் செலுத்தினார். மனோரமா குனிந்த தலை நிமிராமல் அப்பொழுதும் அவர் அருகிலேயே

உட்கார்ந்திருந்தாள். அவளுடைய கையும் அவருடைய கையிலேயே இருந்தது.

டாக்டர் அவர் காயத்துக்கு என்னவெல்லாமோ மருந்து வைத்துக் கட்டினார். ஆனால் டாக்டரின் மருந்தைக் காட்டிலும் மனோரமாவின் கைதான் அதிக சௌக்கியத்தைத் தருவதாக மாதவப் பிரஸாதுக்குத் தோன்றியது. உடல் நோயைக் குணப்படுத்தும் குணம் மருந்தைக் காட்டிலும் மனோரமாவின் கைகளுக்கு அதிகமாக இருப்பதாக எண்ணிய அவர் ஆவலுடன் மறுபடியும் ஒரு முறை மனோரமாவின் முகத்தைப் பார்த்தார். அப்பொழுது அவருடைய உள்ளத்தில் ஒரு புதுத் தெம்பு தோன்றியது; உடலில் தனி பலம் உண்டாயிற்று.

அழும் குழந்தைகளையும் கலவரப் பட்டுக் கொண்டு நிற்கும் ஆட்களையும் அப்பொழுது தான் அவர் பார்த்தார். தம் நிலை காரணமாக எல்லோரும் எத்தனை கவலைப்பட்டுக் கொண் டிருக்கிறார்கள் என்பதைக் கண்ட பொழுது அவருக்கே மனத்துக்கு மிகவும் சிரமமாகப் போய்விட்டது. "எனக்கு ஒன்றும் இல்லை. கவலைப்படாதீர்கள்!" என்று எல்லோருக்கும் ஆறுதல் அளித்தார்.

டாக்டரும் அதையேதான் சொன்னார். ஆனால் காயத்துக்குக் கட்டுக் கட்டி விட்டு, உள்ளுக்கு மருந்தும் கொடுத்த பிறகு மனோரமாவைத் தனியே அழைத்துச் சென்று வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்றும் நோயாளியின் அபாயகரமான நிலை இன்னும் நீங்கியபாடில்லை என்றும் சொன்னார். கொஞ்சம் அஜாக்கிரதையாக இருந்தால்கூட நோயாளியின் நிலை படுமோசமாகி விடக் கூடும் என்றும் எச்சரித்தார். அது மட்டும் அல்ல; மனோரமா தனது கையினால் காயத்துக்குக் கட்டுக் கட்டவோ, மருந்து கொடுக்கவோ கூடாது என்றும் சொன்னார். அடிக்கடி தாம் வந்து கவனித்துப் போகவும் அவளை ஆசுவாசப்படுத்திச் சென்றார்.

மாதவப் பிரஸாதின் கிராமத்துக் குடி படைகள் அவரிடம் கொஞ்ச கால மாகவே கோப முற்றிருந்தனர். பஞ்சம் காரணமாக வேளாண்மை ஏமாற்றி விட்டது. அதன் காரணமாக வயலை நம்பி வாழும் விவசாயிகள் கஷ்ட நிலைமைக்கு ஆளாகி யிருந்தனர். குடியானவர்களின் அந்தச் சிரம நிலைக்கு இரங்கி மாதவப் பிரஸாத் இரண்டு மூன்று வருஷங்கள் வரி வசூலிப்பதை நிறுத்தி யிருந்தார். அது மட்டும் அல்ல; அவ்வளவு கிஸ்தியையும் தாராள மனத்துடன் ஒரு நாள் வஜாவும் செய்து விட்டார்.

அவர் அப்படிச் செய்தது ஆபத்தாக முடிந்தது. குடிபடைகளுக்கு நிலவரி வஜா தங்கள் பிறப்புரிமை என்றே தோன்றத் தொடங்கி விட்டது. 'உழுதவர்கள் நாம் இருக்க உண்பவர் யார்? வரி வசூல் செய்பவர் யார்?' என்றெல்லாம் பலவாறாக அவர்கள் எண்ணத் தொடங்கி விட்டார்கள்.

நிலத்துக்கு உண்மையான உரிமையாளன் யார்? குடியானவனா? ஜமீன்தாரா? உழுபவனா? உழாமல் உட்கார்ந்து சோறு தின்பவனா?—இதுபோன்ற பிரச்னைகள் நாளுக்கு நாள் நாட்டில் பயங்கரப் பேயுருவம் தரித்துக்கொண்டு வருகின்றன.

உண்டு உடுத்திச் சோம்பி இன்ப வாழ்வு வாழும் பணக்காரக் குடும்பத்தில் ஒருவன் பிள்ளையாகப் பிறந்துவிட்டால், அவன் நிலத்துக்கு உடையவனாக ஆகி விடுகிறான். நகத்தில் அழுக்குப் படாமல் பகட்டான பட்டாடை உடுத்தி வாழத் தொடங்கி விடுகிறான். தொழிலாளிகளின் உழைப்பைப் பயன்படுத்திக் கொண்டு, அதனால் கிடைக்கும் லாபத்தில் அதிகமான பகுதியை அபகரித்துக் கொண்டு அரச வாழ்வு வாழத் தொடங்கி விடுகிறான். இது நியாயமா, அநியாயமா என்றெல்லாம் சர்ச்சை செய்து முடிவு கட்ட வேண்டியது இங்கே அநாவசியம். வேறு ஒரு சமயமா யிருந்தால் இந்தப் பிரச்னையை எடுத்துப் போட்டுக் கொண்டு அலசி ஆராய்ந்து பார்க்கலாம்; பேசி முடிவு கட்ட முயற்சிக்கலாம். ஆனால் மாதவப் பிரஸாத் இப்படி உயிருக்கு மன்றாடிக்கொண்டிருக்கும் பொழுது பார்ப்பது சரி



யல்ல; மனிதத் தன்மைக்கும் மக்கட் பண்புக்கும்கூட அது உகந்ததாக ஆகாது.

ஆனால் நாம் பேசாமல் இருந்தாலும் காலம் பேசாமல் இராது. அப்படி அது பேசாமல் இருக்கப் போவதும் இல்லை. அது தன் போக்கில் அலசி ஆராய்ந்து பார்த்து விட்டுத் தான் போகும். ஆனால் ஒரு விஷயம். நிலத்துக்கு உடையவன், 'நிலத்தில் குடியானவனுக்கு உரிமை கிடையாது. தனக்கு மட்டும் தான் உரிமை உண்டு' என்ற எண்ணத்தை விட்டுவிட வேண்டும். அதே போலக் குடியானவனும் கருத வேண்டும்.

முதலில் நிலத்துக்கு உடையவன், உழுபவன் இருவருடைய இருதயத்திலும் நல்லெண்ணம் உருக் கொள்ள வேண்டும். அந்த நல்லெண்ணம்தான் காரியங்களைத் தகராறு எதுவும் இன்றிச் சௌஜன்யமாகச் சாதித்துக் கொண்டு போக வழி செய்து கொடுக்கும். அப்படியின்றி ஒருவரை யொருவர் ஒரு கை பார்த்துவிட்டுத் தான் மறு காரியம் பார்ப்பது என்று தீர்மானித்து விட்டால் பெரிய புரட்சிதான் உதயமாகும்; கிளர்ச்சிதான் உருவாகும். அந்தப் புரட்சியும் கிளர்ச்சியும் ஸ்தூல ரூபம் தரித்து விட்டால் எதில் கொண்டு விடும் என்று சொல்ல முடியாது.

அத்தனை தூரம் நிலைமை முற்றி விடவே, மாதவப் பிரஸாதுக்கும் குடியானவர்களுக்கும் இடையே வழக்கு உண்டாகி நீதிமன்றம் வரை சென்று விட்டது. அதன் பலனாகச் சிவில் கிரிமினல் வழக்குகள் நடந்தன. பல குடியானவர்களை நிலத்தில் இறங்கக் கூடாது என்று நீதிமன்றம் தீர்ப்பளித்து விட்டது. நிலத்தி லிருந்து தள்ளப்பட்டு உரிமை இழந்து விடவே, கோபத்தினால் கொதித்தெழுந்த சில தீவிரவாதிக் குடியானவர்கள் மாதவப் பிரஸாதைக் கொலை செய்து விடுவதென்று நிச்சயித்தார்கள்.

அதன் பலனாகத்தான் மாதவப் பிரஸாதின் நிலை அத்தனை பயங்கர மாகியது. அவர் அபாய நிலைமையி லிருந்து தப்பி விட்டார் என்று சொல்ல முடியா விட்டாலும், அன்றைய இரவுப் பொழுது எவ்வித ஆபத்தான நிகழ்ச்சியும் இன்றிச் சௌகரியமாகவே கழிந்தது. அவ்வளவு வலிக்கும் இடையில் அவர் தம்மை மறந்து சிறிது நேரம் கண் அயரவும் செய்தார்.

அன்று இரவு ஆபத்தான நிகழ்ச்சி எதுவும் நிகழவில்லை என்பது உண்மைதான். ஆயினும் திடுக்கிட வைக்கும் நிகழ்ச்சி ஒன்று நிகழத்தான் செய்திருந்தது. அந்த நிகழ்ச்சி என்ன, தெரியுமா? மறுநாள் காலையில் எழுந்திருந்தும் எழுந்திருக்காததுமாகச் சுதாகரைக் காணோம் என்று வந்த செய்திதான்!

மாதவப் பிரஸாத் நாளடைவில் குணமுற்றார். கொஞ்ச நாட்களுக்குள்ளேயே அவர் நன்றாகக் குணம் பெற்று நடமாடக் கூடத் தொடங்கிவிட்டார். ஆனால் அவர் குணமுற்று இரண்டு மாதங்கூட ஆகவில்லை; மனோரமா நோய் வாய்ப்பட்டு விட்டாள். உள்ளங் குமைந்து புழுங்கிக் கொண்டிருந்த அவள் இத்தனை நாள் எப்படி நோய் நொடியில்லாமல் இருந்தாள் என்பதே ஆச்சரியம்.

அவள் இருந்த நிலையில் நோய் வாய்ப்பட்டால் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை. நோய் வாய்ப்படாமல் இருந்தால்தான் ஆச்சரியப்பட வேண்டும்.

## அகத்தியன் பிரிந்தான்!

குயிலன்

அகத்தியன்போல் பொதிகைமலை
அமர்ந்திருந்து தமிழ்வளர்த்த
அறிவின் செம்மல்

மிகத் தெளிந்த கவிதை நயம்
பகுத்தறிந்து நமக்கதனை
விளக்கிச் சொன்னோன்

சகத்தினிலே தலைசிறந்த
தமிழர்களின் பண்பாட்டிற்
சளைக்கா வள்ளல்

மகத்தான ரசிகமணி
பிரிந்தா ரென்பது கேட்டு
வருந்தார் யாரே!

தமிழென்னும் கழனியிலே
கம்பனென்னும் கவிவேந்தன்,
தழைத்தே என்றும்

அமிழ்தமென ஓங்கிடவே
காவியமாம் பயிர்நட்டான்
ஆனால் ஆங்கே

இமிதிமென இடைச்செருகல்
களைவந்து வளர்ந்திட்ட
செய்கை கண்டே

நிமிடத்தில் களைகளைந்த
வேளாளன் நீத்ததுயர்
நீங்கா தந்தோ!

மூவேந்தர் புகழ் மணக்கும்
"முத்தொள்ளா யிரம்" தந்த
முதியோன், நந்தம்

பாவேந்தர் கம்பரது
பாடல்களைப் பாவமுடன்
பகர்ந்த நாவோன்

பூவேந்தித் தமிழ்த்தாயின்
திருவடியை எந்நாளும்
போற்றும் நாவோன்

சாவேந்திக் கிடப்பதுவோ
தமிழ்நாடே நீ செய்த
தவந்தான் என்னே!

கோடையிலே இளைப்பாற்றும்
குற்றாலத் திருமலையே!
குழுதிப் பாயும்

ஓடைகளே! அருவிகளே!
உயர் மரங்கள் வளர் காடே!
உலவும் காற்றே!

மேடையெலாம் தமிழ் மணக்க
வாழ்ந்த சிதம் பரநாதன்
மேனி தன்னைப்

போகையிலே பார்த்திடநீர்
பொறுத்திருந்த நிலையென்னே!
அந்தோ! அந்தோ!

ஏற்கெனவேயே அவள் மனம் சாவாது செத்துக் கொண்டிருந்தது. அதோடு மாதவப் பிரஸாதும் காயமுற்றுப் படுத்த படுக்கையாகிவிடவே, இருந்த தெம்பும் இழந்து அவள் நோய் வாய்ப்பட்டு விட்டாள். மனோரமா படுத்த படுக்கையாகி விடவே, மாதவப் பிரஸாத் மிகவும் மனம் பதைத்தார். இருந்தாலும் அவர் ஆண்பிள்ளையல்லவா? தைரியமாக இருக்க வேண்டாமா? எனவே, மனோரமாவுக்கு ஆறுதல் சொல்லும் நோக்கத்துடன், "கவலைப்படாதே! டாக்டரைக் கூப்பிட்டனுப்பி யிருக்கிறேன். இதோ வந்து விடுவார்!" என்றார்.

'எனக்கு ஒன்றும் என்னைப் பற்றிக் கவலை இல்லை!" என்றாள் மனோரமா.

ஆனால் டாக்டர் வந்து மனோரமாவின் கவலையை அதிகமாக்கி விட்டுச் சென்றார். அவர் மாதவப் பிரஸாதைத் தனிமையில் அழைத்துப் போய், "தங்கள் சம்சாரத்துக்கு க்ஷயம் கண்டுவிட்டது. எனவே, ரொம்ப ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்!" என்று எச்சரித்தார்.

அதைக் கேட்டதும் மாதவப் பிரஸாத் துணுக்குற்றுப் பதைபதைத்துப் போனார்.

அப்பப்பா! மனப் புண்ணும் உள்ளத் துயரும் தேகாரோக்கியத்தை எவ்வளவு தூரம் நிலைகுலையச் செய்துவிடுகின்றன!

"இவளுக்கு எப்படி க்ஷயம் கண்டது?" என்று கலவரம் தொனிக்கும் குரலில் கேட்டார் மாதவப் பிரஸாத்.

"எத்தனையோ காரணங்கள் இருக்கலாம். உயர்தர, நடுத்தர ஹிந்துக் குடும்பப் பெண்மணிகளிடையே இந்த நோய் குடி கொண்டு விட்டிருக்கிறது! ஜாக்கிரதையாக இருப்பது மட்டும் போதாது. நல்ல சிகிச்சையும் செய்ய வேண்டும்!" என்றார் டாக்டர்.

"என்ன சிகிச்சை செய்ய வேண்டும்? எப்படிச் செய்ய வேண்டும் என்று நீங்கள் சொல்கிறீர்களோ, அப்படிச் செய்யச் சித்தமாயிருக்கிறேன்!" என்றார் மாதவப் பிரஸாத்.

"மருந்துக்கான ஏற்பாடுகளை நான் செய்து விடுகிறேன். சிகிச்சையைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். நோயாளிக்குச் சீதோஷ்ண ஸ்திதி மாறுதல் அவசியம் தேவை. அதனால் நோயாளியைத் தாங்கள் எங்கேயாவது அழைத்துப் போக வேண்டும்" என்றார் டாக்டர்.

"சரி!" என்று சொல்வதைத் தவிர மாதவப் பிரஸாத் வேறு என்ன சொல்வார்?

**மா**தவப் பிரஸாத் டாக்டர் சென்ற பிறகு மனோரமாவின் அருகில் போய் உட்கார்ந்து கொண்டார். ஆனால் க்ஷயம் என்று கேள்விப்பட்டபின் மனோரமாவின் முகத்தில் ஏற்பட்ட வேதனைக் குறி அப்புறம் அகலவே இல்லை. அதைக் கண்ணுற்ற மாதவப் பிரஸாதின் மனத்தை என்னவோ செய்தது. என்ன செய்வது என்று ஒன்றும் புரியாமல் விழித்த கண் விழித்தபடி உட்கார்ந்திருந்தார்.

## பிரபல திருமணம்



மெஸர்ஸ். டி. வி. சுந்தரம் அய்யங்கார் அண்டு சன்ஸ் ஸ்தாபனத்தின் மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ டி. எஸ். ராஜம் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி ராமச்சந்திரனுக்கும், நாகபுரி தபால் தந்தி இலாகா டெபுடி அக்கௌண்டெண்ட் ஜெனரல் ஆபீஸ் அஸிஸ்டெண்ட் அக்கௌண்ட்ஸ் ஆபீஸர் ஸ்ரீ என். ஜகந்நாதன் அவர்களுடைய குமாரி சௌபாக்கியவதி இந்துமதிக்கும் சென்ற மாதம் ஏழாந் தேதி சென்னையில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. சென்னை முதன் மந்திரி ஸ்ரீ சி. ராஜகோபாலாச்சாரியார், ஒரிஸ்ஸா கவர்னர் ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா, மந்திரிகள், நீதிபதிகள், தொழில் பிரமுகர்கள், நண்பர்கள், உறவினர்கள் முதலியோர் விஜயம் செய்து மணமக்களை வாழ்த்தினர். மணமக்களுக்குப் பரிசுகளும் வாழ்த்துச் செய்திகளும் வந்து குவிந்தன. அன்று மாலை ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள்!

அதே சமயம் குழந்தை சாந்தா ஓடோடி உள்ளே வந்தாள். வந்தவள் மனோரமாவைக் கட்டித் தழுவிக் கொண்டு, "நீ எங்கே போகப் போகிறாய்?" என்று கேட்டாள்.

"நான் எங்கேயும் போகவில்லையே! யார் உனக்கு இப்படிக் கதை கட்டி விட்டார்கள்?" என்று கேட்டாள் மனோரமா. பிறகு சாந்தாவை மார்புறத் தழுவிக் கொண்டு அன்புடன் முத்தம் கொடுத்தாள்.

"லக்ஷ்மி சொல்லிக் கொண்டிருந்தாளே!" என்றாள் சாந்தா, குழந்தைகளுக்கே இயல்பான குரலில்.

குழந்தைகளின் இயல்பே அலாதியானது. யார் என்ன சொன்னாலும் அதை உடனே நம்பி விடுகிறார்கள். பிஞ்சு உள்ளத்துக்கு யார் பேச்சை நம்புவது, நம்பக் கூடாது என்று தோன்றுவதில்லை. எதையும் யதார்த்தமாக எடுத்துக் கொள்வதில் குழந்தைகளுக்கு ஈடு குழந்தைகள் தான். லக்ஷ்மி என்ன உள் அர்த்தத்தை வைத்துக் கொண்டு அந்த வார்த்தையைச் சொன்னாளோ, எந்தத் தொனியில் சொன்னாளோ? சாந்தாவுக்கு அதெல்லாம் தெரிய நியாயம் ஏது? மனோரமா ஊருக்குப் போகிறாள் என்று லக்ஷ்மி சொன்னதை

அவள் மனத்தில் முடிந்து கொண்டாள். அதை அவள் ஒளித்து மறைத்து மூடி வைக்கவில்லை. முதல் காரியமாக மனோரமாவை நேரில் பார்த்ததும் மனத்தில் தோன்றியதைக் கேட்டே விட்டாள்.

மாதவப் பிரஸாதுக்கு அதைக் கேட்டதும் கோபம் வந்து விட்டது. இளம் உள்ளத்துக்கு இந்தக் கவலையை யெல்லாம் ஒருத்தி உண்டு பண்ணுவாளா என்று எண்ணினார். "அந்த நாயின் நாக்கை அறுத்து வைத்துவிட்டு மறு காரியம் பார்க்கிறேன். என்ன எண்ணிக் கொண்டிருக்கிறாள் அவள்? வேலையைவிட்டே நீக்கினால்தான் அந்தப் புத்தி கெட்டவளுக்குப் புத்தி வரும்!" என்று சீறினார்.

"அவளை ஏன் வேலையை விட்டு நீக்க வேண்டும்? அவள் வீட்டை எவ்வளவு பணிக்காகக் கவனித்துக் கொள்கிறாள், தெரியுமா?" என்றாள் மனோரமா.

"அப்படியானால் நீ போக மாட்டாய் அல்லவா?" என்று கேட்டாள் குழந்தை சாந்தா. ஒரு தரத்துக்கு இரண்டு தரமாகக் கேட்டு நம்பிக்கை கொள்ள வேண்டும் என்ற எண்ணம் குழந்தைக்கு.

"சாந்தா! உன்னை விட்டு விட்டு நான் எங்கேயும் போக மாட்டேன்!" என்றாள் மனோரமா. இதைக் கூறும்பொழுது மனோரமாவின் கண்கள் மாதவப் பிரஸாதின் கண்களுடன் ஒன்றி லயித்தன.

சுதாகருடன் போய்விட வேண்டும் என்று மனோரமா திட்டம் போட்டாளே, அவனுடன் போக முடியாமற் போனதற்குக் காரணம் என்ன? குழந்தை சாந்தாவின் அன்பும் ஆசையும்தானே?

நிராசையடைந்த சுதாகர் இனி அங்கிருப்பது தகாது என்று கம்பி நீட்டிவிட்டான்! அப்பொழுது அவளையே கண்காணித்துக் கொண்டிருந்தால் அவளும் அவனுடன் புறப்பட்டுப் போயிருக்கலாம் அல்லவா? அதற்கு இடம் கொடுக்காமல் அவளை இழுத்துப் பிடித்து நிறுத்தியவள் சாந்தாதான் என்றால், குழந்தையின் கவர்ச்சி தரும் காந்த சக்திக்கு எவ்வளவு வலு இருக்கவேண்டும்? இது யோசிக்க வேண்டிய விஷயம் தானே?

மாதவப்பிரஸாதின் நெஞ்சம் இளகியது. மனோரமாவின் நிலை இப்படியாக வேண்டுமா என்று எண்ணி மனம் கலங்கினார். மனோரமாவை எந்த ஊருக்கு அழைத்துச் சென்றால் சௌகரியமாயிருக்கும் என்ற சிந்தனையில் லயித்த அவர் சுயப் பிரக்ஞைக்கு வர வெகு நேரம் பிடித்தது. (தொடரும்)

# நாத முதலியார்

**ஸ்ரீ சுத்தானந்த பாரதி**

முதல் கம்பன் திருநாள் திருநெல்வேலி இந்து கல்லூரியிலேதான் தொடங்கியது. கம்ப ரஸிகர்களான பல அறிஞர்கள் இந்தத் திருநாளில் பங்கு கொண்டனர். ஸ்ரீ வ. வெ. சு. ஐயரும் நானும் சென்று முன்னே அமர்ந்திருந்தோம். ஒருவர் திருப்பாற் கடலில் மஹாவிஷ்ணு பள்ளி கொண்டது முதல், கலைக்கோட்டு மகா முனிவர் புத்திர காமேஷ்டி யாகம் செய்தது வரையில் ஒரே பாடமாகச் சொல்லத் தொடங்கினார். சபையில் ஏகச் சத்தம், ரகளை, சீழ்க்கை, கை தட்டல், 'உட்கார், உட்கார்' என்ற குரல் எல்லாம் எழுந்தன. கூச்சலுடன் தமது குரலைப் பொருதவிட்டு ஒரு போர் நடத்தி அவர் உட்கார்ந்தார். அடுத்தபடியாக ஒரு புலவர் கிஷ்கிந்தா காண்டத்தைப் படித்து, உபமான உபமேயங்கள், பாட பேதங்கள், இலக்கண விளக்கங்கள் எல்லாம் நக்கீரர் நடையில் பேசிக் கொண்டு போனார். மறுபடியும் மேற்படி கலாட்டா தொடங்கியது. இடையே குறட்டைகளும் தெறித்தன. மற்றொரு புலவர் பதவுரையில் விளம்பினார். சபை அலுத்துப் போனது.

அந்தச் சமயம் ஒரு கம்பீரமான ஆள் உள்ளே புகுந்தார். நல்ல உயரம்; நல்ல பருமன்; களையான முகம்; தமிழ்ப் பண்புடன் திருகி விட்ட மீசை; புன்னகை கொண்ட வாய். அவர் வந்ததுமே, சபையின் முகம் செந்தாமரை போல் மலர்ந்தது. எல்லாரும் அவரை உபசரித்தார்கள். அவர் உபசாரம் ஒன்றையும் பாராட்டாமல் மேடையின் மேல் ஏறினார். ஜம்மென்று நின்று "உணர்ச்சிதான் கலையின் உருவம்; உணர்ச்சிதான் கம்பன் கலை..." என்று அழகான பேச்சுத் தமிழில் தொடங்கினார். அவர் சொற்கள் உள்ளத்திலிருந்து வந்தன. மாசற்ற குழந்தை தாயுடன் பேசுவதுபோல் அவர் அரிய கலைப் பண்புகளை எளிய நடையில் உணர்ச்சியுடன் வெளியிட்டார். "உணர்ச்சி யில்லாக் கவி காகிதப் பூவைப் போலும். அதில் மணமிராது. கம்பனின் உணர்ச்சி வேகத்தைப் பார்ப்போம்..." என்று சில நிமிஷங்கள் பேசி, மன்றத்தின் உள்ளத்தைத் தமதாக்கிக் கொண்டார். பிறகு,

**தடுத்து இமையாமல்**
**இருந்தவர், தாளில்**
**மடுத்ததும் நாண் நுதி**
**வைத்ததும் நோக்கார்;**
**கடுப்பினை யாரும்**
**அறிந்திலர்; கையால்**
**எடுத்தது கண்டனர்,**
**இற்றது கேட்டார்!**

என்ற பாட்டைக் கம்பீரமாகச் சொன்னார். அப்போது அவரே வில்லை எடுத்து நாணேற்றி முறிப்பது போலிருந்தது. பொருள் சொல்லாமலே விளங்கிவிட்டது. அவர் அந்தச் செய்யுள் நயத்தை அலசி அலசிப் புதுப் புதுக் கலைச் சித்திரங்களாக முன் வைத்துக் காட்டியபோது சபை சந்தோஷத்தில் மூழ்கியது. அரை மணி நேரம் எப்படி ஓடியது என்றே தெரியவில்லை.

ஐயரிடம் மெதுவாக, "இவர் யார்?" என்று கேட்டேன். ஐயர் சொன்னது **நாத முதலியார்** என்று என் காதிற் பட்டது. கம்பன் விழா முடிந்த பிறகு நானும் ஐயரும் தாமிரபருணி ஆற்று மணலில் அமர்ந்திருந்தோம். அங்கே சில ரஸிகர்கள் வந்து பேசிச் சென்ற பிறகு, நான் முதலியாரைப் பற்றி வினவினேன். "டி. கே. சிதம்பரநாத முதலியாருக்குச் சரியான பேர்தான். அவருடைய நாதத்திற்கும் கம்பனுக்கும் மிகவும் பொருத்தமாயிருக்கிறது. இவரால் கம்பன் கவிகள் சோபிக்கும்" என்று ஐயர் புகழ்ந்து பேசினார்.

# கால்கேட்
# குளோரோபில் டூத்பவுடர்




## குளோரோபிலின் பூரண நன்மைகளை நீங்கள் உபயோகிக் கையில் தருகிறது!

## வீரிய குளோரோபில்தான் பலன் தரும்!

வீரிய குளோரோபிலின் நன்மைகளை எல்லாம் புதிய காலஸ்கேட் குளோரோபில் டூத் பவுடர் தருகிறது. வீரிய குளோரோபில் தான் வாய் நாற்றம், கிரிமிகளை நீக்கி ஈறுகளைப் பலப்படுத்துகிறது. காலஸ்கேட் முறையில் குழந்தைகளுக்கு குளோரோபில் கவனிப்பை அளியுங்கள்—அரிய சந்தர்ப்பம்.



### வாய் நாற்றத்தை அழிக்கிறது

ஒரு விசேஷ சூத்திரம் காரணமாக காலஸ்கேட் குளோரோபில் டூத்பவுடர் துரிதமாக, திருத்தமாக வேலை செய்கிறது. உங்கள் வாய் அதிகநேரம் புதுமை, இனிமையுடன் இருக்கிறது. அதன் வாசனை ஜோரானது!

### கிருமிகளை ஒழிக்கிறது



சாப்பிட்டவுடன் காலஸ்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் பற்களைச் சிதைக்கும் அமிலங்கள் ஒழிகின்றன.



### ஈறுகளை பலப்படுத்துகிறது

ஈறுகளை குளோரோபில் பலப்படுத்துகிறது. தினசரி காலஸ்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் குளோரோபிலின் பூரண நன்மைகளைப்பெற்று ஈறுகளைப் பாது காக்கலாம்.




CTP5/1

# டி. கே. சி.யின் சொல் ஓவியம்

ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி, பி. ஏ.

நானும் பி. ஏ. பட்டம் பெற்றவள்தான். ஆங்கிலத்தின் பெருமையையும் அருமையையும் போற்றினவள் தான். ஒரு காலத்தில் 'எனக்குத் தமிழ் தெரியாது' என்று பெருமிதத்துடனும் திருப்தியுடனும் சொல்லிக் கொண்டிருக்கிறேன்! சுருங்கச் சொன்னால் 'படித்த மூட்டாள்'களில் நானும் ஒருத்தியாய் இருந்தேன். என்னைப் பற்றியே இவ்வளவு இழிவாகப் பேசிக்கொள்கிறேனே என்று எண்ணுகிறீர்கள். நான் அப்போது அறியாமையில் மூழ்கி இருந்ததை நினைத்தாலே எனக்கு வெறுப்பாக இருக்கிறது.

அந்தக் காரிருளில் இருந்து என்னை மீட்டவர் மகான் டி. கே. சி. தான். மின்மினிப் பூச்சியின் வெளிச்சத்தைக் கண்டு மயங்கி நின்ற என்னை மெள்ளச் சூரிய வெளிச்சமாகிய தமிழுக்குப் பழக்கி வைத்தார்.

டி. கே. சி. அவர்களைத் தெரிந்து கொள்ளும் பாக்கியம் எனக்குக் கிட்டியதைப் பற்றி அலாதி சந்தோஷம். அவர் வயதில் முதிர்ந்தவரானாலும் அவர் கண்களில் இளமையின் குறுகுறுப்பு தவழும். அதுவும், அவர் ஆங்கிலப் படிப்புப் படித்தவர்களை வெகு நாசுக்காக இறக்கும் போது பார்க்க வேண்டுமே! நானும் அதை அனுபவித்திருக்கிறேன்.

எங்கள் மாமா வீட்டில்தான் அவரை முதலில் சந்தித்தேன். மாமா என்னை அவருக்கு அறிமுகப்படுத்தும் போது 'பி. ஏ. படித்தவள்' என்று வேறு என்னைப் பற்றிச் சொல்லி விட்டார். நான் பெருமையுடன் பெரியவரின் புகழை எதிர்பார்த்துக் கொண்டு அவர் பக்கம் திரும்பினேன்.

"ஓகோ! பி. ஏ. படித்தவர்களா, அம்மாள்! சரி, சரி! என்னைப் போல் நீங்கள் அவ்வளவு மோசம் இல்லை. நான் பி. ஏ. பி. எல். படித்தவனாச்சே!" என்றார். எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

"அதெப்படி?" என்று நான் அசடு வழியக் கேட்டேன்.

"உங்களுக்குத் தெரியாதா! இந்த *டாணுக்கன், அதுதான் நம்ம யூனிவர்ஸிடிப் புலவர்கள் இருக்கிறார்களே, அவர்கள் சொல்லித் தந்ததிலே நம்ம மூளை குழம்பிப் போய்க் கொஞ்ச நஞ்சம் தெரிந்ததும் போயிருக்குமே! இல்லையா, அம்மா! நீங்களே சொல்லுங்க!" என்றார்.

அவர் சொன்னது அவ்வளவும் உண்மைதான் என்று எனக்குக் கேள்வி மேல் கேள்வி போட்டு என் பதில்கள் மூலமாகவே ஸ்தாபித்தார்.

அன்று முதல் என் மனப்பான்மையே மாறி விட்டது. ஆங்கிலப்படிப்புப் படித்திருக்கிறேன் என்று சொல்லிக் கொள்ளவே எனக்கு மிகவும் அவமானமாகப் போய் விட்டது.

இதற்குப் பிறகு நான் அவரைச் சந்தித்தது தான் தெய்வ சங்கற்பம். நான் அகஸ்மாத்தாக என் தோழியின் வீட்டுக்குப் போனபோது, அவர் அங்கு வருவானேன்! வந்ததும் அல்லாமல் என்ன அழகாகச் சில பாடல்களைப் பாடிக் காண்பித்தார்! அவர் பாடல்களைச் சொல்லும் விதத்தில் தமிழின் சுவை அவ்வளவும் தெளிவாக நமக்குத் தெரிந்து விடுகிறது. மோரை மத்தினால் கடைந்தால்தானே வெண்ணெய் மிதந்துவரும்!

அவருடைய பாவம் நிறைந்த சாரீரத்தில், கணீரென்று ஒரு பாட்டை வெகு நிதானமான நடையில், ஒவ்வொரு வரியையும் அர்த்தத்தை அனுசரித்து அங்கங்கே நிறுத்தி இரண்டு மூன்று தடவை பாடுவதைக் கேட்டாலே போதும். அந்தப் பாட்டின் உள் அர்த்தம், அதன் அழகு, பாவம் எல்லாம் உடனே தெரிவதுடன், நம் கண் முன்னால் ஒரு சொற் சித்திரமே தோன்றிவிடும். அம்மாதிரி சொற் சித்திரங்களிலிருந்து அவர் உத்தம, உயர்ந்த தத்துவங்களை விவரிக்கும்போது சுவர்க்கமே அதுதான் என்று தோன்றிவிடும்.

இன்று கூட எனக்கு அவர் ஒலியால் தீட்டிய சொல் ஓவியங்கள் என்றும் அழியா ஆனந்த பொக்கிஷமாக இருக்கின்றன. நினைத்துப் பார்க்கப் பார்க்க அலுப்பதுமில்லை, மங்குவதுமில்லை.

புதைந்து கிடந்த இசைத் தந்திகளை மீட்டி, சுருதி கூட்டி, ஸுநாதம் எழுப்புவதுபோல், நம் உள்ளத்தில் புதைந்து கிடந்த தமிழ் நாதத்தை எழுப்பியவர் டி. கே. சி. அவர்கள் தான்!

## எங்கள் டி. கே. சி!

கி. ரங்கராஜன்

இக்கால் அடங்காப் புகழ் பரப்பும்
 தெளிந்த ஞானத் தினகரனே!
எக்கால் நுமது மொழி கேட்டு
 எங்கள் செவிகள் மகிழ்ச்சிகொளும்
எக்கால் நுமது குளிர் வதனம்
 எங்கள் மனத்தின் இருளோட்டும்
தக்கார் புகழும் டி.கே.சி.
 நும்மைப் பிரிந்து நரியேமால்.

எந்தாய் வாராய் வாராயென்
 றெழிலார் 'தீபன்' அழைத்தாரோ!
மைந்தா வருக வருகவென
 வருந்திக் கம்பன் அழைத்தாரோ!
சிந்தா குலத்தில் எமைத்தள்ளிச்
 சென்ற தென்னே டி.கே.சி.!
நந்தா விளக்கே நாயகமே
 நங்கள் துயரம் சொல்லரிதால்.

'பொய்யாம் செருகு கவிகள் இவை
 பொருநை ஆற்றில் எறிந்திடுவீர்!
மெய்யாம் கவிகள் இவற்றை நீர்
 விரும்பிப் படிப்பீர்' எனச்சொல்ல
ஐயா எங்கள் டி.கே.சி.
 ஆரைக் காண்போம் அந்தோ நாம்!
நையா நின்றேம் எம்முள்ளம்
 நமனார் கொடுமை பெரிதம்மா!

---

* டி. கே. சி. அவர்கள் அதிகமாய் ஆராய்ச்சி செய்யும் புலவர்களை "டாணுக்கன்" என்பார். ஒரு ராஜ சபையில் தமிழ்ப் புலவர்களை அழைத்துப் போட்டி வைத்தாராம் அவ்வூர் ராஜா. புலவர்கள் வந்ததும் ராஜா தலையை அசைத்து வரவேற்று ஆசனத்தில் அமருவதற்குத் தலை அசைப்பு மூலமாகவே ஜாடை செய்தாராம். புலவர்கள், அதையே ஒரு பகுத்தறிவுப் போட்டி என்று எண்ணி வெகு சாமர்த்தியமாகத் 'தாம் ஆராய்ச்சி செய்து தாங்கள் அத்தலையசைப்பின் மர்மத்தைக் கண்டு பிடித்து விட்டோமென்ற பெருமிதத்துடன் "டாணு" என்றார்களாம். ராஜா, புலவர்களுக்கு மூளைக் கொதிப்பு என்றெண்ணிச் சபையைக் கலைத்து விட்டாராம்.




"ஜே. பி. மங்காராமின் **ராயல் க்ரீம்** பிஸ்கட்டுகளை வாங்கித் தரச் சொல்லி அப்பாவைக் கேள். இந்த பிஸ்கட்டுகளில் இருக்கும் நேர்த்தியான க்ரீமின் வாசனையை நீ விரும்புவாய்!"




**தரத்தில் உயர்ந்தது**
**விடமின் சத்து நிறைந்தது**

அழகிய வர்ண வேலைப்பாடுகளமைந்த காற்றுப்புகாத பாக்கெட்டுகளில் உள்ள மங்காராமின் **ராயல் க்ரீம்** பிஸ்கட்டுகள் பரிசுக்கு உகந்ததாக விளங்குகின்றன!

J. B.
MANGHARAM'S
ROYAL
CREAM
BISCUITS

**ஜே. பி. மங்காராம் & கோ.** **குவாலியர்**

NAS : M. 2.

# சமாதான வீரர்களின் யாத்திரை

## 3




மறு நாள் காலையில் டீ குடித்து விட்டு ஒரு நண்பருடன் அந்த ஊரைச் சுற்றி வருவதற்காகக் கிளம்பினேன். நாங்கள் இருந்த கிராமத்தின் பழைய பெயர் "டாங்—ஜாங்—ரீ" என்பது. ஜெனரல் தோராட் இப்பொழுது இதற்கு "ஹிந்த் நகர்" என்று பெயர் வைத்திருக்கிறார். இங்கே ஒரு ரயில்வே ஸ்டேஷன் இருக்கிறது. இந்தக் கிராமம் முப்பத்தெட்டாவது அட்ச ரேகைக்கு அருகில் இருப்பதால் இங்கே பல தடவை கோர யுத்தம் நடந்திருக்கிறது.

ஸ்டேஷனில் குண்டு பாயப்பட்டு ஒரு எஞ்ஜின் உருத் தெரியாமல் கிடந்தது. நாலைந்து ரயில் வண்டிகள் குண்டு வீச்சுக்கு இலக்காகி இருப்புப்பாதையை விட்டுக் கீழே உருண்டு கிடந்தன. இருப்புப் பாதைகள் தகர்த்தெறியப்பட்டிருந்தன. இந்தியத் துருப்புக்களின் சௌகரியத்துக்காக இப்பொழுதுதான் ஒரே ஒரு இருப்புப் பாதை போடப்பட்டிருக்கிறது.

பல இடங்களில் சிவப்பு தகரப் பலகைகளும், "கண்ணிகள் அபாயம்" "கண்ணிகள் போடப்பட்ட இடம்; சாலையிலேயே செல்" என்று எழுதப்பட்ட பலகைகளும் தென்பட்டன.

இந்தமாதிரி நிலக் கண்ணிகளை அப்புறப் படுத்தாததினால்தான், எங்களை முதலில் "தில்வாரா" கப்பலில் போக அனுமதிக்காமல், இருபது நாட்கள் கழித்து ஜலகோபாவில் செல்லும்படி மேலதிகாரிகள் சொன்னார்கள்.

ஒவ்வொரு குன்றின் மீதும் முள் கம்பிகள், சுருட்டை சுருட்டையாகக் கிடந்தன. குன்றுகளில் பள்ளங்கள் வெட்டப்பட்டு மணல் மூட்டைகள் அடுக்கிக் கிடந்தன. பின் வாங்கும்போது புறக்கணிக்கப்பட்ட குண்டுகள், மற்றும் பல யுத்த தளவாடங்கள் முதலியன அத்தகைய பள்ளங்களில் அப்படி அப்படியே குவிந்து கிடந்தன.

ஒரு சைக்கிள் கடையில், குண்டுகள் பட்டு சைக்கிள்கள் சுக்கு நூறாக எரிந்து பஸ்மமாகிப் பல இடங்களில் சிதறிக் கிடந்தன.

இங்கு கற்கட்டிடங்கள் குறைவு. அங்கும் இங்கும் காணப்பட்ட ஓரிரண்டு கட்டிடங்களும் துப்பாக்கி ரவைகளினால் சல்லடைக் கண்கள்போலத் துளைக்கப்பட்டிருந்தன. பல கட்டிடங்கள் இடிந்து கிடந்தன. ஏழைக் குடிகளின் வைக்கோல் வேயப்பட்ட குடிசைகளோ உருத் தெரியாமல் தரையோடு தரையாய்ச் சாம்பலாகிக் கிடந்தன. இதிலிருந்து இந்த இடத்தில் ஒவ்வொரு அங்குல நிலத்திற்காகவும் பெரும் போர் நடந்திருக்கிறது என்பது தெரிந்தது.

தெருக்களில் ஒருவித விளக்கும் கிடையாது. எங்கும் கும்மிருட்டு சூழ்ந்திருந்தது. கைதிகள் காம்பவுண்டு முள் வேலியைச் சுற்றியும், கூடாரங்களுக்கும் மட்டும் மின்சார விளக்குகள் இருந்தன. இதற்குத் தேவையான மின்சாரத்தைச் சிறிய யந்திரங்கள் ஆங்காங்கே உற்பத்தி செய்தன. இந்த மின்சார உற்பத்தி செய்யும் இயந்திரங்களில், பழுது ஏற்பட்டுவிட்டால் விளக்குகளுக்குத் திண்டாட்டம்தான்! பின்னர் 'ஹரிக்கேன்' விளக்கினிடம் சரணடைய வேண்டி வரும்! சில சமயம் இந்த இயந்திரங்களினால் அதிகமாக மின்சாரம் உற்பத்தி செய்ய முடியாதபோது, இரவு பதினொரு மணிக்கு மின்சார விநியோகத்தை நிறுத்திவிட்டு, பிறகு காலை ஐந்து மணிக்குத்தான் மறுபடியும் விநியோகம் செய்வார்கள். இந்த மின்சார உற்பத்தியையெல்லாம் பெரும்பாலும் அமெரிக்கர்களே செய்து வந்தார்கள்.

* * *

விவசாய நாடான கொரியாவில், மைல் கணக்காக வயல்கள் பயிர் செய்யப்படாமல் ஹிந்த் நகரைச் சுற்றிலும் பாழாகக் கிடப்பதைப் பார்த்தோம். இக்காட்சி, யுத்தத்தினால் உண்டாகும் பயங்கர விளைவுகளைக் கண் முன் காட்டின. ஹிந்த் நகர் என்ற டாங்—ஜாங்—ரீ யில் குடி ஜனங்களே கிடையாது.



கொரியா கிராமத்தில் உள்ள குடிசைகள்

இரண்டு மாதங்கள் வரை நாங்கள் காக்கைகளைக் கூடக் காண முடியவில்லை. இந்தியாவிலிருந்து வந்திருக்கிறார்களே, பார்ப்போம் என்றோ, என்னவோ அடிக்கடி பாம்புகள்தான் கூடாரங்களிலும், நடைபாதையிலும் எங்களைப் பேட்டி கண்டன. இவ்வாறு வேண்டாத விருந்தாளிகள் போல வந்த விஷப் பாம்புகள், சிப்பாய்



நடுநிலைமை நாடுகள் கமிஷன் கூட்டம் (இடது கைப்புறத்திலிருந்து மூன்றாவதாக உட்கார்ந்திருப்பவர் கமிஷனின் தலைவரான ஜெனரல் திம்மய்யா.)

களின் கல்லுக்கும், தடிக்கும், லாரிகளின் சக்கரங்களுக்கும் இரையாயின.

பொழுது போக்கிற்குத் திரும்பத் திரும்பக் கைதிகள் அடைக்கப்பட்டிருந்த காம்பவுண்டைத்தான் சுற்றிச் சுற்றி வரவேண்டியிருந்தது. கைதிகளுக்குத் துணி மணிகளோ, சாப்பாட்டுச் சாமான்களோ கைதிகளைக் கண்காணிப்பவர்களும் ,வெகுமதிகள், பத்திரிகைகள், விளையாட்டுச் சாமான்கள் முதலியவைகளைச் செஞ்சிலுவைக் காரர்களும் கொடுத்து வந்தார்கள்.

உண்மையில் யுத்தக் கைதிகளை, கைதிகள் என்றே எண்ண முடியவில்லை. முள் வேலியைத் தாண்டி வரமுடியாது; மனைவி மக்களை, உற்றார், உறவினர்களைக் காண முடியாது என்ற ஒன்றைத் தவிர, மேற்படி கைதிகள் அவர்களைக் காவல் காக்கும் சிப்பாய்களைவிடப் பல விதத்திலும் சுயேச்சையாக இருந்தார்கள். முதல்தரமான ரேஷன் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. அவர்களே சமைத்துக் கொண்டார்கள். விளையாட 'வாலி பால்' 'பாஸ்கெட் பால்' முதலியன கொடுக்கப் பட்டன. ஒவ்வொரு கைதி முகாமிலும் தேகப் பயிற்சி செய்ய 'பார்'கள் இருந்தன. இரவிலும் பகலிலும் நினைத்த போதெல்லாம் கைதிகள், 'பாரில்' சுயேச்சையாகத்தேகப் பயிற்சி செய்து கொண்டிருந்தார்கள்.

படிக்க அவர்களுக்குப் புத்தகங்கள் கொடுக்கப் பட்டன. பாண்டு வாத்தியம், ஒலி பெருக்கி முதலிய வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டன. உண்மையில் கைதிகளுக்குக் கொடுத்து மிஞ்சியதுதான் மற்றவர்களுக்கு! கைதிகள் கைதிகளல்ல; கண்காணிப்பவர்களும் கட்டிக் காப்பவர்களும்தான் ஹிந்த் நகரில் கைதிகளாக இருந்தனர்!

சென்ற மகா யுத்தத்தின் போது, இத்தாலியக் கைதிகள், பங்களூரில் வைக்கப்பட்டிருந்தார்கள். அவர்கள் பல வேலை செய்து வந்தார்கள். அவர்கள் செய்த வேலைக்குத் தக்கவாறு அப்போது அவர்களுக்கு ஊதியம் கூடக் கொடுக்கப் பட்டது.

ஆனால் கொரியா யுத்தக் கைதிகளோ தத்துப் பிள்ளைகளைப் போல இருக்கிறார்கள். அவர்கள் ஒருவித வேலையும் செய்வதில்லை. சாப்பிடுவது, தூங்குவது, தேகப் பயிற்சி செய்வது இவைதான் அவர்களுடைய வேலை. வெளியில் செல்லும் போதும் அவர்கள் கை விலங்கின்றித்தான் சென்றார்கள். அவர்கள் நடந்து செல்லும்போது அவர்களுக்குக் காவலாக முன்னும் பின்னும் இந்திய வீரர்கள் துப்பாக்கிச் சகிதம் சென்றனர். லாரியில் சென்றார்களானால், இந்திய சிப்பாய்கள் முன்னாலும், பின்னாலும் லாரியில் துப்பாக்கியோடு கண்காணித்துச் சென்றனர். கொரியாக் கைதிகள் எல்லாம் உண்மையில் மிகவும் கொடுத்து வைத்த பிறவிகள்தான்! இந்திய வீரர்கள் கையில் துப்பாக்கியிருந்தும் கைதிகள் அட்டகாசமும் ஆர்ப்பாட்டமும் செய்யும்போது, 'தெய்வமே' என்று நின்றுகொண்டிருந்தனர். அவர்கள் சமாதான வீரர்களாகச் சென்றதால், துப்பாக்கிகளை உபயோகிக்க விரும்பவில்லை.

வந்த இரண்டு நாளைக்கெல்லாம், அதாவது அக்டோபர் முதல் தேதி, கைதிகள் முகாமில் நிலைமை மோசமாக இருந்தது. நடுநிலைமை நாட்டுக் குழுவினர், கைதிகளின் முகாமைப் பார்வையிடச் சென்றனர். அக்குழுவினரைக் கண்டதும், கைதிகள் ஆர்ப்பாட்டம் செய்ய ஆரம்பித்தனர். 'மலைப் பிஞ்சு'கள் பறக்கலாயின.

எங்கள் எதிரில் இருந்த பி 53, காம்பவுண்டு கைதிகள் முள் வேலியைத் தகர்த்துக் கொண்டு வெளிவரப் பிரயத்தனம் செய்தனர். அந்தக் காம்பவுண்டைக் கண்காணித்து வந்த மேஜர், அவ்வப்பொழுது ஒலி பெருக்கி மூலம், கைதிகளின் தலைவர்களுக்கு எச்சரிக்கை செய்து வந்தார்.

"உங்களுடைய ஆட்கள் கற்களை வீசுகிறார்கள்" "முள் வேலியின் மேல் ஏறுகிறார்கள்", "இறங்கச் சொல்லுங்கள்", "இல்லையானால் சுடும்படி உத்தரவு கொடுப்பேன்", "உங்கள் ஆட்களை அந்த

## காஞ்சியில் திருமணம்

காவேரிப்பாக்கம் ஸ்ரீ கே. ஏ. முனுசாமி முதலியார் அவர்கள் குமாரன் செல்வன் எம். அருளானந்தம் அவர்களுக்கும், ஸ்ரீ சி. ஜகதீச முதலியார் அவர்களின் குமாரத்தி செல்வி மங்கையர்க்கரசிக்கும் பிப்ரவரி ஏழாந் தேதி பெரிய காஞ்சிபுரம், செல்லுக்காரத் தெருவு, "ராஜகோபால கல்யாண மண்டபத்தில்" வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. உறவினர்களும் நண்பர்களும் பிரமுகர்களும் ஏராளமாக விஜயம் செய்து திருமண



விழாவைச் சிறப்பித்து மணமக்களுக்கு ஆசிகூறினர். வாழ்த்துச் செய்திகளும் சன்மானமும் வந்து குவிந்தன. வாழ்க மணமக்கள்!

உயர்ந்த மேடையிலிருந்து இறங்கச் சொல்லுங்கள் " என்று அடிக்கடி எச்சரித்தார்.

கைதிகள் கோபுரம் போன்ற உயர்ந்த மேடையில் ஏறி நின்று கொண்டு, தங்கள் சுற்று வட்டாரத்தில் இருந்த காம்பவுண்டு கைதிகளையும் தூண்டி விட்டனர். ஆகவே கைதிகளை மிகவும் ஜாக்கிரதையாகக் கையாள வேண்டி வந்தது. மேஜர் மிகவும் சாமர்த்தியமாக நிலைமையைச் சமாளித்து வந்தார். ஆனால் நமது சமாதான வீரர்களின் உயர்ந்த லட்சியத்தைக் கைதிகளால் உணர்ந்து கொள்ள முடியவில்லை.

அதோ மேஜர் எச்சரிக்கிறார்: "மிஸ்டர் லீ. உம்முடைய அந்த ஒலி பெருக்கியை, அந்தக் கோபுரத்திலிருந்து கீழே இறக்குங்கள். அந்த மனிதரை இறங்கச் சொல்லுங்கள். இல்லையேல் சுடுவேன். ஒலிபெருக்கி செட்டை நீங்கள் இன்னும் மேடையிலிருந்து கீழே கொண்டு வரவில்லை. அவரை வேலியிலிருந்து இறங்கச் சொல்லுங்கள். ஒன்று, இரண்டு, மூன்று!"

அவ்வளவுதான்! "பட், பட், பட்!" துப்பாக்கியிலிருந்து ரவைகள் பறந்தன. இந்திய வீரர்களின் துப்பாக்கியிலிருந்து ரவை வெளி வந்தால் "ராம பாணம்" தான். எத்தனை பேர் இரையோ!

**ம**றுபடியும், ஒலி பெருக்கியில் ஏதோ கேட்கிறது. "இந்தியா மட்டும் நடு நிலைமை வகிக்கிறது" "India Democratic" என்று திருப்பித் திருப்பி இரண்டு தடவை மேஜர் சொன்னார். தாம் சொன்னதைக் கொரியா பாஷையில் மொழி பெயர்த்துச் சொல்லச் சொன்னார் தமது பக்கத்திலிருந்தவரை.

உடனே கைதிகள், "இந்தியா பொதுவுடைமைக்காரர்களின் ஏஜெண்டு" "இந்தியா நம்பர் 10" (அதாவது கெட்டவர்கள்) என்று கூச்சல் போட்டனர். ஆகையால்தான் காம்பவுண்டு கமாண்டர், மேலே சொன்னது போல ஒலி பெருக்கியில் சொன்னார்.

பிறகுதான் கைதிகள் தங்கள் ஆர்ப்பாட்டத்தைக் குறைத்துக் கொள்ள முற்பட்டார்கள்.

எனினும் அன்று நடந்த துப்பாக்கிப் பிரயோகத்தின் காரணமாக மூன்று கைதிகள் தான் மரணமடைந்தனர். எட்டு பேருக்குக் காயம்.

மிஸ்டர் லீ என்பவர் கல்லூரியில் தத்துவப் பேராசிரியர். அமெரிக்கா சென்றவர் என்று சொல்லுகிறார்கள். அவருக்கு ஆங்கிலம் தெரியுமாதலால் G. 53, காம்பவுண்டு கைதிகளின் தலைவராக இருந்து வருகிறார்.

இதே போல ஒவ்வொரு காம்பவுண்டிலும், ஒரு கைதி தலைவராக இருக்கிறார். அவர்களின் மூலம், கைதிகள் தங்களுடைய தேவைகளையோ குறைகளையோ தெரிவிக்கிறார்கள். (தொடரும்)

## பொள்ளாச்சி தந்த உத்தமர்

பொள்ளாச்சி நகரில் "ஆனைமலை பஸ் டிரான்ஸ்போர்டு" என்ற பஸ் போக்குவரத்து ஸ்தாபனத்தை நிறுவி, அதன் ஜெனரல் மானேஜராகப் பொறுப்பேற்று மிகத் திறமையாக நிர்வாகம் புரிந்து வந்த திரு பி. நாச்சிமுத்துக் கவுண்டர் பிப்ரவரி ஏழாந் தேதி இந்த மண்ணுலகை விட்டு மறைந்தார் என்ற செய்தி கேட்டுத் திடுக்குற்றோம்.

திரு நாச்சிமுத்துக் கவுண்டர் மிக எளிய குடும்பத்தில் பிறந்து உழைப்பால் உயர்ந்த உத்தமர்; ஏழைகளின் தோழர்; தர்ம சிந்தனையும் தன்னடக்கமும் கொண்ட தயாளர்; மிகுந்த தெய்வ பக்தி நிறைந்தவர் என்றெல்லாம் மக்களால் பாராட்டப் பெற்றவர்.



1931-ம் வருஷம் முதல் மூன்று ஆண்டுகள் பொள்ளாச்சி நகர சபைத் தலைவராக இருந்து பொள்ளாச்சி நகரத்தில் பல அருமையான சீர்திருத்தங்கள் செய்து அதைச் சுகாதார வசதியுள்ள நகரமாக மாற்றி அமைத்தார்.

பொள்ளாச்சி அருள் மாரியம்மன் கோயில் தர்ம கர்த்தா பொறுப்பேற்று மாரியம்மன் கோயில் திருவிழாக்களை விமரிசையாக நடத்தினார். சுமார் இரண்டு லட்ச ரூபாய் செலவு செய்து கோயிலைப் புனருத்தாரணம் செய்து தமிழகம் வியக்கக் கும்பாபிஷேகம் நடத்தினார்; நாஸ்திகத்துக்குச் சாவு மணி அடித்தார்.

பல கல்வி ஸ்தாபனங்களுக்கும், ஏழை மாணவர்களுக்கும் பொருள் உதவி செய்திருக்கிறார். மூன்று லட்சம் பெறுமானம் உள்ள சொத்துக்களை எழுதி வைத்து அதன் வருவாயைக் கொண்டு ஏழைக் குழந்தைகள் படிப்பதற்கும், திக்கற்ற சிறு குழந்தைகளுக்குப் பால் கொடுத்துக் காப்பாற்றவும் ஏற்பாடு செய்திருக்கிறார்.

அவருடைய இறுதிச் சடங்கின் போது பொள்ளாச்சி நகர காங்கிரஸ் கமிட்டி, இளைஞர் காங்கிரஸ், தேசீய மோட்டார் தொழிலாளர் சங்கம், தேசீய சலவைத் தொழிலாளர் சங்கம் இன்னும் பல பொது ஸ்தாபனங்கள் மாலைகள் அணிவித்துத் தங்கள் மரியாதையைத் தெரிவித்துக் கொண்டன. ஏராளமான மக்கள் திரண்டு வந்திருந்தனர்.

திரு நாச்சிமுத்துக் கவுண்டரின் பிரிவால் வாடும் அவர் அருமை மனைவியாருக்கும், குமாரர் திரு நா. மகாலிங்கம் எம். எல். ஏ. அவர்களுக்கும், ஏராளமான நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் நமது ஆழ்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



# சிறந்த பாட்டரிக்கு

# குறைந்த விலை...

இந்த

**5** காரணங்களுக்காக

# ஸ்டாண்டர்ட்

பாட்டரிகளையே நீங்கள்

விரும்புவீர்கள்

**1** **குறைந்த விலை** "ஸ்டாண்டர்ட்" இந்தியாவின் மிக பெரிதான பாக்டரியில் தயாரிக்கப்படுகிறது. அவர்கள் தயாரிப்பின் திறமை "ஸ்டாண்டர்ட்" உங்களுக்கு மற்ற எந்த நல்ல பாட்டரிகளையும்விட குறைவான விலைக்கு கிடைக்கும்படி செய்கிறது.



**2** **நீடித்த உழைப்பு** கூர்ந்த கவனிப்புடன் சிறந்த முறையில் தயாரிக்கப்படுவதாலும், சுத்தமான ரப்பரில் செய்த பலம் பொருந்திய கேஸில் அடைத்திருப்பதாலும் "ஸ்டாண்டர்ட்" உங்களுக்கு நீடிய காலம் உழைக்கிறது.



**3** **பூர்ண க்யாரண்டி** சந்தேகத்திற்கோ வாக்குறுதிக்கோ வகையில்லை. ஒவ்வொரு "ஸ்டாண்டர்ட்" பாட்டரியுடனும் உங்களுக்கு ஆறுமாதம் பூர்ண க்யாரண்டி சர்ட்டிபிகேட் கிடைக்கிறது. சர்வீசும் இலவசமாக கிடைக்கிறது.



**4** **சிறந்த தயாரிப்பு** "ஸ்டாண்டர்ட்" ஒரே பாக்டரியில் மிக ஏராளமான பாகங்களை செய்கிறார்கள். ஆதலால் ஒவ்வொரு பாகங்களுக்கும் அதன் தயாரிப்பில், மிக சிறந்த விதத்தில், பூர்ணமான கவனம் அளிக்கப்படுகிறது.



**5** **ஏராளமான புதுக்கார்களில் உபயோகிக்கப்படுகிறது.** இன்றும் ஏராளமான புதுக்கார்களிலும் "ட்ரக்"களிலும் மற்ற எந்த பாட்டரிகளையும் விட, "ஸ்டாண்டர்ட்" பாட்டரிகளையே உபயோகிக்கிறார்கள். இந்தியாவில், கார் தயாரிப்பில் முன்னிலையிலிருப்பவர்களை பின்பற்றுங்கள். "ஸ்டாண்டர்ட்" பாட்டரிகளையே விரும்பி வாங்குங்கள்.



**ஸ்டான்டர்ட் பாட்டரீஸ் லிமிடெட், பம்பாய்**

விநியோகஸ்தர்கள் :

அடிஸன் அன்டு கோ. லிமிடெட், 158, மவுண்ட் ரோட், மதராஸ் 2,

கிளைகள்: பெங்களூர், வெல்லிங்டன் (நீலகிரி) கோயமுத்தூர்.

STB. 6845

# டி. கே. சி. மாமா

## ஆனந்தி

"மாமா! இன்னும் இரண்டு நாள் கழித்து ஊருக்குப் போகலாம், மாமா! இன்றைக்குப் போக வேண்டாம். இந்தத் தடவை நீங்கள் வந்து பத்து நாள்தானே ஆச்சு?"

"இப்பொழுது எதற்காக ஊருக்குப் போகிறேன் என்று உனக்குத் தெரியுமா?"

"தெரியாதே! எதற்காக?"

"திரும்பி வருவதற்காகத்தான்!"

இந்தப் பதிலைக் கேட்டதும் அவரை வழியனுப்ப வந்திருந்தவர்கள் அனைவரும் 'கொல்' லென்று சிரித்தார்கள். நானும் சிரித்தேன். அந்தக் கோலாகலத்தில் டி. கே. சி. மாமா அவர்கள் ஊருக்குப் போகிறார் என்ற வருத்தம்கூட மறைந்து விட்டது.

நான் பன்னிரண்டு வயதுச் சிறுமி. டி.கே.சி. மாமாவுக்கு அறுபது வயதுக்கு மேல் இருக்கும். எங்களிருவருக்கும்தான் மேற்கண்ட சம்பாஷணை எட்டு வருஷங்களுக்கு முன்னால் நடந்தது. நேற்றுப் பேசியது போல் நினைவில் இருக்கிறது. இப்போது டி. கே. சி. மாமா இந்த உலகத்தை விட்டே போய் விட்டதாகச் சொல்கிறார்கள். இது உண்மையாக இருக்குமா? "திரும்பி வருவதற்காகத்தான் ஊருக்குப் போகிறேன்!" என்று அப்போது சொன்னாரே! அந்த வாக்கை நிறைவேற்றாமலே போய் விடுவாரா? அவ்விதம் நினைப்பதற்கு உள்ளம் மறுக்கிறது.

* * *

ஒரு சமயம் நாங்கள் டி. கே. சி. மாமாவுடன் ரயில் பிரயாணம் செய்து கொண்டிருந்தோம். நான் அப்போது அருமையாக வளர்த்து வந்த நாய்க்குட்டியும் எங்களோடு பிரயாணம் செய்து கொண்டிருந்தது. ஒரு ஸ்டேஷனில் இன்னொரு நாயைப் பார்த்துவிட்டு இது பெரிதாகக் குரைக்க ஆரம்பித்து விட்டது. நான் டி. கே. சி. மாமாவிடம், "ஏன் மாமா? ஒரு நாய் இன்னொரு நாயைப் பார்த்த வுடனேயே எதற்காக இப்படிக் குரைக்கிறது?" என்று கேட்டேன்.

அவர் சிரித்துக் கொண்டே, "எல்லாம் மனிதர்கள் மாதிரியேதான்!" என்றார்.

வண்டியில் இருந்த அத்தனை பேரும் எங்களுடன் சேர்ந்து சிரித்தார்கள்.

'மனிதர்கள் ஒருவருக்கொருவர் சண்டை போடுவது அவர்களுடைய இயற்கைக் குணம்; சிநேகமாயிருப்பதுதான் அதிசயம்' என்பது டி. கே. சி. அவர்களின் கருத்து.

அந்த அதிசயமான குணத்தை டி. கே. சி. யிடம் பார்த்ததுபோல் இனிமேல் யாரிடம் பார்க்கப் போகிறோம்? அவரைப் போல் குற்றங் குறைகளை யெல்லாம் ஒதுக்கி மறந்து விட்டுச் சிநேகத்தைப் பேணி வளர்ப்பவர்கள் வேறு யார் இருக்க முடியும்?

டி. கே. சி. அவர்கள் பெரியவர்களிடம் சிநேகமாயிருந்தது அதிசயம் என்றால், குழந்தைகளிடம் அவருடைய சிநேகம் அற்புதம் என்று சொல்லலாம்.

குழந்தைகளுக்கும் டி. கே. சி. மாமாவென்றால் வேறு உற்றார் - உறவினர் யாரிடமும் இல்லாத பாசம் உண்டாகிவிடும்.

ஏனெனில், பெரும்பாலான குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடம் என்றால் சிறிதும் பிடிப்பதில்லை. டி. கே. சி. மாமாவுக்கும் பள்ளிக்கூடம் பிடிப்பதில்லை.

"பள்ளிக்கூடத்தின் தலையில் இடி விழட்டும்!" என்றும், "யுனிவர்ஸிடியின் தலையில் தீயை வை!" என்றும் டி. கே. சி. மாமா அடிக்கடி சொல்லுவது குழந்தைகளுக்குக் குதூகலத்தை உண்டாக்கும்.

இவ்வாறு டி. கே. சி. அவர்கள் பள்ளிக்கூடங்களை வெறுத்ததற்குக் காரணம், குழந்தைகள் படும் கஷ்டத்தைப் பார்த்து அவர் கொண்ட அநுதாபந்தான்.

தற்காலப் பள்ளிக்கூடங்களில் குழந்தைகளுக்குச் சரியாகப் போதிப்பதுமில்லை, அன்போடு போதிப்பதுமில்லை என்பது டி. கே. சி. அவர்களின் கருத்து.

"பள்ளிக்கூடத்தில் ஒரு மாதத்தில் சொல்லிக் கொடுப்பதை நான் ஐந்து நிமிஷத்தில் சொல்லிக் கொடுக்கிறேன், பார்க்கிறாயா?" என்று அடிக்கடி சொல்லுவார்.

இதை ஒரு தடவை நான் சோதனை செய்து பார்க்கும்படி நேர்ந்தது.

நான் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தபோது எனக்குக் கணக்கு என்றால், ஒரே பயம். ஒரு தடவை எனக்கு 'அல்ஜீப்ரா' கணக்கு ஒன்று புரியவே யில்லை. டி. கே. சி. மாமாவுக்கு எங்களிடம் அநுதாபம் உண்டென்று தெரிந்திருந்தபடியால், அந்தக் கணக்கை மாமாவுக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டு, "இப்படி யெல்லாம் எங்கள் தலையைப் பள்ளிக்கூடத்தில் உருட்டுகிறார்கள்!" என்று எழுதினேன். நாலாவது நாள் குற்றாலத்திலிருந்து எனக்குப் பதில் வந்தது. அந்த அல்ஜீப்ரா கணக்கை எனக்குத் தெளிவாய்ப் புரியும்படியாகப் போட்டு, அதை விளக்க ஒரு படமும் போட்டு, கணக்கை மிகச் சுலபமாகச் செய்து, அனுப்பியிருந்தார். அதற்கு அடுத்தாற் போல நான் எழுதிய கணக்குப் பரீட்சையில் நிறைய மார்க்குகள் வாங்கினேன்.

இதற்குப் பிறகு பள்ளிக்கூடத்தில் என்னைப் படுத்திய பாடுகளைப் பற்றி அடிக்கடி கடிதம் எழுத ஆரம்பித்தேன்.

இலக்கணத் தமிழின் பிடியில் சிக்கிக் கொண்டு கஷ்டப்பட்ட மாணவிகளில் நானும் ஒருத்தி. ஒரு சமயம் பள்ளிக்கூடத்தில் எங்களை யெல்லாம் ஐம்பது நன்னூல் சூத்திரங்களை நெட்டுருப் பண்ணச் சொல்லி



பிப்ரவரி பன்னிரண்டாம் தேதியன்று கோவை உட்லண்ட்ஸ் நந்தவனத்தில் ஸ்ரீ சாமுவேல் "கல்கி" ஆசிரியருக்கு ஒரு சிற்றுண்டி விருந்தளித்தார். அந்த விருந்து வைபவத்தில் கோவை எழுத்தாள அன்பர்கள் "ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகத் தஞ்சை ஜில்லாவில் காவேரி நதி பொங்கிப் பெருகி வருகிறது. அதன் கழனிகளில் செந்நெல்லும், கரும்பும் தீங்கனிகளும் செழித்து வளருகின்றன. வீரமும், வீரமும். கொற்றமும், கொடையும் தஞ்சை மண்ணில் கோலோச்சியதுண்டு. 'தமிழ் கூறும் நல்லுலகம்' எல்லாம் தஞ்சையின் விஞ்சையை வியந்து பெருமிதம் கொள்கிறது" என்று ஆரம்பித்து ஒரு அழகான அன்பு மடலை ஸ்ரீ கல்கி அவர்களுக்கு வாசித்தளித்தார்கள். இந்த வைபவங்களுக்கு ஸ்ரீ சி. எஸ். ரத்தினசபாபதி முதலியார் அவர்கள் தலைமை தாங்கிச் சிறப்பித்தார்.

ஸ்ரீ சாமுவேல் அனைவரையும் வரவேற்றார். ஸ்ரீ எஸ். ஆர். பி. செட்டியார், ஸ்ரீ நஞ்சுண்டையா, ஸ்ரீ கப்ரி முதலியவர்கள் கல்கி ஆசிரியரை வரவேற்றுப் பேசினார்கள். வரவேற்புகளுக்கு ஆசிரியர் கல்கி நன்றி கூறிய பிறகு, 'கோவைக் குரல்' ஆசிரியர் ஸ்ரீ கே. பி. சாரதி வந்தனோபசாரம் கூறினார்.

விழாவுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ ரத்தினசபாபதி முதலியார், விருந்தளித்த ஸ்ரீ சாமுவேல், வந்தனோபசாரம் கூறிய ஸ்ரீ கே. பி. சாரதி முதலியவர்களை மேலேயுள்ள படத்தில் காணலாம்.

---

உத்தரவு போட்டார் ஆசிரியர். நான் அப்படியே இடிந்து போய் விட்டேன். நன்னூலின் பேரிலும், உபாத்தியாயர் பேரிலும், ஏன், தமிழின் மீதுமே எனக்கு ஆத்திரம் பொங்கியது. என் கோபத்தை யெல்லாம் வைத்து, டி. கே. சி. மாமாவுக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினேன்.

நன்னூல் சூத்திரம் படியாதவர்களுக்கு அதிலிருந்து இரு உதாரணங்கள் தருகிறேன். இல்லாவிட்டால் என்னுடைய கோபத்துக்குக் காரணம் புரியாது.

"இடுகுறி காரண மரபோடாக்கம்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்று
வேற்றுமைக் கிடனாய்த் திணைபாலிடத் தொன்று
ஏற்பவும் பொதுவும் ஆவன பெயரே."

"அன் ஆன் இன் அல் அற்று இற்று அத்து அம்
தம் நம் நும் ஏ அ உ ஐ கு ன
இன்ன பிறவும் பொதுச் சாரியையே."

ஏறக் குறைய இப்படித்தான் எல்லாம் இருக்கும். குழந்தைகள் இந்தச் சூத்திரங்களைப் படித்துப் புரிந்துகொள்வது எப்படித் தலைவேதனையாக இருக்கும் என்பதை ஊகித்துக் கொள்ளலாம். அதுவும், ஐம்பது சூத்திரங்களை ஐந்து நாளில் ஒப்பிக்க வேண்டும்; இல்லா விட்டால் 'இம்போஸிஷன்' எழுத வேண்டும் என்றால், எப்பேர்ப்பட்ட பயங்கரமான தண்டனை!

நான் எழுதிய கடிதத்தை டி. கே. சி. மாமா அப்போது புது டில்லியில் இருந்த ராஜாஜி அவர்களுக்கு அனுப்பி வைத்திருக்கிறார்கள் என்பதாகப் பின்னால் தெரிந்தது.

"கடிதத்தில் எழுதி யிருக்கும் தமாஷ் எல்லாம் நன்னூல் படித்தவர்களுக்குத்தான் விளங்கும். ரொம்ப மனக் குழப்பத்திலும், துக்கத்திலும் மிதந்து கொண்டிருந்த என்னைச் சிரிக்கச் செய்து உலகத்தை மறக்கவும் செய்தது. நன்னூலைப் படித்திருப்பதனால் அல்லவோ இப்பயனை அடைந்தேன்?" என்று ராஜாஜி பதில் எழுதி யிருந்தார்.

நன்னூல் படித்ததினால் எனக்கும் ஒரு பயன், பெரிய பயன் கிட்டியது. ராஜாஜி அவர்களிடமிருந்து ஒரு கடிதம் பெறும் பாக்கியத்தை அடைந்தேன்.

"இலக்கணம் என்னும் பெருங் கஷ்டத்தில் நீ தவிக்கிறாய். நானும் உன்னைப் போலவே இலக்கணத்தில் சிறு வயதில் ரொம்பக் கஷ்டப்பட்டிருக்கிறேன். உனக்கு உள்ள தைரியம்கூட எனக்கு இருந்ததில்லை. அப்போது டி. கே. சி. என் பக்கத்தில் இருக்க வில்லை" என்று ராஜாஜி எழுதி யிருந்தார்.

எனக்குத் தைரியம் அளித்ததுபோல் இன்னும் எத்தனையோ குழந்தைகளுக்குத் தைரியம் அளித்து வந்த டி. கே. சி. மாமா போய் விட்டார்! என் பக்கத்தில் அவர் இப்போது இல்லை! கடிதம் எழுதி அனுப்பக் கூடிய இடத்திலும் இல்லை!

எங்கேதான் அவர் இப்போது இருக்கிறார்? என் உள்ளத்தில் பொங்கும் உணர்ச்சிகளை, இதயதாபங்களை அறிந்து கொள்ளக் கூடிய இடத்திலாவது அவர் இருப்பாரா?



பணத்தை
மிச்சப்
படுத்துங்கள்

சிரமத்தைக்
குறைத்துக்
கொள்ளுங்கள்





துணிகளை அதிக
நாட்கள் நீடிக்கச்
செய்யுங்கள்

**501** ஸோப்புகள்




எல்லா வீட்டு உபயோகங்களுக்கும்

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

மெம்பர், இந்தியன் சோப் & டாய்லட்ரீஸ் மேக்கர்ஸ் அஸோஸியேஷன்

மூன்று காரியங்களையும் சாதிப்பது கால்கேட் முறையே:

**உங்கள் வாய்த் துர்நாற்றத்தை** அகற்றுகையில்

**உங்கள் பற்களை சுத்தி செய்து**

**அவற்றை சொத்தையாகாமல் தடுக்கிறது**




---

# ஜாம்-பெக்கினல் அந்த விஷக்காயம், ரணம் அல்லது கட்டியை குணப்படுத்துங்கள்



# Zam-Buk

ஜாம்-பெக் உலகின் மகோன்னதமான சரும நோய்வாற்றும் களிம்பு. ஜாம்-பெக் சமனமூட்டி விஷத்தை அகற்றி துரிதமாக வேலை செய்கிறது. காயங்களிலிருந்து விஷத்தை ஜாம்-பெக் வெளியே இழுத்து எரிச்சலைக் குறைத்து சீ ஒழுக்கை நிறுத்தி, துரிதமாக சருமத்திற்கு ஆரோக்கியம் அளிக்கின்றது. தோலின் முதன்மையான சரும நோய்களை நீக்குவதிலும், பூச்சிக்கடி விஷத்தை சுத்தபடுத்துவதிலும், வலியுடன் சேர்வுற்று சொப்புளித்த கால்களுக்கு இதமளித்து குணமாக்குவதிலும் இதன் சக்தி அற்புதமானது. இதர மதிப்பு வாய்ந்த ஔஷதப் பொருள்களுடன் கூட ஜாம்-பெக்கின் கிளோசோரின்னும் அதன் நோய்வாற்றும் குணம், தசைநார் போஷாக்கு மற்றுமிதர குணங்களுடன் சேர்க்கப்பட்டுள்ளது.




மிருகக் கொழுப்பு சேரவில்லை என்பதற்கு உத்திரவாதம்.

ஜாம் - பெக்கினல் குணம் பெறுவீர்கள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

FZY-36 TAM.

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்




# 5

நாட்கள், வாரங்கள் சென்று மாதங்கள் பல கழிந்தன. சித்தமல்லி கிராமத்தில் ஒரு மாறுதலும் ஏற்படவில்லை. தேன்மொழி மட்டும் தினமும் தாமரைக் குளத்துக்கு வருவாள். பிறகு தென்னந் தோப்புக்குப் போவாள். தானும் இனியனும் சேர்ந்து உட்கார்ந்து பேசிச் சிரித்து விளையாடிய இடங்களை எல்லாம் ஏக்கம் நிறைந்த கண்களால் பார்ப்பாள். இனியன் தன்னைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறாரோ என்னவோ! இந்த ஏழையைப் பற்றி நினைப்பதற்கு என்ன இருக்கிறது என்று எண்ணிக்கொண்டே கன்னத்தில் கையை ஊன்றி உட்கார்ந்து இருப்பாள். அதையே எண்ணி நீண்ட பெருமூச்சு விடுவாள்.

அன்றும் அவள் இனியனைப் பற்றி நினைத்த வண்ணமே தாமரைக் குளத்து அரசமரத்து வேரில் அமர்ந்திருந்தாள். தாமரைக் குளத்தையும், தாமரை இலைகளில் தன் மனத்தைப் போல் ஊசலாடும் தண்ணீர்த் திவலைகளையும் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் உள்ளத்தில் ஏதோ ஒன்று, "இனியன் இன்று வருவார்; இன்று வருவார்" என்று சொல்லிக் கொண்டிருந்தது. அந்த இன்ப நினைவிலேயே அவள் தன்னை மறந்து அமைதியாக உட்கார்ந்திருந்தாள்.

மனிதர்கள் நடமாட்டம் இல்லாத அத் தாமரைக் குளம் சிரித்துக் கொண்டிருந்தது. சிறிய சிறிய அலைகள் கரையில் வந்து மெதுவாக மோதிக் கொண்டிருந்தன. குளத்தின் நடுவில் மீன்கள் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தன. தேன்மொழியின் உள்ளம் இனியனை எண்ணித் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தது.

அவள் அத்தை மகன் ரத்தினம் ஊரிலிருந்து வந்து அவள் வீட்டில் இருக்கிறான். அவன் என்னவோ அவள் வழிக்கு வருவதில்லைதான். இருந்தாலும் அவள் பெற்றோர்கள் மட்டும் அவனையும் அவளையும் சேர்த்துச் சேர்த்தே பேசிக் கொண்டிருந்தார்கள். அதைக் கேட்கும்போதெல்லாம் அவன் உற்சாகமாகவும், குதூகலமாகவும் இருந்தான். எல்லாரையும் போல அவன் தன்னைப் பற்றி நினைப்பதில்லை. அவன் தகப்பனார் உழுது பாடுபட்டுக் கஷ்டப்பட்டுப் படிக்க வைத்ததை அவன் எண்ணிப் பார்ப்பதில்லை. அப்பா செய்து வந்த விவசாயத்தை - உழவுத் தொழிலை பத்தாவது வரையில் படித்து விட்டுத் தான் செய்வது கேவலம் என்று கருதினான். பெரிய அதிகாரி போலக் கிராமத்தில்கூட மடிப்புக் கலையாத உடைகளையே அணிந்து கொண்டு திரிந்தான். ரத்தினத்தைப் பற்றிய நினைவு எழுந்ததும் தேன்மொழி ஒரு அலட்சியப் பெருமூச்சு விட்டாள்.

"அவனால் எனக்கு ஒரு கெடுதியும் இல்லை. அவன் என்னமோ பட்டணத்திலே வேலை பார்த்துக் கொண்டு பவுடர் பூசிக் கொள்ளும் படித்த பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளப் போவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறான். அந்த மாதிரி அவனுக்குக் கிடைத்து விட்டால்தான் நல்லது. இல்லாவிட்டால் என்னைப் பற்றி நினைத்தால்கூட நினைத்து விடுவான்" — தேன்மொழி தன் மனத்துக்குள் இப்படி யெல்லாம் நினைத்துக் கொண்டாள்.

தாமரைக் குளத்தின்மீது சில பறவைகள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. அவைகளைத் தவிர அங்கு வேறு ஆள் நடமாட்டமே இல்லை. சூரியனோ தன் பொன் கதிர்களைத் தாமரைக் குளத்தில் எய்து கொண்டே இருந்தான்.

இரண்டு பறவைகள் அரசமரத்துக் கிளையில் பயங்கரமாகச் சண்டை பிடித்துக் கொண்டிருந்தன; அதனால் அதன் சிறகுகள் பிய்ந்து பறந்தன. அந்தப் பறவைகளின் அலறல் சத்தம் தேன்மொழிக்குத் திகிலை உண்டாக்கியது. ஒன்றை யொன்று கொத்திக் கொண்டு கோபத்தினாலும் வலியினாலும் கத்தின. அதற்குமேல் அவளால் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டு தனியே உட்கார்ந்திருக்க முடியவில்லை.




தென்னந் தோப்புப் பக்கமாக எழுந்து செல்லலாம் என்று எண்ணித் தோப்புப் பக்கமாக நடந்தாள். தோப்புக்குள் இருந்த வைக்கோல் போரைப் பார்த்தாள். அவளுக்குப் பழைய இன்ப நினைவுகள் வந்து விட்டன. அந்த வைக்கோல் போரில் ஏறிக் காலை நீட்டிப் படுத்துக் கொண்டாள்.

“இனியன் மட்டும் இப்போது வந்தாரானால்” என்று மனதுக்குள் நினைத்தாள் தேன்மொழி. அவளுக்கு மீண்டும் தன் அத்தை மகன் ரத்தினத்தின் நினைவு வந்து விட்டது. “ரத்தினம் நல்லவன்தான். இருந்தாலும் சோம்பேறி. யாரைப் பார்த்தாலும் தான்தான் மேதாவி போலப் பேசிக்கொள்கிறான். எப்பொழுது பார்த்தாலும் ஏதாவது உபயோகமில்லாத பேச்சுக்களைப் பேசிக்கொண்டிருக்கிறான். ஆனாலும் நன்றாக வாட்டசாட்டமாகத்தான் இருக்கிறான். ஏதோ பத்தாவது வரையில் படித்துவிட்டு, பட்டணத்துக்குப் போய்விட்டு வந்து விட்டதாலேயே தன்னைப் பற்றிப் பெரிதாக நினைத்துக் கொண்டிருக்கிறான். இங்கே என்னமோ அவன் ரொம்ப நாளாக இருந்ததில்லைதான். இருந்தாலும் இந்த அப்பாவும் அம்மாவும் அவனைச் சுற்றிக் கொண்டு அலைகிறார்கள். தங்களுக்கு இந்த மாதிரி மருமகப் பிள்ளை கிடைக்காமல் போய்விடுமோ என்று பயந்து சாகிறார்கள். அதை நினைத்தால் தான் எனக்குக் கோபம் கோபமாக வருகிறது. அவனைப் பார்த்தாலே பிடிக்கவில்லை.”

இப்படியாகத் தேன்மொழி இனியனையும், ரத்தினத்தையும் பற்றி மாறி மாறி நினைத்தாள். ஆனால் இனியனைப் பற்றி நினைத்துக் கொண்டே அந்த வைக்கோல் போரில் வானத்தைப் பார்த்தவண்ணம் படுத்துக் கிடந்தாள். அவள் உள்ளத்தில் என்னென்னவோ எண்ணங்கள் தோன்றி மறைந்து கொண்டிருந்தன. அவள் உள்ளம் தூர, தொலைவில் உள்ள இனியனின் எழில் உருவத்தை எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தது. அப்படியே வைக்கோல் போர் மீது வெகு நேரம் படுத்துக் கிடந்தாள். அவள் கண்கள் சொக்கித் தாமாகவே மூடிக் கொண்டன. அடுத்த கணம் அவள் முன் இனியன் தோன்றினான். கையில் அழகான மலர் ஒன்றை வைத்துக் கொண்டிருந்தான்.

“இந்தத் தடவை நீங்கள் சொன்ன சொல்லைக் காப்பாற்றி விட்டீர்கள். சீக்கிரமே வந்து விட்டீர்கள்” என்றாள் தேன்மொழி.

“உன் அன்பு முகத்தைப் பார்க்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன். உடனே புறப்பட்டு வந்து விட்டேன்” என்றான் இனியன்.

தேன்மொழி அவன் பேசியதையும், அவன் கண்களையும் கூர்ந்து கவனித்தாள். அவன் முகமும் கண்களும்தான் எவ்வளவு அழகாக இருந்தன!

அவளை நெருங்கி வந்தான் அவன். “இந்தா, இந்த மலரை வாங்கிக் கொள்; என் அருகில் வா” என்று கையை நீட்டி அழைத்தான்.

தேன்மொழி தன் மலர்க் கரத்தை நீட்டி இனியனின் கையில் இருந்த மலரை வாங்கப் போனாள். வைக்கோல் போர் மீதிருந்து உருண்டு விழுந்தாள். அப்போதுதான் அவள் கண் அயர்ந்ததும், கனவு கண்டதும் நினைவுக்கு வந்தன.

சாலையில் “ஜல்ஜல்” என்று பண்ணையார்வீட்டு வில் வண்டியின் சதங்கைச் சத்தம் கேட்டது. தேன்மொழி வில் வண்டியைக் கூர்ந்து பார்த்தாள். வண்டிக்குள் இருப்பது யார் என்று தெரியவில்லை. வண்டி பண்ணையார் வீட்டை நோக்கி வேகமாகப் போய்க் கொண்டிருந்தது.

** ** **

மறு நாள் மாலை. மாலை வேளைகளில் தான் தேன்மொழி இனியனைச் சந்தித்து அவனுடன் சிரித்துப் பேசி மகிழ்வது வழக்கம்.

வயல் வெளிகள் எல்லாம் மாலை வெய்யிலில் மிருதுவாகக் காய்ந்து கொண்டிருந்தது. வயலில்



வரிசை வரிசையாக நெற்கதிர்கள் தங்க மயமாக மின்னின; காற்றினால் அவை அசைந்தன.

தென்னை மரங்களின் நிழல்கள் நீள நீளமாகக் கீழே விழுந்திருந்தன. மரங்களுக்கு மேலே ஓசையில்லாமல் பறவைக் கூட்டங்கள் ஒன்றன்பின் ஒன்றாகப் பறந்து சென்றன.

அறுவடையான வயல்களில் மாடுகள் மேய்ந்து கொண்டிருந்தன. மாடுகளின் 'ம்-ம்-மா' என்ற சத்தமும், கன்றுக் குட்டியின் இனிமையான கத்தலும் காற்றிலே தவழ்ந்து வந்தன.




எங்கும் ஒரே அமைதி. என்றுமில்லாத ஒளியுடன் சூரியன் காய்ந்து கொண்டிருந்தான்.

தாமரைக்குளத்து அரசமரத்து வேரில் தலையை வைத்துப் படுத்திருந்தாள் தேன்மொழி. மஞ்சள் நிறப் புடவை உடுத்தியிருந்தாள். கையில் எதையோ வைத்துச் சுழற்றிக் கொண்டு விஷமம் செய்து கொண்டிருந்தாள். அரச மரத்து இலைகளைப் பார்த்த வண்ணம் வலது காலைத் தரையில் ஊன்றிக் கொண்டு இடது காலைத்தரையில் நீட்டிய படி வானத்தில் மிதப்பதுபோல் படுத்துக் கிடந்தாள். அதனால் அவள் வலது கால் முழங்கால் வரை நன்றாகத் தெரிந்து கொண்டிருந்தது.

விவரிக்க முடியாத ஒரு இன்பத்தில் அவள் மூழ்கித் திளைத்துக் கொண்டிருந்தாள். அவள் அங்க அவயவங்களில் எல்லாம் ஒரு துடிப்பு. அடிக்கடி புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தாள். இப்பொழுது ஒரு கையைத் தலைக்கு முட்டுக் கொடுத்து ஒருக்களித்துப் படுத்துக் கொண்டாள். அவள் வாய் எதையோ முணு முணுத்தது.

திடீரென்று அவள் பாடத் தொடங்கினாள். அவள் குரலில் அளவு கடந்த ஏக்கம் தொனித்தது.

'' கண்ணிரண்டும் மூடிக்கொண்ட
கல்நெஞ்சக் காரரவர்
கண்ணிரண்டும் திறந்தென்னைக்
காணுவரோ இப்பிறப்பில் !''

அப்பொழுது அவளுடைய தலைக்குப் பின்னால் யாரோ நடந்துவரும் சத்தம் 'சலசல' வென்று கேட்டது. '' கண்ணிரண்டும் திறந்து கொண்டு உன்னை இப்பொழுதே காண வந்தேன் '' என்று யாரோ சொல்லுவது போல் கேட்டது.

தேன் மொழி பாட்டை நிறுத்தினாள். பதில் ஒன்றும் சொல்லாமல் ' சட் ' டென்று எழுந்து உட்கார்ந்தாள். அவள் கண்ணுக்கு எதிரில் ஒரு ஜோதி ஒளியைப் பார்த்தாள். அவளுக்கு எதிரில் இனியன் நின்று கொண்டிருந்தான். அவன் தோளில் கிடந்த துண்டையும் அதன் ஓரத்தில் இருந்த நீலக் கரையையும் பார்த்தாள். அவன் அணிந்திருந்த நீண்ட ஜிப்பாவைப் பார்த்தாள். பளபள வென்று சுருண்டு நின்ற அவன் கருங் குழலைப் பார்த்தாள். அது மாலை வெய்யிலில் 'பளீர் பளீர்' என்று மின்னிற்று. அதே மாதிரி அவன் அழகிய முகமும் கரு விழிகளும் மின்னின.

தேன்மொழி விழுங்கி விடுவது போல் அவனைப் பார்த்தாள்; பார்த்துக் கொண்டே இருந்தாள். சட்டென்று எழுந்தாள். நாணித் தலை குனிந்து நின்றாள். அவள் நாணி நிற்கும் அழகைக் கண்டு இனியன் புன்முறுவல் பூத்தான்.

'' ஏன் அப்படிப் பார்த்தாய் !'' என்றான்.

தேன்மொழி நாணத்தை உதறித் தள்ளிவிட்டு நிமிர்ந்து பார்த்தாள். '' நீங்கள் தான் என்னைப் பயமுறுத்தி விட்டீர்களே '' என்றாள்.

இனியன் இலேசாகச் சிரித்தான். '' அதற்குள் நான் அவ்வளவு பயங்கரமாகவா உருமாறி இருக்கிறேன்'' என்றான்.

'' இல்லை. நான் பாடிக் கொண்டிருக்கும் போதே, திடீரென்று உங்கள் பதிலைக் கேட்டு பயந்து விட்டேன்.''

'' நான் என்ன கல் நெஞ்சக் காரனா !'' என்று கேட்டான்.

தேன்மொழி கால் கட்டை விரலால் பூமியைக் கிளறிக் கொண்டே பதில் சொல்லாமல் தலையைக் குனிந்த வண்ணம் நின்று கொண்டிருந்தாள்.

இனியன் குனிந்து அவள் முகத்தைப் பார்க்க முயன்றான். அவள் தோளில் இருந்த துண்டு நழுவிக் கீழே விழுந்தது.

"இந்தத் துண்டு ரொம்ப அழகாக இருக்கிறது" என்று சொல்லிக் கொண்டே அந்தத் துண்டைக் குனிந்து எடுத்தான்.

"உனக்கு இந்தத் துண்டு வேண்டுமா!"

"நான் இந்தத் துண்டை வைத்துக் கொண்டு என்ன செய்வது!"

"இப்படிப் போட்டுக் கொள்வது" என்று துண்டை எடுத்துத் தேன்மொழியின் தோளில் தாவணியைப் போல் சுற்றிப் போட்டான்.

தேன்மொழிக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது. இனியனின் தைரியத்தைக் கண்டு வியந்தாள். இப்படித் துண்டைத் தன் தோள்மீது போட்டதற்காக ஏதாவது சொல்ல வேண்டும் என்று துடித்தாள். ஆனால் அந்த முகம், துண்டு எல்லாவற்றையும் பார்த்ததும் அவளுக்குப் புன்னகைதான் வந்தது. இனியனைப் பார்த்துச் சிரித்தாள்.

"நீ என்ன பாடிக் கொண்டிருந்தாய்!" என்று ஆசையோடு கேட்டான் இனியன்.

தேன்மொழிக்கு என்ன பதில் சொல்லுவது என்றே தெரியவில்லை. அவளுக்கு வெட்கமாக இருந்தது. மீண்டும் தலையைக் குனிந்து கொண்டு தரையைக் காலால் கீற ஆரம்பித்து விட்டாள்.

"எங்கே அந்தக் 'கல் நெஞ்சக்காரர்' என்ற பாட்டை இன்னொரு தரம் பாடேன்!"

"பாட்டு இப்பொழுது மறந்து விட்டது."

"அதற்குள்ளாகவா!"

"ஆமாம்" என்று கடைக்கண்ணால் இனியனைப் பார்த்தாள் தேன்மொழி.

இனியன் தன் கையை நீட்டித் தேன்மொழியின் மலர்க் கரத்தைப் பற்றினான். அவளும் தன் கையை அவன் பலம் பொருந்திய கையோடு சேர்த்துக் கொண்டாள். இருவரும் தென்னந் தோப்புக்கு வந்தார்கள். வைக்கோல் போருக்கு அடியில் நெருக்கமாக உட்கார்ந்தார்கள்.

"உன்னுடைய சிவப்புப் பசு ரொம்ப இளைத்திருக்கிறதே!" என்றான் இனியன்.

"பசு இருக்கட்டும்; நீங்கள் கூடத்தான் ரொம்பவும் இளைத்துப் போய்விட்டீர்கள்!"

"உண்மையாகவா!"

"ஆமாம்."

"உன்னைப் பார்க்காமல் உன் இனிய பேச்சைக் கேட்காமல் இருந்ததால்தானோ என்னமோ!"

"நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்!"

"நேற்றைய தினம்."

"நேற்று உங்கள் வீட்டு வில் வண்டி போனதைப் பார்த்தேன். அதற்குள்ளே நீங்கள்தான் உட்கார்ந்திருந்தீர்களோ!"

"ஆமாம்!" என்றான் இனியன். அவளைக் கடைக் கண்ணால் பார்த்துச் சிரித்தான்.

தேன்மொழியின் முகம் சிவந்தது. தலையைக் குனிந்து கொண்டே புன்னகை புரிந்த வண்ணம் பாதி திறந்த கண்களால் இனியனைப் பார்த்தாள்.

தோட்டத்து வேலிப் படலை யாரோ திறக்கும் சத்தம் கேட்டது. இனியனும் தேன்மொழியும் அங்கு பார்த்தனர். ஒரு பெரியவர் வாலிபன் ஒருவனுடன் வந்து கொண்டிருந்தார்.

"அதோ தாத்தா வருகிறார்கள். அவர்களுடன் வருகிறவர் என் அத்தை மகன் ரத்தினம்" என்று சொல்லிவிட்டு "தாத்தா!" என்று கூப்பிட்டுக் கொண்டே தேன்மொழி எழுந்து சென்றாள்.

"தேன்மொழி! இனியன் இருக்கிறானா அம்மா."

"வைக்கோல் போருக்கு அந்தப் பக்கமாக உட்கார்ந்து இருந்தார் தாத்தா."

"நாழியாகி விட்டது. நீ வீட்டுக்குப் போ அம்மா, நாங்கள் பிறகு வருகிறோம்" என்றார் தாத்தா.

"இந்த வேளையில் இவர்கள் எங்கே வந்தார்கள்!" என்று முணு முணுத்துக் கொண்டே தேன்மொழி வீட்டைத் தேடிச் சென்றாள்.

அதற்குள் இனியன் அங்கு வந்தான் "வணக்கம் தாத்தா, வாருங்கள்" என்று பெரியவரை முகம் மலரக் கை கூப்பி வரவேற்றான்.

தேன்மொழி சட்டென்று திரும்பி இனியனைப் பார்த்துச் சிரித்து விட்டுச் சென்றாள்.

"இவன்தான் என் பேரன். நான் முன்பு உங்களிடம் வேலைக்குச் சிபாரிசு செய்யச் சொன்னேனே அந்தப் பையன்" என்றார் கிழவர்.

ரத்தினம் இனியனைப் பார்த்துக் கைகூப்பி வணங்கினான். இனியனும் வணங்கினான்.

மூவரும் வைக்கோல் போருக்கு அடியில் போய்ச் சாவதானமாக அமர்ந்தனர்.

"இவன் வேலை விஷயமாக" என்று மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தார் கிழவர்.

"ஓகோ, அப்படியா! ரத்தினத்துக்குச் சொந்தமாக நிலம் கிடையாதோ!"

"இரண்டு வேலி நிலம் இருக்கிறது."

"இரண்டு வேலி நிலம் இருக்கிறதா! அதை வைத்துக்கொண்டா வேறு வேலை வேணுமென்று தேடுகிறாய்!" என்று ரத்தினத்தைப் பார்த்துக் கேட்டான் இனியன்.

இனியனின் பரந்த தோள்களும், பளபளக்கும் தலைமயிரும், அன்பும் கருணையும் தவழும் முகமும், அகன்ற கருநீலக் கண்களும் ரத்தினத்துக்கு ஒரு உற்சாக உணர்ச்சியை ஊட்டிற்று. அவன் இனியனைக் கூர்ந்து பார்த்தான். நல்லெண்ணத்தோடும் நம்பிக்கையோடும் பார்த்தான்.

"நிலத்தில் பாடுபட்டு என்ன பலனைக் காண முடியும்! சர்க்கார் வேலை என்றால் மாதம் பிறந்தால் சம்பளம் கிடைக்கும். சுகமாகக் காலத்தைத் தள்ளிக்கொண்டிருக்கலாம்" என்றான்.

"உழவின் பெருமையைப் பற்றி நீ அறியவில்லை. உன் தந்தை உழவுத் தொழிலில் ஈடுபட்டுத்தானே உன்னைப் படிக்க வைத்திருக்கிறார்! படித்த பையனை நீ, உன் படிப்பு ஞானத்தையும் உழவுத் தொழிலில் ஈடுபடுத்தி உன் தந்தைக்கு உதவியாக இருந்தால் நீ நினைக்கும் சர்க்கார் உத்தியோகத்தை விட இது நூறு மடங்கு மேல் அல்லவா! சுதந்திரமாக இருக்கலாமே!" என்றான் இனியன்.

"நீங்கள் சொல்லுவதெல்லாம் நன்றாகத்தான் இருக்கிறது. எனக்கு விவசாயத்தைப் பற்றி ஒன்

## அமரர் ரஸிகமணி

அருவிமலைச் சாரலிலே சின்னாள் முன்னர்
ஆருடைய தமிழ்ப்பணியை அறிந்துபோற்றி
ஒருபெரிய விழாநடத்தி னோமே அந்த
உயர்மேதை "டி.கே.சி." உயிர் போயிந்த
பருவுடலை நாமிழந்தோம்! தமிழகத்துப்
பண்பாட்டின் சின்னத்தைப் பறிகொடுத்தோம்!
இருநிலத்தில் கவிரசனை இயங்கு மட்டும்
ரசிகமணி பேர்மறக்க இயல்வ தாமோ?

—புத்தனேரி – ரா. சுப்பிரமணியன்

றுமே தெரியாதே. அத்துடன் நான் வேலை செய்தே பழக்கமில்லையே. என்ன செய்வேன்!''

"நீ இன்னும் வாலிபன் தானே! தாத்தாவைப் போல் வயதாகிவிட வில்லையே! நீ தைரியமாக வயல் வெளிக்குப் போய் உன் தந்தையுடன் கூட்டாக இருந்து அவருக்கு உதவி செய். நாளடைவில் உனக்குப் பழக்கமாகி விடும். உன்னால் உன் கிராமமே முன்னுக்கு வரலாம். அது நாட்டுக்கு நல்லது'' என்றான் இனியன்.

ரத்தினம் சுற்றுமுற்றும் பார்த்தான். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. அவனுக்கு உள்ளூறத் தான் படித்துப் பட்டம் பெற்றிருப்பதைப் பாராட்டுவதை விட்டு, வேலை செய்யாமல் இருப்பதை இடித்துக் காட்டித் தன்னை அவமதிப்பதாக நினைத்தான். கோபத்தால் குமுறினான். இனியனை மனத்துக்குள் சபித்துக் கொண்டான். இப்போது இனியன் மேல் ஒருவகை வெறுப்புக் கூட அவனுக்கு உண்டாகி விட்டது. ஏனெனில் அவனுடைய திடமான பேச்சு, ஆஜானுபாகுவான உருவம், வசதியான குடும்பம் எல்லாமாகச் சேர்ந்து அவன் உள்ளத்தில் பொறாமையைக் கிண்டி விட்டது. எப்படியாவது அங்கிருந்து கிளம்பிவிட வேண்டும் என்று நினைத்தான்.

"எனக்கு இன்று காலையிலிருந்தே தலைவலி. இப்பொழுது ரொம்ப அதிகமாக இருக்கிறது; தாங்க முடியவில்லை. நாளைக்கு வந்து மீண்டும் உங்களைப் பார்க்கிறேன்'' என்றான்.

"ஓ! அப்படியே செய்யலாமே. தலைவலிக்கு இப்பொழுது என்ன செய்யப் போகிறாய்!'' என்று கேட்டான் இனியன்.

"தம்பி! அவன் இங்கிருந்து போய் வீட்டில் படுத்து விட்டாலே அவனுக்குத் தலைவலி போய் விடும்'' என்றார் கிழவர். அவருக்கு அவன் விஷயம் புரிந்து விட்டது. "சரி, சரி! போய்வா! நான் பிறகு வருகிறேன்'' என்று ரத்தினத்தைப் பார்த்துச் சொன்னார். அவர் குரலில் இருந்து அவர் அவனைப்பற்றி நன்றாக அறிந்து வைத்திருக்கிறார் என்பது தெரிந்தது.

ரத்தினம் இதுதான் சமயம் என்று அவர்கள் இருவரிடமும் விடை பெற்றுக் கொண்டான்.

சிறிது நேரம் அங்கு மௌனம் நிலவி யிருந்தது. இனியனும் கிழவரும் பேசாமல் உட்கார்ந்திருந்தனர். கிழவரின் முகத்தில் ஓர் ஒளி பரவியிருந்தது. கிராம வாழ்வைப் பற்றிய பெருமிதம் அவருடைய மௌனத்திலே பொங்கிப் பொங்கி எழுவதாகத் தெரிந்தது.

கிழவரின் மனத் திரையில் பல வருஷங்களுக்கு முன்னால் அவர் வாலிப வயதில் நடந்த கடந்த

**விரைந்தாயோ டி. கே. சி.**

குற்றால நீர் அருவி
குளிர் புனலைச் சூடாக்கி
வற்றாத கண் ணீராய்
வடித்ததுவோ நின்பிரிவால்

கருத்தமைந்த சொல்லழகால்
"கம்பர் தரும் காட்சி"யதை
பொருத்தமுடன் எமக்கீந்த
பூமானே மறைந்தாயோ!

—கோ. கந்தசாமி

களும், சுகந்த மணமும் அவர் செவியில் மோதி, மூக்கைத் துளைத்துக் கொண்டிருந்தன. இந்த மாதிரியான இன்பம் உழவுத் தொழிலை விட வேறு தொழிலில் கிடைக்குமா! உழவனின் வாழ்க்கைதான் பரி பூரண வாழ்க்கை; இன்ப கரமான வாழ்க்கை என்று நினைத்தார்.

"தாத்தா! ஏதோ பழைய காலத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறாப் போலிருக்கிறது'' என்றான் இனியன்.

திடீரென்று சுற்றிலும் சுறுசுறுப்பாகத் தம் பார்வையைச் செலுத்தினார்! "ஆமாம். இந்த உழவுத் தொழிலின் பெருமையை எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தேன். அதன் அருமை இதில் பாடு பட்டு உழைப்பவர்களுக்குத்தான் தெரியும். சோம்பேறி ரத்தினம் அதை எங்கே உணரப் போகிறான்!'' என்றார்.

"'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' என்று வள்ளுவர் சும்மாவா சொன்னார்! அதுதான் சிறந்த வாழ்க்கை'' என்றான் இனியன்.

"இந்தச் சோம்பேறிக்குக் கொண்டு போய்த் தேன்மொழியைக் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்கிறார்களே, என்பதை நினைத்தால்தான் எனக்குத் தாங்க முடியவில்லை, தம்பி. அவள் தங்கமான பெண்!'' என்றார் கிழவர்.

இதைக் கேட்ட இனியன் திடுக்கிட்டான். திடீரென்று தன் தலையில் ஏதோ தாக்கியதைப் போல வேதனைப் பட்டான். அவன் இதயத்தில்

தான். "தாத்தா! நேற்று ஊரிலிருந்து வந்ததி லிருந்தே எனக்கு உடம்பு ஒரு மாதிரியாக இருக் கிறது. நான் இன்னும் பல நாட்கள் இங்கேயே தான் இருக்கப் போகிறேன். பிறகு பார்க்க லாமா!" என்றான். அங்கிருந்து போவதற்கு விடை பெற்றுக் கொண்டு எழுந்தான்.

கிழவர் "காரியம் ஆகிவிட்டது தம்பி! நன் ருகத் தூங்கினால் எல்லாம் சரியாகி விடும்" என் ருர். அவனுடனேயே அவரும் கிளம்பினார்.

** ** **

இனியனின் வீட்டில் அவன் அன்னையும் தந்தையும் நெருங்கி உட்கார்ந்து பேசிக் கொண்டி ருந்தனர். இனியனின் திருமண விஷயமாக அன்னை பேச்சை ஆரம்பித்ததும் இனியனின் தந்தை தம் பெரிய கண்களால் தூரத் தொலைவில் எதையோ உற்றுப் பார்க்க ஆரம்பித்து விட் டார். அவருடைய கம்பீரமான முகத்தில் சிந்தனை தேங்கி, தடைப்பட்டு நின்றது.

"இனியன் திருமணக் கோலத்தைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆசையாக இருக்கிறது. சீக்கிரம் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள்!" என்றாள் அன்னை.

"ஆமாம். எனக்கும்தான் ஆசையாக இருக் கிறது" என்று சிந்தனையில் ஆழ்ந்தபடியே சொன் னார் தந்தை. ஆனால் திடீரென்று கையில் இருந்த ஏதோ ஒன்றை எறிந்து விட்டவர் போல் நிதான மாகப் பேசலானார். "அவனுக்கு ஏற்ற பெண்; நம் குடும்ப அந்தஸ்துக்கு ஏற்ற பெண் உன் அண் ணன் வீட்டில்தான் இருக்கிறாள். ஆனால் அந்த மனிதர் இது சம்பந்தமாக என்றைக்காவது பேசு வாரா என்று பார்க்கிறேன். வாயைத் திறக்க மாட்டேன் என்கிறாரே" என்றார்.

"அண்ணா எப்படிப் பேசுவார்! நீங்கள்தான் முதலில் கேட்கவேணும்" என்று தன் அண்ண னுக்குப் பரிந்து கொண்டு வந்தாள் அன்னை.

"ஆனால் ஒன்று. இனியனைக் கலந்து கொண்டு தான் எதற்கும் ஏற்பாடு செய்யலாம் என்று இருக்கிறேன். நான் ஒரு போதும் அவன் எண் ணத்துக்குத் தடையாக இருக்க முடியாது. என் னால் அவனைக் கட்டுப்படுத்தவும் முடியாது. எந்த நிமிஷத்திலும் அவன் யதேச்சையாக இருப் பான். நான் அவன் தந்தை என்பதில் ஆட்சேப மில்லை. ஆனாலும் நான் அவனுக்கு இது விஷயத் தில் தோழனைப் போல்தான் நடந்து கொள்ளப் போகிறேன். மற்றவர்களைப் போல் என் சொல் படித்தான் நடக்க வேண்டும் என்று கண்டிக்கும் தகப்பனாக நான் இருக்க விரும்பவில்லை. அவனுக் கும் அது தெரியும்" என்றார் தந்தை.

அவருடைய கருத்து அன்னைக்குப் புரிந்தது. அவர் உண்மையாகத்தான் பேசினார். பேசியபடி நடக்கும் ஆற்றலும் படைத்தவர்தான். ஆனால் தன் அண்ணன் மகளை மணம் புரிந்து கொள்ளும் படி இனியனிடம் சொல்ல வேண்டும். அதற்குத் தன் அண்ணனும் இணங்கி வரவேண்டும். அதற் குள் தந்தையும் மகனும் விரோதமாக ஒன்றும் செய்துவிடக் கூடாதே என்று கவலைப்பட்டாள்.

"கல்யாணம் என்பது ஆயிரம் காலத்துப் பயிர். எங்கள் வீட்டுப் பரம்பரை உறவு அற்றுப் போகாமல் நீங்கள் எந்த ஏற்பாடு செய்தாலும் சரிதான்!" என்று அன்னை சிரித்துக் கொண்டே சொன்னாள். அவள் குரல் வழக்கத்தைவிட மிகவும் மென்மையாக இருந்தது.

பின்பு வெகு நேரம் வரை அவர்கள் இருவரும் மௌனமாக இருந்தார்கள். அவர்கள் இருவரைத் தவிர அந்தக் கூடத்தில் வேறு யாருமில்லை. இருவரும் தங்கள் குமாரனைப் பற்றியே சிந்தித்துக் கொண்டு, மோனத்தில் ஆழ்ந்திருப்பது போலவே அசையாமல் அமர்ந்திருந்தார்கள்.

இனியன் வேகமாக உள்ளே வந்தான். அவன் மிகுந்த களைப்புடன் காணப்பட்டான். தன் தந்தையையும் தாயையும் கண்டதும் அவனுக்கு உடனே தேன் மொழியைப் பற்றிச் சொல்லி அவளுக்கும் தனக்கும் திருமணத்துக்கு ஏற்பாடு செய்யச் சொல்ல வேண்டும்போல் தோன்றியது. ஆனால் அதை அடக்கிக் கொண்டான். அவர் களுக்கு மத்தியில் போய் அமர்ந்தான். அவன் உள்ளத்தில் என்ன என்னவோ சிந்தனைகள் குமு றிக் கொண்டிருந்தன. அழுகையும் ஆத்திரமுமாக வந்தது. சிறு குழந்தை போல அழுதால்கூடத் தேவலாம் போல் தோன்றியது.

இந்தச் சமயத்தில் "சாப்பாடு போட்டிருக் கிறேன்" என்றான் சமையற்காரன்.

"இனியா! எழுந்திரு சாப்பிடலாம். உன் னிடம் ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றிச் சொல்லவேணும்!" என்றார் தந்தை.

இனியன் எழுந்திருந்து தன் தந்தைக்குப் பின்னால் சென்று கொண்டிருந்தான்.

அன்னை மெதுவாக அவனுடைய கல்யாண விஷயமாகப் பேச்சை ஆரம்பித்து, நேரே அதைப் பற்றிச் சொல்லாமல் அதற்கு வேண்டிய சூழ்நிலையை ஏற்படுத்த முயன்றாள். ஒரு தரம் தொண்டையைக் கனைத்துக் கொண்டாள். "தேன்மொழிக்கு இந்த வருஷத்தில் கல்யாணம் நடக்கப் போகிறது. அவள் அத்தை மகள் ரத்தினத்துக்கே அவளைக் கொடுக்கப் போகிறார் களாம்" என்றாள்.

இது இனியனுக்கு காராசம் போலிருந்தது. அந்தப் பேச்சைக் கேட்க முடியாமல்தான் அவன் கிழவரை விட்டுப் பிரிந்து வீட்டுக்கு வந்தான். வீட்டிலும் அதே பேச்சைக் கேட்ட போது அவனுக்கு என்ன செய்வது என்றே புரிய வில்லை. அவனுக்குத் தன் தாய் தந்தை முதலியவர்களைப் பார்க்கக்கூட அப்பொழுது பிடிக்க வில்லை. அதைப் பற்றி மேலும் ஏதாவது பேசுவார்களோ என்று பயந்தான். அதை யெல்லாம் கேட்காமல் சற்று நேரம் எங்கேயாவது தனியே இருந்தால்தான் தேவலாம் போலிருந்தது. அவனுக்கு உணவில் விருப்பம் கொள்ள வில்லை. மெதுவாகத் தன் அன்னையைக் கூப்பிட்டான். "அம்மா! எனக்குப் பசிக்கவில்லை. இரவு சாப்பாடு வேண்டாம்" என்று சொல்லி விட்டு இனியன் தன் அறைக்குள் சென்றான். அறைக் கதவை உட் பக்கத் தாள் இட்டுக் கொண்டான்.

அன்னைக்கும் தந்தைக்கும் ஒன்றும் தோன்ற வில்லை. ஒரு கணம் அப்படியே திகைத்து நின்று விட்டார்கள். மறு கணம் தந்தை "இன்று எனக்குக்கூட என்னமோ போல்தான் இருக் கிறது" என்றார். தனக்கும் சாப்பாடு வேண் டாம் என்று சொல்லி விட்டார். அன்னை மட்டும் தனியாகச் சாப்பாட்டு அறைக்குள் சென்றாள்.

இனியன் தன்னுடைய அறையில் அமைதி யில் லாமல் தவித்துக் கொண்டிருந்தான். குறுக்கும் நெடுக்குமாக அலைந்து கொண்டிருந்தான்.

தூரத்தில் இடி இடித்துக் கொண்டிருந்தது. அது கொஞ்சம் கொஞ்சமாக அருகே கேட்டது. பெரும் மழைத் துளிகள் விழத் தொடங்கின. கண்ணைப் பறிக்கும் மின்னல் அவ்வப்போது பளிச்சிட்டது. இனியனின் மனத்தில் எழுந்த உணர்ச்சியைப் புலப்படுத்துவது போல இருந்தது அந்தக் காட்சி. (தொடரும்)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras 10.

# நாள் முழுவதும்

காலை வேளையில்





# புத்துணர்ச்சி

பிற்பகலில்





# அளிக்க...

இரவில்








குளுமையான நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கே பௌடர்களை உபயோகியுங்கள்

இரண்டு நேர்த்தியான கிராஸ்மித் தயாரிப்புகள்

ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ணநிலைகளிலும்
சருமத்தைப் பாதுகாக்கிறது.



HBP. 10-50 TM

கிராஸ்மித் கம். லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தவை

REGD. NO. M. 4392

*Registered as a newspaper in ceylon*